# எங்கள் நேரு

உலகத்தின் பல பகுதியிலுள்ள அறிஞர்
பலர் நேருஜியைப் பற்றி
எழுதியுள்ள கட்டுரைகள்

தொகுத்தவர் :

பி. டி. தாண்டன்

தமிழாக்கியவர் :

ரா. நடராசன்



நவயுகப் பிரசுராலயம்
135, பவழக்காரத் தெரு, சென்னை-1

# சில வார்த்தைகள்

இந்நூலைப் பொதுமக்களுக்குச் சமர்ப்பிப்பதில் பெரு மகிழ்ச்சியடைகிறோம். ஜவாஹர்லால்நேருவை உலகமக்கள் யாவரும் அறிவர். அப்படிப் பார்க்கும்போது, நீங்கள் எந்நாட்டவராயிருப்பினும் அவர் உங்களுக்கு அறிமுக மானவராக இருக்கிறார். ஆகையினால்தான் இந்நூலின் பெயரும் 'எங்கள் நேரு' எனக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்நூலை இன்னும் சிறப்பாகக் கொண்டுவர வேண்டு மென்று நினைத்தோம்; இயலாதது குறித்து வருந்துகிறோம்.

காந்திஜீயிடமிருந்து இதற்கொரு முன்னுரை பெற வேண்டி ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட்டை அணுகி னோம். அதிர்ஷ்டவசமாகக் காந்திஜியும் சம்மதித்தார். அவருடைய வார்த்தைகளே இந்நூலை நன்கு அறிமுகம் செய்து வைத்து, ஜவாஹரின் வாழ்விலும், அவர் மனித சமுதாயத்துக் களித்துள்ள செய்தியிலும் பொதிந்துகிடக் கும் ஆழ்ந்தபொருளை உணரவைக்கும். ரவீந்திரநாத தாகூரின் பாராட்டுரை, இந்தியாவே, தனது உன்னதக் கவிஞன் மூலமாக, ஜவாஹரைப் பாராட்டிய பாராட்டா கும். ரவீந்திரரின் பேச்சுக்களில் இப்பகுதி யிருக்கக்கண்டு நன்றியும் மகிழ்ச்சியும் நிறைகிறோம். ஜவாஹர்லாலின் அயல்நாட்டு நண்பர்கள் மனமுவந்தளித்த பாராட்டுகள் இந்நூலுக்கு அழகும் உண்மையான சர்வதேசியத் தன்மை யும் அளிக்கின்றன.

கிருபளானியின் ஒத்துழைப்புக்கு நாங்கள் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம். அலகாபாத் சர்வகலாசாலையின் ஆங்கிலப் பேராசிரியர், டாக்டர் பி. இ. தஸ்தூர் அவர் களும், என் தலைவரும் லட்சுமணபுரி "நேஷனல் ஹெரால்டு" பத்திரிகாசிரியருமாகிய திரு கே. ராமராவ் அவர்களும் இம்முயற்சிக்குப் பெரிதும் ஆதரவளித்து, இதில் தவறுகள் நேராவண்ணம் நல்லயோசனைகள் கூறிய தற்கு எங்களது மனமார்ந்த நன்றி. ஆனால் இதில் இன்னும் சில குறைகள் இருக்கின்றன. இதற்கு ஆசிரியரே பொறுப்பாளி.

இம்முயற்சியில் ஸ்ரீமதி விஜலட்சுமி பண்டிட்டும் ஸ்ரீமதி மிருதுலா சாராபாயும் மிகுந்த ஊக்கம் காட்டினுர்கள். பண்டித எஸ். டி. உபாத்யாயாவும் திரு ஐ. என். ஐஸ்ஸானியும் அருமையான போட்டோக்கள் அளித்துதவினர். அவர்களுடைய தாராள உதவிக்கு வந்தனம் செலுத்துகிறேம். புகழ்பெற்ற அரசியல் வாதிகளும் எழுத்தாளர்களும் இந்நூலுக்குப் பரந்த நெருங்கிய உறவுத் தன்மை அளித்ததற்குப் பெரிதும் மகிழ்கிறேம்.

—பி. டி. தாண்டன்

# பதிப்பாளர் குறிப்பு

நேருஜியைப் பற்றி வெவ்வேறு நாட்டின் அறிஞர் பலர் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல். அவர்கள் ஒவ்வொருவரும் தாங்கள் கண்ட நேருஜியை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறுர்கள். ஒவ்வொருவரும் தங்களுக்கே உரித்தான தனி நடையில் எழுதியிருப்பது இப் புத்தகத்திற்குச் சிறப்பளிக்கிறது. இப்புத்தகத்தை இன்னும் சிறந்ததாக 'ஆக்குவது இதற்கு நம் தேசத் தந்தை காந்தியடிகள் எழுதியுள்ள முன்னுரை யாகும்.

ஆங்கிலத்தில் வெளிவந்த இப்புத்தகத்தைத் தமிழாக்கி வெளியிட உரிமை தந்த ஸ்ரீ பி. டி. தாண்டன் அவர்களுக்கும் இதை நன்கு தமிழாக்கித் தந்த நண்பர் ரா. நடராசன் அவர்களுக்கும் எங்கள் உளங்கனிந்த நன்றி. 'நேருஜியின் பிறந்த நாளன்று இந்நூல் வெளிவருவது குறித்து மகிழ்கிறேம்.

சென்னை
1954

பதிப்பாளர்கள்

# காந்திஜியின் முன்னுரை

பண்டித ஜவாஹர்லாலை வியந்து பாராட்டுகிற அனேகருடைய கட்டுரைகளிலிருந்து ஸ்ரீ பி. டி. தாண்டன் அவர்களால் செம்மையாகத் திரட்டப்பட்ட ஒரு தொகுதி இது. வெவ்வேறு கண்களுக்கு இந்தத் தேசபக்தர் எவ்வாறு தோன்றுகிருரென்று இத்தொகுதி நன்ருகப் படம் பிடித்துக் காட்டுகிறதென்பது ஒரு முறை இப் புத்தகத்தைப் புரட்டிப் பார்த்ததுமே புலப்படுகிறது. தகப்பன், சகோதரன், எழுத்தாளன், பிரயாணி, தேசபக்தன், சர்வதேசியவாதி ஆகிய எந்த நிலையில் பார்த்தாலும் இவர் நன்கு பிரகாசிக்கிருர். இருப்பினும், தமது நாட்டின்மீதும் அதன் விடுதலையிலும் மிகுந்த ஆர்வமுள்ளவராகவும் விடுதலைப் பலிபீடத்தில் தம் மற்றக் காதல்களை எல்லாம் தியாகம் செய்பவராகவும் இவர் சிறந்து விளங்குவதை இக்கட்டுரைகளிலிருந்து வாசகர் தெளியலாம். ஆனல், பிறிதொரு நாட்டின் விடுதலைக்கு உலைவைப்பதன்மூலம் தமது நாட்டு விடுதலையைப் பெறுவது தன் கண்ணியத்துக்குக் குறைவென்று கருதும் பெருமைக்குரியவர் என்பதையும் சொல்லியாகவேண்டும். இவருடைய தேசியம், இவருடைய சர்வதேசியத்துக்கு நிகரானது.

**மோ. க. காந்தி**

14. ஒரு அரசியல் முரண்பாடு
—கே. ஆர். கிருபளானி ... 121

15. பழக்கமும் பாராட்டும்
—ஸ்ரீ பிரகாசா ... 131

16. பற்றற்ற நேரு
—பாரதி சாராபாய் ... 143

17. நேருவும் ஹெராஸ்டும்
—கே. ராமராவ் ... 150

18. இளமைப் பருவம்
—மோகன்லால் நேரு ... 163

19. பறக்கும் சுதந்தரத் தூதன்
—எஸ். முகம்மது ஜாபர் கான் ... 166

20. ஜவாஹரின் இணைப்பு
—அசோக் மேத்தா ... 171

21. ஜவாஹர்லால் நேரு
—பூர்ணிமா பானர்ஜி ... 179

22. ஜவாஹர்லாலும் காங்கிரஸ் ஒற்றுமையும்
—ஒரு காங்கிரஸ் சோஷலிஸ்டு .. 190

23. உலகப் பிரஜை
—ஹோரஸ் அலெக்ஸாந்தர் ... 195

24. அர்ப்பணம் செய்தவர்
—சிக்ரிட் பீட்டர்ஸன் கௌல்டு ... 200

25. பொது அபிப்பிராயம்
—பேஸில் மாத்யூஸ் ... 204

26. இந்தியாவின் நேருவும் நேருவின் இந்தியாவும்
—கந்தர் தம்பதிகள் ... 210

27. பழைய நினைவுகள்
—விஜயலட்சுமி பண்டிட் ... 233

28. தன் ஓவியம் ... 235

# இந்தியாவின் வஸந்த மன்னன்

**ரவீந்திரநாத் தாகூர்**

இளம் பாரதத்தின் அரியாசனம் ஜவாஹர்லாலுக்கே உரிய தென்பதில் ஐயமில்லை. அவருடைய வாழ்வு ராஜ கம்பீரமானது; அவரது உறுதி அசையாதது. அவரது தீரம் பின்வாங்காதது; அறவழி பிறழாமையும் அறிவாண்மையும் அவரைக் குன்றின் மேலிட்ட விளக்கென உயர்த்துகின்றன. அரசியல் கொந்தளிப்பு மிகுந்துள்ள காலத்தில் பிறரை மோசம் செய்வதும் தன்னை ஏமாற்றிக் கொள்வதுமாகிய காரியங்கள் பெருகி நேர்மையை இருக்கிற இடம் தெரியாமல் அடித்துவிடுகின்றன. அப்படிப்பட்ட கொந்தளிப்பின் மத்தியிலிருந்துகொண்டும் இவர் தூய்மையைக் கடைப்பிடித்து வருகிறார். உண்மையைக் கடைப்பிடிப்பதன் காரணமாக, தம்மை ஆபத்துத் தொடருவது கண்டும் உண்மையைக் கைவிடவில்லை. பொய்மையோடு கைகோத்து உறவு கொள்வது எளிதாயிருந்தபோதும் அவ்வாறு அவர் செய்யவில்லை. ராஜதந்திரமாகச் செல்வது எளிது. எவ்வளவுக்கு அது எளிதோ அவ்வளவுக்கு அற்பத்தனமானதும்கூட. அறிவொளி கதிர் வீசும் ஜவாஹரின் மனம் அவ்வழியைப் பகிரங்கமாக அருவருத்து ஒதுக்கிவிட்டது. மாசற்ற நோக்கம், உண்மையினின்றும் பிறழாமை ஆகியவையேவிடுதலைப் போருக்கு ஜவாஹர் அளித்த அணிகலன்கள். இன்று நமக்கு இளவேனில் (வஸந்த ருது) திருநாள். உதிர்ந்து விழும் சருகுகளுக்கு மத்தியில் புது

வாழ்வு முளைக்கவும், சாவை வென்ற கோலாகல வெற்றி யைக் கொண்டாடவும், இயற்கை ஆயத்தம் செய்துகொண் டிருக்கிறது. புதுத் தளிர் இலைகள் தங்கள் மகிழ்ச்சிக் காணிக்கையை கொண்டுவந்துள்ளன. இத்தகைய சந்தர்ப் பத்தில் நம் தேசமெங்கும் காணப்படும் புதிய வாழ்வு அலையை இளவேனிலுடன் சேர்த்துச் சொல்வது இயற் கையே. ஆகவே திரும்பவும் இளமை யெய்துவதன் அறிகுறி யாக, கொடுமையை எதிர்த்து விடாது நடத்தும் போராட் டத்தின் வெற்றி மகிழ்ச்சிக்கு அறிகுறியாக, சுதந்திர தாகத் தின் அறிகுறியாக ஜவாஹர்லால் வஸந்த மன்னனாக இருக்கிறார்.

[இது, கமலா நேரு மரண மெய்திய—1936 மார்ச் 8-ம் நாள் அன்று கவியரசர் தாகூர் நிகழ்த்திய சொற்பொழிவின் மொழிபெயர்ப்பு.]

# எழுத்தாளர் நேரு

**மேலிங் ஸூங் சியாங் (திருமதி சியாங்கே ஷேக்)**

தகராறுக்கிடமான பொதுக் காரியங்களில் முக்கிய பங்கெடுத்துள்ள எந்த மனிதரைப் பற்றியும், அவருடைய காலத்திலேயே, அறிவாளிகட்குள்ளே அவருடைய இடம் என்ன? அவருடைய குணுதிசயம் என்ன? என்று உண்மையாகவும் நேர்மையாகவும் மதிப்பிடுவது பொதுவாகச் சிரமமான காரியம். தம்முடைய கொள்கைகளைச் சிறிதும் விட்டுக் கொடுக்க முடியாதெனக் கருதி அவைகளினிமித்தம் தீவிரமாகப் போராடுபவரைப்பற்றி மதிப்பிடுவது இன்னும் சிரமமாகும். இத்தகைய மனிதர் இருவகையில் சங்கடப்படுவதற்கிடமுண்டு. இவரைப் போற்றுகிறவர்கள் இவரை அதிமனித நிலைக்கு மேலே வைக்கப் பாடுபடுவார்கள். அதே சமயத்தில் இவருடைய அரசியல் எதிரிகள் குற்றங்குறைகளைக் குவித்து இவரது உயர்வைக் குறைக்க முயலுவார்கள்.

நேருவை ராஜ தந்திரியாகவோ அல்லது அரசியல் தலைவனாகவோ வரைய முயலுபவர்களின் வாசகங்களில் இவ்வகைச் சாயல்கள் தெளிவாகவோ மறைவாகவோ தோய்ந்திருக்கும். அரசியல் எதிரியால் எழுதப்பட்டிருப்பின் அவர் தவருன வழியில் திருப்பப்பட்ட அபாயகரமான குழப்பக்காரர் என்று வருணிக்கப்படுவார். மிகுந்த ஆர்வத்தோடு போற்றுபவர்கள் இந்திய சுதந்தர பலிபீடத்தில் தன்னைப் பலியிட்டுக் கொண்டவர் என்று இவரை வருணிக்கலாம்.

ஆனால் ஒரு விஷயம். அதை அவருடைய நண்பர்களும் பகைவர்களும் பொதுவாக ஒப்புக்கொள்வர். நேரு ஆங்கில எழுத்தாளர்களில் ஒருவர் என்பதுவே அது.

ஆங்கிலத்தைத் தாய் மொழியாக உடையவர்கள்கூட மரியாதை செலுத்துகிற அளவுக்கு அம்மொழியை சிரமமின்றியும் ஆனந்தமாகவும் எழுதவல்ல ஒரு சில கீழ் நாட்டு எழுத்தாளர்களில் நேருவும் ஒருவர் என்பது தெளிவு. கிழக்கத்தியர்களில், ஆங்கிலத்தைத் திறமையாக கையாள முயன்றவர்கள் இன்னார் இன்னாரென்று எடுத்துக் காட்டினால் அது சிலருக்கு வேதனை தரும். உண்மையில் அம்முயற்சியில் வெற்றி பெற்றவர்கள் வெகு சிலரே. இந்திய மொழிகளி லொன்றையோ அல்லது சீன மொழிகளி லொன்றையோ தாய்மொழியாக உடையவர்கள் ஆங்கிலத்திலும் சிறந்த எழுத்தாளர்களாக இருப்பின், அப்பேர்ப்பட்டவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம்.

இலக்கியத் துறையில் புகழை நாடுபவர்கள் சொற்களின் மதிப்பை நுண்ணுணர்வாலறிந்து, அவற்றை வாக்கியங்களாக அமைத்து ஒவ்வொரு வரியிலும், படிக்கிறவர்கட்கு உண்மையான இன்பம் எய்தும்படி செய்யக்கூடிய திறமையுண்டு என்பதைத் தாங்கள் காட்டாவிட்டால் வெகு சீக்கிரம் அதற்குத் தகுதியற்றவர்களாகி விடுவார்கள். நேருவிடம் இத்திறமைகள் தாமாகவே அமைந்துள்ளன. அது மட்டுமல்ல. எழுதுவதில் அவருக்குள்ள சொல்லாண்மைக்கு நிகரில்லை. யாரையும் குற்றம் சாட்டுவதிலோ, சாந்தப்படுத்துவதிலோ, இடி முழக்கம்போன்ற கோபத்தைக் காட்டுவதிலோ, தேவகானம்போன்று செவிக்கினிமையளிப்பதிலோ அவருடைய எழுத்துக்கள் நிகரற்றவை. நேருவின் அரசியல் கருத்துக்களைச் சாபக் கேடாகக் கருதுபவர்களில், மனம்விட்டுப் பேசுபவர்கள்கூட ஜவாஹருக்கு ஆங்கில இலக்கியக் கோயிலில் சிறந்த இடம் உண்டென்பதை மகிழ்வோடு ஒப்புக்கொள்கிறார்கள்.

நேருவை எழுத்தாளராக நான் எவ்வாறு மதிக்கிறேனே அவ்வாறே நல்ல ஆங்கில நடையை வாசிப்பதில் களிப்படைகிற எல்லோரும் அவரை மதிக்கிருர்கள். வலிமை சார்ந்த இவருடைய திறமைகள் பலவற்றுள்ளும் தெற்றென விளங்கும் ஒன்றை எடுத்துக் காட்டும் சந்தர்ப்பம் கிடைத்தது பற்றி மகிழ்கிறேன். அரசியல் சண்டையின் இரைச்சலும் குழப்பமும் இறந்தொழிந்து, கனவாய், பழங்கதையாய்ப் போன நெடுங்காலத்திற்கப்புறம், உலகில் ஆங்கிலம் உள்ளமட்டும் ஆங்கில இலக்கியவானில் ஜவாஹர் ஒரு நட்சத்திரமாகப் பிரகாசித்துக் கொண்டிருப்பது நிச்சயம் என்ருல் அது அறியாமையாற் சொல்வதல்ல.

கஷ்டங்கள், பேராபத்துகளுக்கிடையே அழுகணிச் சித்தராக இல்லாமல், எதனுலும் வெல்ல முடியாத குதூகல மனப்பான்மையும், மகிழ்ச்சிப் பெருக்கும் நகைச்சுவையும், முற்றிலும் தன்னை மறந்த ஈடுபாடும் அவர் எழுதிய எந்த விஷயத்திலும் பரவி நிற்பதைக் காணலாம்.

அவர் எவ்வண்ணமோ, அவ்வண்ணமே எழுதுகிருர். உயர்ந்த பண்பும், நயத்தக்க நாகரிகமும், சூழ்ந்துள்ளோரிடம் மனங்கனிந்த வாஞ்சையும் கொண்டவர். உலகமும் காரியங்களும் எவ்வாறு தோற்றமளிக்கின்றனவோ அவ்வாறே அவைகளைக் காண்கிருர், கற்பனை யேற்ருமல். உலகில் அநியாயமும் முட்டாள்தனமும் தேவையில்லை; என்ருலும் இருக்கின்றன; அதற்காக வருந்துகிருர். மனிதர்கள் மாத்திரம் மனம் வைத்துப் பாடுபட்டால் நல்லவருங்காலம் உண்டு என்ற நம்பிக்கையை மாத்திரம் அவர் ஒருபோதும் இழந்ததில்லை. நல்லவேளை, அவருக்கு 'நாம்தான் உலகத்தைத் தாங்கிக் கொண்டிருக்கிறேம்' என்ற தற்பெருமைக் கோணல் புத்தி இல்லை. தான் சொல்ல வேண்டியதை நிரம்ப அழகாக, ஆனுல் உள்ளத்தில் தோய்ந்துள்ள அடக்கம் வழிகாட்ட, பகுத்தறிவு பதங்கூட்ட அனுபவம் ருசி யூட்டச் சொல்லுகிருர்.

ஆங்கில எழுத்தாளர்களுக்குள்ளே நேரு சிறந்தவர் என்னும் எனது நம்பிக்கையைக் காட்டுவதன் அடையாள மாக அவரை நேரு என்ற பெயரால்மட்டும் அழைக்கின் றேன். பெரிய மனிதர்களின் பேரோடு தடபுடல் பட்டங் களை நாம் பிணைப்பதில்லை. நேரு இந்திய அரசியல் சுதந் தரத்துக்கு நேரடியாக எவ்வளவோ சேவை செய்திருப்பி னும்—அவை அதிகமானவை— ஓர் அரசியல் மனிதராக தன் நாட்டுக்கும் உலகுக்கும் அவர் செய்துள்ள நிலையான சேவை அவருடைய எழுத்துக்களிலிருக்கின்றது. அரசி யல்வாதிகளாலும் காலப் போக்காலும் அவ்வப்போது ஏற்பட்ட மாறுதல்கள் நிலைப்பவையல்ல. ஆனால் நேருவைப் போன்ற ஆக்கச் சிந்தனையாளர்கள் எழுதி வைத்த அனு பவங்கள், ஆர்வங்கள், அடைந்த வெற்றிகள், இக்காலத்த வர் உள்ளத்தை உருவாக்குவதோடு நில்லாது, மனித சரித்திரப் பாதையிலேயே அழியா அடிச்சுவட்டைப் பதித்து விடுகின்றன. அவருடைய எழுத்துக்களிலிருந்தே அவரது குணுதிசயமென்ன அவரது சேவையென்ன என்பதை வருங்கால மக்கள் மதிப்பிட முடியும்.



# மகிழ்ச்சியுள்ள வீரன்

**விஜயலட்சுமி பண்டிட்**

ஒரு சகோதரனைப் பற்றி எழுதுவது ஒருவருக்கு எளிதான விஷயமல்ல. அந்தச் சகோதரன் தன்னால் போற்றப்படும் வீரனாக இருக்கும்பொழுது இக்காரியம் இருமடங்கு கஷ்டமானதாகிறது.

ஜவாஹர்லால் அருமையான மனிதர். நல்லுணவு கிடைப்பது எவ்வளவு அருமையோ அவ்வளவு இவரும் அருமையானவர் என்று **பிரான்ஸிஸ் கந்தர்** நன்றாகக் கூறிப்பிட்டிருக்கிறார். நவயுகம் படைத்த பெரிய மனிதர்களில் இவர் ஒருவர். உலகெங்குமுள்ள ஒடுக்கப்பட்ட மக்களின் ஒப்பற்ற வீரன். ஜனநாயகக் கொள்கையை விடாப்பிடியாகக் கொண்டவர். அசாதாரணமான தைரியமும் தூய்மையான தன்மையும் காணும்போது ஒளி வீசும் வாளே நமக்கு ஞாபகம் வரும். கூர்மையும் நுண்மையும் கொண்டவர். உயர்ந்த நோக்கங்கள் நிரம்பியவர். ஜனங்களின் செல்லப் பிள்ளை; அநேகமாக விக்கிரகம் போன்றே ஜனங்களால் போற்றப்படுகிறவர். மகாத்மா காந்திக்கு அடுத்தபடியாக நாடெங்கும் தன்னைப்பற்றி கதை கதையாய்ப் பேசும்படியான அற்புதமான ஒரே மனிதர். இவ்வளவிருந்தும் அவர் சோகமுள்ள மனிதராக இருக்கின்றார்.

அவர் முக்கியமாக செயலுக்குரியவர். ஆனால் செயலுக் கிடமளிக்காதபடி வைக்கப்பட்டிருக்கிறார். வெயில் ஒளியையும் மலைகளையும் விரும்புகின்ற அவர் இருள்

சூழ்ந்த பள்ளத்தாக்கில் இருத்தி வைக்கப்பட்டிருக்கிறார். சிறையில் அநேக ஆண்டுகள் வாழ்ந்து சலித்துவிட்டார். ஜெயில் அறையில் குறுகிய கம்பி வளைச் சாளரத்தின் ஊடே இருந்துவரும் நிலவையும் நட்சத்திர ஒளியையும் தான் அவரால் அனுபவிக்க முடிகிறது. வாழ்வும் அன்பும் சிரிப்பும் அவருடைய உயிரோடு ஒட்டியவை. ஆனால் அவை அவரைச் சூழ்ந்திருக்கும் உயர்ந்த சுவர்களைத் தாண்டி உள்ளே அணுகா. இந்தக் கஷ்டங்களால் அவருடைய உணர்ச்சியைத் தணித்துவிட முடியாது. எல்லையற்ற காட்சியை அவர் கண்டிருக்கிறார். கஷ்டமோ சிறைவாசமோ அக்காட்சியை அவர் இழக்கும்படி செய்யமுடியாது. அவருக்கு அந்த எல்லையற்ற காட்சியைக் காட்டிலும் உடல் சுதந்திரமும் சொந்த ஆசைகளை அனுபவிப்பதும் அவ்வளவு முக்கியமானவை அல்ல. அக்காட்சியை நிறைவேற்றுவதற்காகத் தன்னுடைய சக்திகள் யாவற்றையும் அதற்கே ஆட்படுத்தி யிருக்கிறார். நெருக்கடியான கட்டங்களில் தன் திறமையின் உச்சியிலிருக்கின்ற மகிழ்ச்சியுள்ள வீரனாகிறார்.

> "மனிதவர்க்கத்துக்கு நன்மையையோ தீமையையோ உண்டாக்கக் கூடிய பெரும் பிரச்னைகள் எதிர்ப்படுகின்ற பயங்கரத் தருணங்களிலே காதலனைப் போன்று மகிழ்ச்சி பொங்குபவர். அருள் பெற்றவன் போன்று திடீரென ஒளி நிறைந்திருப்பவர்."

எல்லாவற்றிற்கும் மேலாக அவர் மனிதப் பண்புடையவர். இதன் காரணமாகவே அவரை நன்றாக அறிந்தவர்கள் அவரை மிகவும் விரும்புகிறார்கள். அவரை நன்றாகக் காணவேண்டுமென்றால் வீட்டில் சிறு குழந்தைகளோடு அவர் விளையாடும்போது பார்க்கவேண்டும். அவர் இருக்கும்பொழுது ஒரே சிரிப்பும் தமாஷுமாக இருக்கும். அல்

லது யாராவதொரு நோயாளிக்குப் பணிவிடை செய்யும் பொழுது அவர் முகத்தைப் பார்க்கவேண்டும். அப்பொழுது தான் உண்மையான மனிதனைக் காண்கிறோம். மற்றவர்களுடைய உணர்ச்சிகளில், இன்ப துன்பங்களில் முழுப் பங்கு எடுத்துக் கொள்வதிலும் எவ்வளவு அதிசயமான சக்தி பெற்றிருக்கிறார் என்று தெரியவரும். அவருடைய வலிமையையும் அன்பின் ஆழத்தையும் அப்பொழுது காண்கிறோம்.

மிகுந்த வனப்புடையவர். ஆழ்ந்த சிந்தனையில் இருக்கும்போது பாருங்கள். வெளுப்படைந்ததும் கடுகடுப்புத் தோய்ந்ததுமான அவர் முகத்தில் உள்ள சோகக் கண்கள் வருங்காலத்தை உற்று நோக்குகின்றன. அவர் எதைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்? என்ன யோசித்துக் கொண்டிருக்கிறார்? எவற்றிற்காகத் தன் வாழ்நாளில் சிறந்த பகுதியைச் செலவழித்தாரோ அவை அவரைச் சுற்றி நொறுங்கி விழுந்துகொண்டிருக்கின்றன. ஈவிரக்கமில்லாமல் லட்சியங்கள் நொறுக்கப்படுகின்றன. வெறுப்பிலும் கொடுமையிலும் அறியாமையிலும் உலகம் ஆழ்ந்திருக்கிறது. அவர் சிறிதும் கலங்கவில்லை. புதிய உலகம் வந்தே தீரும் என்பதைத் தன் இயற்கை உணர்வால் அறிகிறார். இருளை ஊடுருவி அவரது கண்கள் அப் புதிய உலகத்தைப் பார்க்கின்றன. அப்புதிய உலகத்தின் அறிகுறியாக அவர் விளங்குகிறார். நமது உறுதியில் நாம் நிலை பெறுமாறு அவருடைய நம்பிக்கை நமக்கு உயிர் ஊட்டுகிறது. இந்தியாவுக்கும் ஜவாஹர்லாலுக்கும் சீக்கிரம் ஒளிபிறக்கும் என்று நம்புவோமாக. இந்தியாவும் ஜவாஹர்லாலும் ஒன்றே யல்லவா ?



# மேன்மையுள்ள படைவீரன்

எச். என். பிரெய்ல்ஸ்போர்டு

ஜவாஹர்லாலின் நண்பர்களுடன் நானும் சேர்ந்துகொள்வதற்கு எனக்குச் சந்தர்ப்பம் அளித்ததன் மூலம் என்னைக் கௌரவப்படுத்தியதாக நினைத்துக் கொள்கிறேன். அவர்மீது நாங்கள் கொண்டுள்ள வியப்பையும் அன்பையும் இப் புத்தகம் பொறித்து வைக்கிறது.

கிழக்கையும் மேற்கையும் எனக்கு ஒன்றுபடுத்தியவர் இவரே. நம் காலத்து வேறு எந்த இந்தியரும் இவ்வளவு செய்ததில்லை. பதினாறு வருஷங்களுக்கு முன்னே ஒரு பழைய முகலாயக் கோட்டையிலே அவர் கைதியாக இருந்த போது சந்தித்தேன். சோஷலிஸ்டுகளாகச் சந்தித்தபடியால் உடனே மனம் நெருங்கி உறவாடிப் பேசினோம். போராட்ட முறைகளைப்பற்றி அவ்வப்பொழுது நாங்கள் மாறுபட்டிருக்கிறோம். இருப்பினும் அன்று முதலின்று வரை, இத்தலைமுறையில் உலகமெங்கும் பரவியுள்ள விடுதலைப் போராட்டத்தைச் சேர்ந்த மேன்மையான வீரன் என்று அவரை நான் எப்பொழுதுமே கருதி, ஆதரித்து, மதித்து வந்திருக்கிறேன். அவருடைய நூல்களின் மூலம் அவரை அறிந்துவந்தேன். அவரது சிந்தனை விரிவை ஓரளவு உணர்ந்தேன். அவருடைய மனோசக்திகள் அவரை வெறும் அரசியல் தலைவனாக மட்டும் ஆக்காமல், நுட்பக் கலைஞனாகவும், சரித்திரச் சிந்தனையாளனாகவும் ஆக்கியிருக்கின்றன. அவர் இச் சக்திகளை இந்திய சுதந்திரப்

போரில் முழு மூச்சாக ஈடுபடுத்தியிருக்கிறார். சில நாட்களுக்கு முன் ஆனந்தபவனில் எனது மனைவி இவா மேரியாவும் நானும் அவருடைய விருந்தினர்களாகத் தங்கியிருந்தபொழுது இந்திய விடுதலைப் போரின் கடைசிக் கட்டத்தை என்ன அமைதியுடனும், மனிதப் பண்புடனும் இவர் எதிர் நோக்குகிறார் என்பதை உணர்ந்தோம்.

அஹிம்சைப் போரில் தீவிரப் பங்கெடுத்தவர்களுடைய குணப்போக்கை, அப் போர் முறை எவ்வாறு மாற்றியமைத்திருக்கிறதென்பதை, அப் போர்வீரர்களோடு பழகின நாங்கள் அநேக ஆண்டுகளாக அறிந்துவந்திருக்கிறோம். சாதாரணமானவர்களிடமும் சரி, வல்லவர்களிடமும் சரி, சுயநலமற்ற தன்மையும், கடமையில் பற்றும், தற்கால உலகில் வேறெங்கும் காண முடியாத அவாவின்மையையும் அவ்வஹிம்சைப் போர் உண்டாக்கிவிட்டது. நம் காலத்து ஐரோப்பாவில் இதற்கிணை காணவேண்டுமென்றால் ஜார் ஆட்சியையும் ஜெர்மனி நாஜிகளையும் எதிர்த்த ரகசிய இயக்கங்களில்தான் காணலாகும். ஆனால் அவைகளெல்லாம் சூழ்ச்சி ஸ்தாபனங்கள். எவ்வளவுதான் தீரமும் பக்தி சிரத்தையும் பெற்றிருந்தாலும், காந்திஜியின் உணர்ச்சி வேகத்தால் இழுக்கப்பட்ட இந்த இந்தியர்களின் அறவொழுக்கத்தை அவை பெற்றிருக்கவில்லை. அஹிம்சைப் போரின் தனிக் குணம் என்ன? நம்பிக்கையால் எய்தும் அமைதி. மேனாட்டுச் சந்தேகப் பார்வையாளர்களுக்கு இவ்வமைதி வியப்பையும் திகைப்பையும் உண்டாக்கும். சாதாரண சராசரி மனிதனிடம் இந்த நம்பிக்கை இயல்பாக அமைந்திருக்கிறது. சிந்தனையாளரான நேரு அதற்கு உறுதியான, அறிவுபூர்வமான அடித்தளம் கட்டினார். மனித வர்க்கத்தின் வளர்ச்சியின் ஒரு பகுதியாக சரித்திர நோக்கோடு பார்க்கும் பொழுது அவர் ஈடுபட்டுள்ள ஆவேசப் போரை ஓர் அற்புதமான வெற்றியென்றே கருத வேண்டும்.

நமது சாம்ராஜ்ஜியம் அவரை அநேக வருஷங்களாகச் சிறைக்குள் தள்ளியதைச் சொல்லாமலிருந்தால் ஒரு ஆங்கிலேயன் என்ற முறையில் நான் நேருவைப் பாராட்டுதல் போலியாக இருக்கும். உலகப் பிரஜைகளாகக் கருதிக் கொள்ள முயலும் எங்கள் மனத்தில் அவரைச் சிறைப்படுத்தி யிருக்கும் காட்சி அழிக்க முடியாதபடி பதிந்துவிட்டது. இத்தகைய மனிதரை, அவரது வாழ்நாளில் நல்ல பகுதியான அனேக வருஷங்களைச் சிறைக்கூடத்தில் கழிக்கும்படியாகச் செய்வது தவிர, வேறு வகையில் பயன்படுத்திக் கொள்ளத் தெரியாத சாம்ராஜ்ஜியத்தின் இழிவு இவ்வொரு காரியத்திலேயே நன்கு புலனாகின்றது.

அவருடைய தியாகம் அமைதியாகப் பலனளித்திருக்கிறது. இந்தியாவில் தங்களது சாம்ராஜ்ஜியத்தை முடித்துக் கொள்வதற்கு ஆங்கிலேயரில் பலர் தயாராகவும் சிலர் ஆவலாகவும் இருப்பார்களானால் அதற்குக் காரணம் இந்தியர் கஷ்டங்களை இவ்வாறு உறுதியாகச் சகித்ததுவே. எல்லாவற்றிற்கும் மேலாக நேருவின் உறுதியே நமக்கு மனமாற்றத்தை ஏற்படுத்தியது. அவரது உறுதி, நம்முடைய இரக்கமற்ற தன்மையையும் சந்தேக மனப்பான்மையையும் கண்டு நம்மை நாமே நாணும்படி செய்தது. அவருடைய தாய்நாட்டில் கோடானகோடி மக்கள் பட்டினியால் பரிதவிக்கும் நிலையை அவர் எழுதி, அவர் படும் கவலையில் நாமும் பங்குகொள்ளும்படி செய்ததன் மூலமாகவே பெரும்பாலும் நம்முடைய கடின சித்தமும் சந்தேக மனப்பான்மையும் ஒழிந்தனவெனக் கருதுகிறேன். இவ்விதமாக, குணம் சரித்திரத்தை உருவாக்குகிறது. சுயநலமற்ற ஒரு மனிதன், ஜவாஹர்லால் நேருவின் உயர்வை அடையும் பொழுது, அவனுடைய சக்தி, அவனது கட்சியையும் தேசத்தையும் மீறி அப்பாலும் இயங்கும்.

நேருவின் வாழ்வு முக்கியமான திருப்பத்தில் இருக்கும் பொழுது இப் பாராட்டு எழுதப்படுகிறது. சண்டைகளும்

துன்பங்களும் நிறைந்த காலங்கள் சென்றன என்றே நம்புகிறோம். அவர் தனது தீரத்தையும் சகிப்புத்தன்மையையும் போதுமான அளவு நிரூபித்திருக்கிறார். அவருடைய போராட்டத் திறமைகளைப் போன்ற அசாதாரணமான அவருடைய ஆக்கத் திறமைகளை வருங்காலம் நன்கு பயன்படுத்திக்கொள்ளும் என்பதே எமது நம்பிக்கை. அவருடைய காலத்திலேயே இந்தியப் பொது மக்களை வறுமைப் படுகுழியினின்றும் கைதூக்கிவிட வேண்டும். இந்தப் பிரமாண்டமான ஆக்க வேலையை அவர் தவிர வேறு யார் திட்டமிட்டு வேலை செய்ய முடியும்? போராட்ட கால முழுவதும் அவருக்கு சுயநலமற்ற ஆசையென்று ஒன்றிருந்திருக்குமானல், அது இதுதானே. விடுதலைக்காகத் தன் நாட்டு மக்களை அழைத்துச் செல்லும் படைவீரனுக்கு, அந்நாட்டு வருங்கால வாழ்வைச் சீரமைக்கும் வாய்ப்பு அநேகமாகக் கொடுத்து வைப்பதில்லை. ஆனல், அஹிம்சா வீரன் இந்த வழக்கமான விதியை உடைத்துவிடுகிறான். நேருவின் வாழ்நாள் முழுதும்-இளமையில் விஞ்ஞானத்தில் கொண்ட ஆர்வம், பின்னல் சரித்திரத்தில் மூழ்கியதும், அவரது பிரயாணங்களும், இந்தியாவின் பரந்த விஸ்தீரண முழுதும் அவருக்கு ஏற்பட்டுள்ள நெருங்கிய பழக்கமும், சிறைக்கூடத்தில் வருஷக் கணக்கில் படித்த படிப்பும், திளைத்த சிந்தனையும் - இவை யாவும் பின்னல் காத்துக் கொண்டிருக்கும் ஆக்க வேலைக்கு அவருக்குப் பயிற்சி கொடுத்துத் தகுதியாக்கி யிருக்கின்றன.



# பாதி மறந்த பழைய பேச்சு

**சம்பூர்ணனந்த்**

பல வருஷங்களுக்கு முன்னுல் இது நிகழ்ந்தது. எந்த வருஷம் என்பது நினைவில் இல்லை. அநேகமாக 1923-ஆக இருந்திருக்கக்கூடும். என்னமோ ஒரு கூட்டம், அனேகமாக ஜில்லா அரசியல் மகாநாடாக இருக்கலாம். காஸிப்பூரில் நடந்தது. தலைமை வகிக்க ஜவாஹர்லால் அழைக்கப்பட்டிருந்தார். நான் சொற்பொழிவாளர்களில் ஒருவன். நாங்கள் இருவரும் ஒரே இல்லத்தில் தங்கி இருந்தோம். அதிகாலையில் கங்கைக்கு நீராடச் சென்ருேம். படித்துறையில் துணிகளுக்கு நிறைய சோப்புப் போட்டுத் துவைத்தோம். எங்களுக்கு இந்தத் தொழிலில் அவ்வளவு திறமை கிடையாது, என் விஷயத்தில் இது நிரம்பவும் உண்மை. துவைத்துக்கொண்டே பொதுக்காரியங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தோம்.

எங்களுடைய உரையாடலுக்குப் பின்னணியாக இருந்ததைக் குறிப்பிட வேண்டும். கிலாபத் விஷயமாக பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நடத்தையை வெறுத்து இந்தியாவினின்றும் வெளியேறிய மகாஜரின்களில் ஒருவரான ஷௌகத் உஸ்மானி, பிகானீரில் எனது மாணவராக இருந்தவர். சம்பவங்கள் மலிந்த இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளை ரஷ்யாவில் கழித்துவிட்டு இந்தியாவுக்குத் திரும்பினுர். அந்தச் சமயத்தில் அவர் உறுதியான கம்யூனிஸ்ட்டாக இருந்தது வாஸ்தவம். ஆனுல், ரஷ்ய அரசாங்கத்தின் தரகரா அல்லது கம்யூனிஸ்ட் அகிலத்தின் தரகரா

என்பதை நான் அறிந்துகொள்ளும் ஏதுக்கள் இல்லை. அக்டோபர் புரட்சி நம்மவர் அனைவரையும் ஆழமாகக் குலுக்கி விட்டது. தனிவுடைமைகள் பறிமுதலாக்கப்பட்டது, மாதர்கள் தேசீயமயமாக்கப்பட்டது, மதம் வேரோடு அழிக்கப்பட்டது போன்ற செயல்களால் போல்ஷ்விக் என்ற பெயரே சிலருக்குப் பூச்சாண்டியாகிவிட்டது. விரும்பத் தகாதவையும் நினைக்கத் தகாதவையும் என்னென்ன உண்டோ அவை யாவற்றையும் குறிக்கும் சொல்லாக போல்ஷ்விக் என்ற சொல் கருதப்பட்டது. அரசியலிலும், பொருளாதாரத்திலும் சமூகத்துறையிலும் தாழ்த்தப் பட்ட மக்களுக்கு நம்பிக்கையூட்டும் சின்னமாகவே மற்றவர்கள் அதைக் கருதினார்கள். மார்க்ஸ், ஏஞ்சல்ஸ் ஆகிய இருவரது நூல்களைப் படிப்பதற்கு வெகு சிலருக்குத்தான் சந்தர்ப்பமிருந்தது. லெனின், ட்ராட்ஸ்கி என்ற பெயர்கள் தான் தெரிந்திருந்தன. அவர்களைப் பற்றி வேறொன்றும் தெரியாது. போல்ஷ்விக் கட்சியின் முறை என்ன? அதன் வெற்றியால் ஏற்படும் விளைவுகள் என்ன? என்பதைப் பற்றி ஒன்றுமே தெரியாது. தெரிந்துகொள்ள வேண்டுமென்று உண்மையாக ஆசைப்படுகின்ற அநேகருக்கு எப்படித் தெரிந்து கொள்வதென்பதும் தெரியாது. நானும் அது பற்றிப் போதுமான அளவு தெரிந்திருக்கவில்லை. இந்தியாவில் அப்போது கிடைக்காத சில புத்தகங்களை உஸ்மானி எனக்குத் தந்திருந்தார். இந்த நாட்டிற்குள் சட்டபூர்வமாகக் கொண்டுவந்திருந்தால் அவைகளுக்கு ஒருகால் தடை விதித்திருக்கலாம். அப்புத்தகங்கள் என்னைச் சிந்திக்கத் தூண்டின. அப்பொழுதே காங்கிரஸின் ஸ்தாபன அமைப்பு சரியில்லை என்று எனக்குத் தோன்றுமாறு செய்தன. காங்கிரஸ் ஸ்தாபனம் போராட்டத்திற்குரிய கட்டமைப்பு இல்லாமல் கட்சிப் பிணைப்பற்ற கூட்டம்போலத் தோன்றியது. இன்றைக்குப் பார்த்தால் அந்த நிலைமை இன்னும் அதிகமாக இருப்பதாகவே தோன்றுகிறது.

உஸ்மானி கான்பூரில் கைது செய்யப்பட்டார். 1923 மே 12-ல் நாடு முழுதும் ஒரே சமயத்தில் சோதனைகள் போடப்பட்டன. என்னுடைய வீட்டில் சோதனையிட்டார்கள். போலீஸாரின் இச் செயல்களுக்கு கான்பூர் சதி வழக்கே காரணம். திரு. எம். என். ராய் அக்காலத்தில் ரஷ்யாவில் இருந்தார். இந்தியாவைப் பற்றியும் கீழ்நாட்டு விஷயங்களைப் பற்றியும் தனக்கு நிரம்பத் தெரியுமென்று ரஷ்ய அரசாங்கம் ஒப்புக்கொள்ளும்படி எப்படியோ செய்துகொண்டு விட்டார். ஜவாஹர்லாலை எப்படியும் கம்யூனிஸத்திற்கு இழுத்து விடும்படியாக உஸ்மானிக்கு இரண்டு கடிதங்கள் எழுதியிருக்கிறார். என் மூலமாக ஜவாஹரை அணுகுவது சுலபமான வழி என்று யோசனை கூறியிருக்கிறார். நீதி மன்றத்தில் இந்தக் கடிதங்கள் கொண்டுவரப்பட்டன. ஆனால் ஜவாஹர்லாலோ நானோ திரு. ராயின் வலைக்குள் விழுந்து விட்டோம் என்பதைக் காட்டுவதற்கு ருசு இல்லாததால் விடப்பட்டோம்.

இந்தச் சமீபத்திய நிகழ்ச்சிகளே எங்கள் சம்பாஷணைக்கு இயற்கையான பின்னணியாக அமையலாயின. சதி வழக்கிலிருந்து போல்ஷ்விஸத்துக்கும் புரட்சிக்கும் ரஷ்யாவுக்கும் எங்கள் பேச்சு நழுவிச் சென்றது. இது சோஷலிஸ்ட் தத்துவத்தில் இந்தியாவிலும் ரஷ்யாவிலுமுள்ள நிலைமைகளை ஒப்பிடுவதிலும் இந்தியச் சூழ்நிலையில் ரஷ்ய அனுபவங்களைப் பிரயோகிப்பது பற்றியும் பல சர்ச்சைகளுக்கிட்டுச் சென்றது. இந்த சம்பாஷணை முழுவதையும் ஜவாஹர்லால் மறந்திருக்கவும் கூடும். ஆனால் இந்த விஷயங்களைப்பற்றி அவரது கருத்துக்கள் இப்பொழுது இருப்பதுபோல அப்பொழுது தெளிவானவைஅல்ல என்று நான் நிச்சயம் சொல்ல முடியும். என்னுடைய கருத்துக்களும் மங்கலாகவே இருந்தன. கம்யூனிஸ்ட் தோழர்கள் இப்பொழுது கூட நாங்கள் தெளிவுடன் இருப்பதாக ஒத்துக் கொள்ள மாட்டார்கள். ஆனால் ஏற்கெனவே ஜவாஹர்லால்

இந்தக் கேள்விகளைப் பற்றித் தொடர்ந்து படிக்கத் துவங்கி இருந்தார் என்பதை நிச்சயமாக அறிவேன்.

எங்கள் உரையாடலில் ஓர் அம்சம் தெளிவாக நினைவிலிருக்கிறது. காங்கிரஸ் ஸ்தாபனத்தின் தளர்ச்சியான அமைப்பு என் மனத்திற்கு வேதனை அளித்து வந்திருக்கிறதென்று நான் மேலே சொல்லியிருக்கிறேன். இந்த விஷயத்தைப் பிரஸ்தாபித்து, ஏறத்தாழ சோவியத் பாதைகளில் காங்கிரஸையும் உருவாக்கி ரஷ்யாவில் போல்ஷ்விக் கட்சி செய்த முறையில் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் அங்கத்தினர் தொகையைக் கட்டுப்படுத்தினால் பயனுடையதாயிருக்குமென்று ஜவாஹர்லால் எண்ணியதுண்டா என்று கேட்டேன். விவசாயிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் இடம் அளிப்பதற்காக காங்கிரஸ் கமிட்டிகளை அடிப்படையிலிருந்து மேலாகக் கட்டவும், அங்கத்தினர்களை அங்கீகாரமான பயிற்சிக்குப்பின் அனுமதிக்கவும், தற்போது இருப்பதைவிடக் கண்டிப்பான கட்சிக் கட்டுப்பாட்டை வற்புறுத்தவும் செய்தால் ஒரு போராட்ட எந்திரமாக காங்கிரஸ் மிகுதியும் பயனுள்ளதாகும் என்பது என் அபிப்பிராயம். விவாதக் குழுவாகவும் வருஷாந்திரத் தமாஷாகவும் இருக்கும் படாடோபம் மறைந்து படலாம். நிச்சயமாக சோவியத் திட்டம் முழுவதையும் அப்படியே ஏற்றுக்கொள்ள நான் தயாராக இருக்கவில்லை. மிகுதியும் அப்படித்தான். ஏனெனில் அது பூராவையும் அறிந்து கொண்டேனா என்பது எனக்குத் தெரியாது. முடிவான அபிப்பிராயம் கொடுக்கின்ற அளவுக்கு ஜவாஹர்லாலும் இதுபற்றிப் படிக்கவில்லை. எப்படியிருப்பினும் காங்கிரஸ் மகாசபையைத் திருத்தி அமைப்பது அவசியம் என அவர் என்னுடன் ஒத்துக்கொண்டார். காங்கிரஸ் ஸ்தாபனத்தை தேசிய மயமாக்கினால் அநேகர் எதிர்ப்பார்கள் என்று நினைத்தார். அது சரி. எவ்வளவுக்கு சோவியத்தைப்

பற்றி ஜனங்கள் அறியாமலிருக்கின்றார்களோ அவ்வளவு அதிகமாக அவர்களது எதிர்ப்பும் இருக்கும்.

இந்தப் பேச்சு நடந்து இருபது ஆண்டுகளுக்கு மேல் ஆகியிருக்கும். அந்தக் காலத்தில் எங்களில் சிலரது எண்ணங்கள் எவ்வாறு சென்றன என்பதை இந்தப் பேச்சு காட்டுகிறது. இன்று மக்களின் பொதுஅறிவு மிகுந்து விட்டது. அவர்கள் உலக இயக்கங்களைப்பற்றி நன்றாக மதிப்பிடத் தொடங்கிவிட்டார்கள். மானிட ஜாதியின் தலையெழுத்தை உருவாக்குவதில் தேசிய சக்திகளும் சர்வதேசிய சக்திகளும் ஒன்றை ஒன்று நம்பியிருக்கின்றன என்பதை ஜனங்கள் அறிந்திருக்கிறார்கள். நமது ஸ்தாபனத்தில் பலஹீனத்தைப்போல பலத்தையும் உய்த்துணர வேண்டும். ஜனநாயகத்தின் தற்காலத்திய நிபந்தனைகளின் நெருக்கத்தை ஏற்றுத் தாங்க நமது ஸ்தாபனத்தால் இயலாது என்பதே பொது அபிப்பிராயமாக இருந்தபோதிலும் நுட்ப மதியுடையோர்களை, தாமே காரியங்களைச் சிந்திக்கவும் செயலில் இறங்கவும் ஆற்றல் உடையவர்களை, கட்டளைக் குரலுக்குக் கடிதில் பணிகின்றவர்களை நாம் இன்னும் ஒன்று சேர்த்து ஒழுங்குபடுத்தவில்லை. இன்றைய நாட்களில் ஜவாஹர்லாலின் உள்ளம் எந்தத் திக்கு நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது என்பது எனக்குத் தெரியாது. ஜெயிலை விட்டு வெளிவந்ததும் இப்பொழுது இருக்கின்ற ஸ்தாபன அமைப்புக்கே அவர் உறுதியாக ஆதரவளிப்பாரென்றால் அது எனக்குப் பெரும் ஆச்சரியத்தையே கொடுக்கும்.

**[ஜவாஹர்லால் ஆமதுநகரக் கோட்டையில் காவலில் வைக்கப்பட்டிருந்தபொழுது இக் கட்டுரை எழுதப்பட்டது.]**

# உயிர் ஒளி

கே. எம். முன்ஷி

தற்காலத் தலைமுறையில் எல்லோரையும் தன்வயப் படுத்துகின்ற பெரிய மனிதர்களில் ஜவாஹரும் ஒருவர். "புளூட்டார்க்" எழுதிய நூலிலிருந்து வெளியேறியவர் என்று நான் ஒரு தடவை அவரை வர்ணித்தேன். தற்கால இந்திய வாழ்வுப் பின்னணியில் அவருடைய தோற்றப் பொலிவு உயிர் ஒளிபோல் அசைந்து குலுங்கிச் சுடர்விடு கிறது. இந்நாட்டு இளைஞர்களின் மனத்தை அவர் கவர்ந் திருப்பதின் இரகசியம் இதுவே.

அவரை 'ஹோம் ரூல்' நாட்களிலிருந்தே எனக்குத் தெரியும். அப்பழுக்கற்ற ஆடை அணிந்திருப்பார். எழில் முகத்தில் புன்னகை ஒளி வீசும். அநேக ஆண்டுகள் கழித்து அவர் காங்கிரஸ் தலைவராக இருந்தபோதும் அவ ரோடு தொடர்பு கொண்டேன். அவருடைய தந்தை உயி ருடன் இருந்த காலத்திலேயே, அவர் தாய்நாட்டின்மீது அளவிறந்த பக்தியும் பொதுவாக சுதந்திரத்தில் வேட்கை யும் தளராத துணிவும் உள்ளவர். இவ் வருங் குணங்க ளால், அவர் காந்திஜியின் பேரன்புக்குரியவரானார். காந்திஜி யாருக்கும் எளிதில் விட்டுக் கொடுக்காதவர். ஏனைய எல்லாவற்றையும் காட்டிலும் லட்சியத்தையும் அதற்காகத் தியாகம் செய்வதையும் மகாத்மாஜி பெரிதும் மதிக்கிறவ ராதலால், ஜவாஹரோடு இணங்கிச் செல்வதில் களிப் பெய்துகிறார்.

ஜவாஹர் நிரம்பத் துடுக்கானவர்போலக் காணப்படு கிறார். இளம்பருவத்தில் உண்மையாகவே அப்படி இருந் தார். துடுக்காக இப்பொழுது தோன்றுவது வெறும் வழக்கம் மாத்திரம் அல்லவா என்பது என்றால் நிச்சயமா கச் சொல்ல முடியாது. பெரிய பொதுக் கூட்டங்களில் எங்காவது ஒரு மூலையில் ஜனங்கள் இடித்துத் தள்ளிக் கொண்டிருந்தால் ஜவாஹர்லால் உடனே மேடையிலிருந்து கீழே குதித்து அங்கு சென்று ஜனங்களைத் தாக்குவார். இதை யாரும் எதிர்பார்க்கலாம். மிகக் கட்டுப்பாட்டை மீறியவர்களைக் கண்டிப்பதற்குச் சிறிது இடங்கிடைத்தா லும் உடனே எழுந்து விடுவார்.

சிலசமயம் பெருங் கோபாவேசத்தில் குதிக்க ஆரம் பித்து விடுவார். அடக்க முடியாத கோபம் என்று தோன் றும்; ஆனால் அது ஒரு வழக்கமே தவிர வேறொன்று மில்லை. அடுத்த நொடியில் கவர்ச்சிகரமாகச் சிரிப்பார்; அல்லது மனம் விட்டு மன்னிப்புக் கேட்பார். அதை நான் பார்த்திருக்கிறேன்.

ஜவாஹர்லால் மிகவும் கவர்ச்சிகரமானவர். பெரிதும் பிரியப்படத்தக்கவர்.உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத் தன்மையும், உயிர் நோக்கங்களின்மீது உண்மை யான பற்றும் அவரை அணுகிய அத்தனை பேரையும் அவரிடம் மயங்கச் செய்கின்றன. அவரிடம் ஒளிவு மறைவு என்பதே கிடையாது. சில கொள்கைகளுக்காகப் பாடு படுகிறார். விஷயங்களை வெட்டெனச் சொல்வாரே தவிர தளுக்காகச் சொல்ல அவர் தயாராயில்லை. கொள்கைகளைத் தவிர்த்து அவர் விரும்புவனவும் வெறுப்பனவும் அநேக மாக வேறு ஒன்றும் இரா.

இங்கிலாந்தில் வளர்ந்தார். ஆங்கில முறைப்படி நெடு நாள் வாழ்க்கை நடத்தினார். ஆகவே இந்திய விஷயங்களை அவர் உணர்ந்து மதிக்க நெடுநாள் ஆகிவிட்டது. ஆனால் தன் நாட்டையும் தன் நாட்டு மக்களையும் அளவு கடந்து

நேசிக்கிருர். பல்லாயிரம் ஆண்டுகளாக இந்தியாவின் பெருமையை ஆக்கிவரும் பிரமாண்ட சக்திகளோடு காஷ்மீரப் பண்டிதரின் அந்தரங்க உள்ளம் முற்றிலும் இசைந்து பாயாது போனுல், அது எனக்கு வியப்பை உண்டு பண்ணுது.

சென்ற ஐந்து ஆண்டுகளில் போல வேறு எப்பொழுதும் ஜவாஹர்லாலின் லட்சியம் கடும் சோதனைக்குள்ளானதில்லை. எல்லாவிதமான ஏகாதிபத்தியங்களையும் அவர் எதிர்க்கிருர். மனித ஜாதியின் சுதந்திரத்தை தனது லட்சியமாகக் கொண்டிருக்கிருர். ஜனநாயக ஸ்பெயினுக்காக அவருடைய இதயம் பரிவு கூர்ந்தது. சியாங்கே ஷேக் ஜப்பானுேடு நடத்திய வீரப்போராட்டத்தின்போது ஜவாஹரின் மனம் சியாங் பக்கம் துணை நின்றது. ரஷ்யாவில் பொது மக்களின் ஆட்சி தோன்றியிருப்பதைக்கண்டு வியக்கிருர். ஆனுல் கம்யூனிஸ்ட்கள் சொல்வதெல்லாம் சரி என்று ஒப்புக் கொள்ளவில்லை. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தோடு ராஜிக்கு வருவதை அடிக்கடி அவர் எதிர்த்திருக்கிருர். கடந்த 25 வருஷங்களாக பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தோடு ராஜிக்கு வருவதுபற்றி அவர் கொண்ட கருத்துக்கள் சரியானவை யல்ல என்று சரித்திரம் நிரூபிக்கலாம். மனித வர்க்கத்தின் சுதந்திரத்தைச் சிறிதும் விட்டுக்கொடுக்காமல் அதை விடாது வற்புறுத்துவதே பொது ஜன இயக்கங்களின் அடிப்படைத் தூண்டுதலாக இருக்குமானுல் ஜவாஹர்லால் அதற்காகவே பாடுபட்டு வந்திருக்கிருர். எப்பொழுதும் முனைமுகத்திலிருந்திருக்கிருர். வருங்காலம் அவருக்கு என்ன வைத்திருக்கின்றதோ சொல்லமுடியாது. எதிர்பாராத மாறுதல் எதுவும் நிகழாதவரை மகாத்மா காந்தி என்ற சக்தியும் உற்சாகமும் காலப்போக்கில் அமைதியாக்கப்பட்டபின் இந்தியர்களைச் சுதந்திரப்போரில் நடத்திச் செல்லக்கூடிய ஒரு பெருங்குரல் ஜவாஹர்லாலின் குரலாகவே இருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை.

# கர்மயோகி

### கே. என். கட்ஜூ

ஜவாஹர்லாலைப்பற்றி எழுதுவது கொஞ்சம் சிரமமான காரியந்தான். அவ்வளவு வெளிப்படையாக வாழ்கிறார். எல்லோருக்கும் அவ்வளவு தெரிந்தவராக இருக்கிறார். உலக முழுவதும் பரவும்படி தீவிர விளம்பரம் நடைபெறுகிற இக்காலத்திலே எந்த அரசியல் தலைவரைப்பற்றியும், எந்த விவரமும் ஏராளமாகக் கிடைக்கிறது. அந்தக் காலத்திலோ வென்றால் ஏதாவதொரு பெரிய மனிதனைப் பற்றி வாசிக்கத்தக்க ஒரு வரலாற்றை எழுதுவதற்கு, சரித்திர ஆசிரியன், தனி மனிதர்களுடைய நாட்குறிப்பு, கடிதங்கள், இன்னும் எங்கெங்கோ ஒளிந்து கிடக்கும் காகிதங்களையெல்லாம் புரட்ட வேண்டியதிருக்கும். ஆனால் இப்பொழுதோ, தலைவர்களுடைய அறிக்கைகளையும் பேச்சுக்களையும் வார்த்தை பிசகாமல் அப்படியே கொண்டுள்ள பத்திரிகைகளும் புதிய பயங்கரமான பத்திரிகை நிருபர் கூட்டங்களும் வந்த பிறகு, ஒரு வரலாற்றுக்கு வேண்டிய விஷயங்களோ ஏராளமாக இருக்கின்றன. மேலும் ஜவாஹர்லாலோ தன்னுடைய வாழ்வு, மனப்போக்கு, தன்எண்ணம் செயல்பற்றிய சித்தாந்தம் ஆகிய யாவற்றையும் இக்காலத்திய தலைசிறந்த சுய சரிதத்தில் வெட்ட வெளிச்சமாக்கியிருக்கிறார். இத்தனை காரணங்களை முன்னிட்டு ஜவாஹர்லாலைப்பற்றி எழுதுவது எனக்குச் சிரமமென்று கூறுகிறேன். தன்னுடைய வாழ்வின் உச்சத்திலிருக்கும் மனி

தனைப்பற்றி, இன்னும் எவ்வளவோ பயனுள்ள, தீவிர, பொது வேலையிலீடுபடும் வருங்காலம் அவருக்கு இருக்கும்போது இப்பொழுதே எழுதுவது சரியல்ல என்றும் நினைக்கிறேன். வருங் காலத்திலே நாட்டின் நிலையை உயர்த்தவேண்டிப் பெரும்பயனுள்ள ஆக்க வேலைகள் அவரிடமிருந்து தோன்றுவதற்குரிய அறிகுறிகள் இருக்கின்றன. இது நிற்க, பொதுஜன வாழ்வில் ஈடுபட்டவர், தன்னுடைய எண்ணங்கள் செயல்களால் கோடிக் கணக்கான மக்களின் போக்கை மாற்றி யமைத்துக்கொண்டிருக்கும் ஒரு மனிதர், 'என்னுடைய வாழ்வை முழுவதும் கவனித்துக்கொண்டு அதன்மீது உமது தீர்ப்பைக் கூறு' மென்று நியாயமாகக் கேட்கலாம். அவரைப் போற்றுவதானுலும் நல்லவை கெட்டவைகளைப்பற்றி யுரைப்பதானுலும் அவரது காலத்தில் கூறப்படும் தீர்ப்பு பாரபட்சமாகவும் சமநிலையற்றதாகவும் காணப்படும். அவரோடு சேர்ந்துழைக்கும் எங்களுக்கு, அவரை நன்கறிந்த எங்களுக்கு, அவர் பெரிதும் வியக்கத்தக்க மனிதனுகவும் ராஜ தந்திரியாகவு மிருக்கிருர். ஆகவே நாங்கள் உபயோகிக்கிற மொழியும் ஒருவேளை மிகைப்பட்டதாக, உணர்ச்சி பொங்கியதாக யிருக்கலாம். அரசியல் தலைமைப் பதவிக்கு, எல்லாவற்றைக் காட்டிலும், உண்மைகாணும் திறமையும், இயற்கை உணர்வும் அமையவேண்டும். ஒருவரிடத்தில் நாட்டுப் பற்று கொழுந்து விட்டெறியலாம். ஆனுல் விஷயங்களின் உண்மைகளை ஆராய்ந்து சரியான முடிவுக்கு வருந் திறமையில்லாவிட்டால் நாட்டுப் பற்று என்ற நல்ல குணமே நாட்டைக் கெடுத்துவிடும். இக் கருத்துக்களைக் கொண்டுதான் நான் பிரியமாகப் போற்றுகிற அரசியல் தலைவர்களைப்பற்றி எழுதச் சில சமயம் தயங்குகிறேன்.

நான் அலகாபாதுக்காரனல்லன். 1916-ல் அலகாபாத் உயர்நீதி மன்றத்தில் வக்கீலாவதற்கு முன்பு அவரோடு நெருங்கிய பழக்கம் எனக்குக் கிடையாது. இரண்டு

வருஷத்துக்கு முன்பே வக்கீல் தொழிலை ஆரம்பித்துவிட்டார். வாலிப நேருவின் வாழ்வும் சம்பாத்தியமும் பிரமாதமாக இருக்குமென்று ஒவ்வொருவரும் சொல்லிக்கொண்டதாக எனக்கு நினைப்பு. சட்டத்தொழிலிலும் வழக்காடும் உலகத்திலும் மோதிலால் நேரு என்ற பெயரே மந்திரசக்தி வாய்ந்ததொன்றாக இருந்தது. வக்கீல்களுக்கிடையே அவர் வல்லாளனாக இருந்தார். அவர் மகனையும் பார்த்து 'புலிக்குப் பிறந்தது பூனையாகுமா !' என்று அனைவரும் சொல்லிக்கொண்டார்கள், ஜவாஹர்லாலும் நானும் வெவ்வேறு விதமான வாழ்க்கைமுறை கொண்டிருந்தோம். ஆனந்தபவனம் என்ற உலகம் அவருடையது. எனதோ, ஒரு மிகச் சிறிய குடிசை. ஆனால் நாங்கள் உயர் நீதி மன்றத்தில் சந்தித்தோம். அநேக வழக்குகளில் ஒன்றாக உழைத்தோம். அப்பொழுதே அவர் வசீகரமான தோற்றப் பொலிவு பெற்றிருந்தார். ஆனால் அவ் விளமைப் பருவத்திலேயே வக்கீல் தொழிலிலிருந்து அவரைப் பிரித்துத் தன் பக்கம் இழுத்துக்கொள்ள வேண்டுமென்ற நல்விதி அரசியலுக்குக் கிடைத்துவிட்டது. ஜாலியன்வாலாபாக் படுகொலைக்குப் பின் பஞ்சாப்பில் ஏற்பட்ட ராணுவச் சட்ட அமுல் அலகாபாத் வக்கீல் சங்கம் ஒரு பெரிய வக்கீலை இழக்கும்படி செய்துவிட்டது. அவர் மாத்திரம் இத்தொழிலைத் தொடர்ந்து பார்த்திருப்பாரானால், அவருடைய விடாப்பிடியாலும் திறமையாலும் குணவலிமையாலும் தீவிர நம்பிக்கையாலும், நியாயம் வேண்டித் தன்னை அடைந்தார்க்கு வெற்றி யளித்திருப்பாரென்பதில் சந்தேகமில்லை. நீதிமன்றத்தில் வெற்றிக்குக் காரணம் வக்கீலின் குணப் பொலிவாகும். தான் எந்த வழக்குக்காக வாதாடுகிறானோ 'அது நேர்மையானது, நீதியானது என்ற நம்பிக்கை கொழுந்துவிட்டெரியும் ஆர்வமாக அப்பொலிவு வெளிப்படவேண்டும். இதை ஜனங்கள் உணருவதில்லை. ஏழைகளுக்காக, இந்தியப் பாமர மக்களுக்காக, இந்திய விடுதலைக்காக, சுதந்

திரத்துக்காக எவ்வளவு உற்சாகத்தோடும் ஆர்வத்தோடும் அரசியலில் குதித்தாரோ, அவ்வளவு உற்சாகத்தோடும் ஆர்வத்தோடும் அவர் தன் கட்சிக்காரர்களுக்காக வாதாடியிருப்பார். நீதிமன்றங்கள் அவரைக் கண்டு அலறவேண்டியதிருந்திருக்கும். ஏனெனில் தான் மேற்கொண்ட எக்காரியத்திலும் அவ்வாறு இறங்குவதே அவரது சுபாவம்.

அந்த ஆரம்ப நாட்களிலேயே இளம் வக்கீல்களாக இருந்த எங்களுக்கு, அவருடைய சாதாரண வெளித் தோற்றத்துக்குள்ளே மறைந்திருந்த சொல் வன்மையைப் பற்றி சந்தேகம் கிடையாது. 1916-லோ, அல்லது 1917-லோ அலகாபாத்தில் நடைபெற்ற அரசியல் கூட்டத்தில் தன் பேச்சைக் கேட்ட ஒவ்வொருவரையும் எவ்வாறு பிணித்து விட்டாரென்பது எனக்கு நன்ருக ஞாபகமிருக்கிறது. அந்த நாட்கள் அன்னிபெஸன்ட் அம்மையாரின் ஹோம் ரூல் கிளர்ச்சிக் காலம். அவருடைய பேச்சு, ஆவேசம், பெருந்தன்மை, அதற்கேற்ற தூய்மையான சொற்கள் யாவும் கேட்டவர் மனத்தில் ஆழமாகப் பதிந்தன. அந்தப் பேச்சு உண்மையான ஜவாஹர்லால் யார் என்பதை எங்களுக்கு வெளிப்படுத்திற்று. ஹோம்ரூல் கிளர்ச்சியில் முழு மூச்சாகக் குதித்துவிட்டார். பொங்கித் ததும்பும் தன் பேரார்வத்தை அதில் புகுத்திஞர். அவருடைய முறைகள், சட்ட பூர்வமாகக் கிளர்ச்சி செய்யவேண்டுமென்னும் பழைய அரசியல் வாதிகளுக்குப் பிடிக்கவில்லை. ஆனல் சம்பவங்கள் விரைந்து வந்தன. பஞ்சாப்பில் ரௌலட் சட்டமும் படுகொலைச் சம்பவமும் வேகமாய்ப் பின் தொடர்ந்தன. வெகு விரைவில் இந்திய அரசியற் புயலின் மத்திக்குச் சென்றுவிட்டார். இப்படியே ஜவாஹர்லாலின் காரியங்களைத் தொடர்ச்சியாகக் கூறுவது எனது உத்தேசமில்லை; அவசியமுமில்லை. அவரது சுய சரிதத்தில் பிசகில்லாமல் அவை விவரிக்கப்பட்டிருக்கின்றன. இந்தியப் பொதுவாழ்வில் அவர் முன்னணியிலிருந்தார். அலகாபாதி

லுள்ள நாங்கள், அவரை எங்களவராகக் கருதி அன்போடும் பூரிப்போடும் கவனித்தோம். இடையிடையே வெவ்வேறு காங்கிரஸ் கமிட்டிகளில் நான் அவருடன் சேர்ந்துழைத்திருக்கிறேன். உண்மையில் அவருக்குப் பிரத்தியேகமான வாழ்வென்பதே கிடையாது. நான் ஏற்கெனவே கூறியதுபோல அவருடைய வாழ்வே திறந்த புத்தகமாக இருந்திருக்கிறது.

நேரு, வாலிப இந்தியாவின் மனத்தைக் கவர்ந்துவிட்டாரென்று சொல்வது, சொல்லிச் சொல்லி நைந்த வாசகமாகி விட்டது. இளமை முறுக்கு நிறைந்த நேரு, எல்லா இளைஞர்களின் அன்புக்குப் பாத்திரமாக இருந்திருக்கிருர். வயது, அவருடைய இளமைப் பருவத்தை ஒன்றுஞ் செய்து விடவில்லை யென்று யாரோ கூறியது உண்மையே. இப்பொழுது அவருக்கு வயது 56. ஆயினும் அவர் வற்ருத இளமை பூண்டவராகத் தென்படுகிருர். இளைய இந்தியாவின் இயல்பான தலைவராகத்தான் உலகம் அவரைக் கருதுகிறது.

ஜவாஹர்லால் சீலம் வாய்ந்தவர். முழு விசுவாசம், தன்னலமற்ற தன்மை, பூரண நேர்மை ஆகியவைகளே அவருடைய தனிச் சிறப்புக்களென்பதில் சந்தேகமில்லை. அடுத்தாற்போல எல்லையற்ற ஆர்வங் கலந்ததும், எல்லாவற்றையும் மிஞ்சியதுமான தேசபக்தி. அரண்மனையொத்த வீட்டில் வளர்ந்தார். இங்கிலாந்தில் சீமான்கள் படிக்கும் பள்ளிக்கூடங்களில் படித்தார். இளமைப் பருவத்திலிருந்தே அவருக்கு மேனாட்டு வாழ்க்கைமுறை சகஜமாகி விட்டது. அழுக்கோ, வியாதியோ, நாற்றமோ அவரை அணுகவிடவில்லை. இந்த வகையில் அவரை அனேகமாய், கௌதம புத்தரோடு ஒப்பிடலாம். தன்னுடைய மகன் சித்தார்த்தன் வியாதியையோ, முதுமையையோ, சாவையோ கண்ணுறக் கூடாதென்பதற்காக அவருடைய தந்தை அதிகக் கவனம் எடுத்துக் கொண்டதாகச் சொல்லப்படு

கிறது. தன் பிள்ளையின் வாழ்நாள் ஒரே ஆனந்தக் களிப்பாயிருக்க வேண்டுமென்று நினைத்தார். ஆனால் மனித வர்க்கத்தின் நன்மையின்பொருட்டு மனித வர்க்க முழுவதின்பேரிலும் பூண்ட கருணை அன்பு பொங்கிட கௌதம புத்தன் தன் வாழ்வுச் சுகங்கள், குடும்பம், சொத்து, அனைத்தையும் உதறித் தள்ளிவிட்டான். அதேபோல, ஜவாஹர்லால் நேருவும், பாழ்பட்டு நின்ற, கொடுமைக்காளான—வறுமையிலாழ்ந்த—பல்லாயிரக்கணக்கான கிராமங்களிலிருந்து தன்னை நோக்கி தீனக் குரல்கள் கிளம்புவதைக் கண்டார். அவருடைய அந்தரங்க சுபாவத்திற்கு அக்குரல்களின் வேண்டுகோளுக்கு இணங்காதிருப்பதரிது. தீனக் குரல்களின் அழைப்புக்கிணங்கித் தனது யாவற்றையும் (அவருடைய அந்தஸ்தில் உள்ளவர் விரும்பிப் பேணுவன யாவையும்) உதறித் தள்ளினார்—வக்கீல் வாழ்க்கை, சொகுசான வீடு, பின்னும் என்னென்னவோ. அந்தக் கதை கேட்டாரைக் கரைத்துவிடும். அதையெல்லாம் இங்கு விவரிக்க வேண்டியதில்லை. வாழ்வின் நல்ல பொருள்களை அவர் விரும்பவில்லை என்பதல்ல விஷயம். அவரும் விரும்பத்தான் செய்கிறார். தூய்மையான, கலைமணம் கமழும் சூழ்புறத்தில் வாழ ஆசைப்படுகிறார். எளிய வாழ்வை எளிய வாழ்வுக்காக அவர் விரும்பவில்லையென்றே எண்ணுகிறேன். கிராமத்தில் கிடந்து புழுங்குவதற்கு அவருக்குப் பிரியமில்லை. தற்கால வசதிகளனைத்துமுள்ள வீடுகள், சுத்தம், சுகாதாரம், காற்றோட்டம் இவைகள் அவருக்கு மகிழ்ச்சியளிக்கின்றன. அவைகளை நன்கு அனுபவிக்கவும் செய்கிறார். ஆனால் அவருடைய இதயம், மகாத்மா காந்தியின் இதயம் போல கிராமங்களிலிருக்கிறதே யொழிய நகரங்களில் இல்லை. கிராமவாசியும் அவரைத் தனது நன்மையாளராகக் கருதி உணர்ந்துகொண்டான். நீரில் மூழ்கும் தருவாயிலுள்ளவன் தன்னைக் காப்பாற்றுபவனை எவ்வாறு இறுகப் பிடித்துக் கொள்ளுவானோ அப்படியே கிராமவாசி

யும் அவரைச் சதமென்று கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறான். அவருடைய துறவு மனப்பான்மையே இந்திய மக்களனைவரின் இதயபீடத்தில் அவரை அமரும்படி செய்கிறது என்று நான் நம்புகிறேன். இந்தியாவில், துறவுக்குத்தான் மதிப்பு. பணம் கவர்ச்சி செய்யலாம். ஆனால் கட்டுப்படுத்தாது. துறவுதான் பிறரைக் காந்தம்போலக் கவருவது. யாருடைய நன்மையை மனத்திற் கொண்டு விட்டாரோ அவர்களுக்காக எல்லாவற்றையும் ஜாவஹர் துறந்தார். அதற்கேற்ப அவர்களும் அவரைத் தங்களது உள்ளத்தில் என்றென்றும் நிலை நிறுத்திக் கொண்டார்கள். ஜவாஹர்லால் ஓர் இந்தியக் கூட்டத்தில் பேசும்போது, அதுவும் கிராமக் கூட்டத்தில் பேசும்போது, ஜனங்கள் அவரை எவ்வாறு நோக்குகிறார்கள் என்பதைக் கவனிப்பதே உண்மையில் உணர்ச்சியூட்டும் அனுபவம். அவர்கள் முகங்களில் காணப்படும் மகிழ்ச்சியை ஏறெடுத்துப் பார்த்தால் போதும். அவர்களது ஒளி வீசும் கண்கள், முக மலர்ச்சி இவைகளே நமக்கு ஒரு படிப்பாக இருக்கும். கொடுமையிலிருந்து தங்களை விடுவிக்க வந்தவராக அவரை நோக்குகிறார்கள். சுதந்திரத்துக்காகத் திரும்பத் திரும்ப அவர் ஜெயிலுக்குச் சென்றிருக்கிறார். அனேக வருஷ ஜெயில்வாசத்துக்குப் பின் அவர் வெளியில் வந்தாரானால், அப்பொழுது அவரது நாட்டு மக்கள் அவர்மீது பொழியும் அன்புக்குக் கங்கு கரை உண்டா ? இந்தியாவில் தோன்றிய மகான்கள், பெரிய மதாசாரியார்கள் நீங்கலாக உள்ள மற்றவர்களில் காந்திஜிக்கு அடுத்தபடியாக அவர்தான் மக்களது ஆர்வத்தையும் அன்பையும் தன்பாலிழுத்தவர்.

ஜவாஹர்லாலிடம் போய் நீங்கள் மதப்பற்றுள்ளவர் என்று கூறினால் முழுக்க மறுத்துவிடுவார். அவர் மதப்பற்றுள்ளவர் என்றால் அது அதிசயமாகத்தோன்றுமல்லவா. ஆனால், அனேகமாக அதுதான் உண்மை. அவருடைய திட்டமான நம்பிக்கைகள் என்ன என்பதெனக்குத் தெரி

யாது. அவர் பகுத்தறிவுவாதியாக இருக்கலாம். மனித வர்க்க முழுமைக்கும் பொது மதமான பழைய காலத்து இயற்கைவாதக் கொள்கையில் நம்பிக்கை கொண்டிருக்க லாம். சிறைக்கூடத்தில் நெடுநாளாக அடைபட்டுக்கிடந்த போது ஏற்பட்ட ஆழ்ந்த சிந்தனைகள், புதுக் கட்சிகளை, கருத்துக்களைக் கொடுத்திருக்கலாம். அவைகளை இன்னும் இவ்வுலகம் அறியாதிருக்கலாம். ஆனால் மதம் என்று எதை நாம் பொதுவாகக் கருதுகிறோமோ, அது அவருக்குச் சிரத்தை யூட்டுவதில்லை. அவர் கோவிலுக்குச் செல்பவ ரல்லர். பிரார்த்தனை செய்பவரல்லர். ராம நாமத்தை வணங்குபவரல்லர். பொது மேடையிலே பேசும்போது, எல்லாம் வல்ல இறைவன், தெய்வ இச்சை, குட்டிப் படை களான தேவர்கள், தேவதைகள் ஆகியவைகளைப்பற்றிக் குறிப்பிடுவது அவருக்குப் பிடிக்காதென்பதைக் கண்டிருக் கிறேன். கடவுளுக்கு எவ்வளவோ பெரிய பெரிய வேலைக ளிருக்கும்போது நாம் போய் நம்முடைய சில்லரை விஷயங் களைக் கொண்டுவிட்டு கடவுளைக் குறுக்கிடவேண்டாம் என்பது அவருடைய எண்ணம் போலும். சாதுத்தன்மை, பக்தி இவைகளைப்பற்றியும், சாது, பக்தர் என்று தம்மைச் சொல்லிக்கொள்பவரிடத்திலும் அவருக்கு அக்கரை கிடை யாது. கேட்பதற்கு முரண்பாடாகத் தோன்றும். இருந் தாலும் இந்தச் சொல்லின் உண்மையான பொருளின்படி ஜவாஹர் சமய வாழ்வு வாழும் மனிதராவார். பிறரது நன்மையின் பொருட்டு இடைவிடாத உழைப்பும், உழைப் பில் பற்றும், சொந்தக் கவலை, சுகம், ஆசைகள் முதலியன கருதாமையும், பற்றற்ற பணியும் ஆகியவைகளே, கீதா வாசகங்களின் பிரகாரம் சமயசாரம். இந்த வகையில் ஜவாஹர்லால் ஒரு சமயச் சார்பான மனிதர். இடைவிடாத் தொழிலே உருவெடுத்து வந்தவர். மனிதர்களை, ஓய்வில் லாத, விரைந்தோடாத நட்சத்திரங்களுக்கு ஒப்பிட்டான் கதே. நிச்சயமாக ஜவாஹர்லால் ஓய்வில்லாதவர். விரைவு

இல்லாதவரா என்பதுபற்றி எனக்கு அவ்வளவு நன்றாகத் தெரியாது. சில சமயங்களிலாவது திடீரென்று உணர்ச்சி வேகம் கொள்ளுபவர். ஆனால் காரியத்திலீடுபடுவதே அவரது சுபாவம். சோம்பலாயிருப்பதையும் இன்பத்திலீடு படுவதையும் அவர் வெறுக்கிறார். அவருடைய சக்தியோ அபரிமிதமானது. யாரையும் பிரமிக்கச் செய்துவிடும். ஆனால் அது முழுதும் சுயநலமற்ற பணியாகிவிடுகிறது. இந்திய சுதந்திரம் என்ற தெளிவான நோக்கத்தை அடைவதற்கு அச் சக்தி திருப்பப்பட்டிருக்கிறது.

பலவகையிலும் ஜவாஹர்லால் ஒரு கர்மயோகி என்றே கருதுகிறேன். பூரணமான கர்மயோகியாக அவர் இல்லாதிருக்கலாம். மனத்தின் சமபாவத்தையும் அமைதியையும் இழக்கும்படி அவருடைய வெறுப்பு விருப்புக்கள் செய்துவிடுகின்றன. அவர் நன்றாக வெறுக்கிறார். அதற்குச் சந்தேகமில்லை. அவருடைய பலஹீனங்களை இப்பொழுது இந்தியா முழுதும் அறியும். கட்டுப்பாடின்மையும் ஒழுக்கக் கேடும் காண நேரிடும்போது, பெரும் ஆவேசமூண்டவராகி விடுவார். ஆவேச மொழிகள் முழங்கும். ஆனால் அப்புயல் வெகு விரைவில் ஓய்ந்துவிடும். மேகங்கள் மறைந்துவிடும். மென்மை, மகிழ்ச்சி, நட்புக் கிரணங்கள் மீண்டும் ஒளி விடும். அவருடைய நண்பர்கள், காந்திஜி, காரியக் கமிட்டியிலுள்ள அவரது சகாக்கள் மற்றும் இதரர் யாவரும் அவருடைய இந்த சுபாவத்தோடு பழகிவிட்டார்கள். அவர் தான் நம்மிடையே உள்ள பெரிய சர்வ தேசீயவாதி. நாம், நம்முடைய உள்நாட்டு விஷயங்களில் கருத்தூன்றிக் கிடக்கையில், அவர் இன்னும் பரந்த அடிவானங்களைத் தாண்டிப் பரந்த கருத்துக்களை மேற்கொண்டிருக்கிறார். சம்பவங்களுக்கிடையே பாய்ந்து நிற்கும் சம்பந்தங்களென்ன? சக்திகள் ஒன்றையொன்று பாதிக்கின்ற வகை என்ன? என்பனவற்றை நன்கு ஆராய்ந்திருக்கிறார். இன்ன காரியங்கள் நடக்கப்போகின்றன என்று தெளிவாகவும் கூர்மையோடும்

முன்கூட்டியே சொல்லக்கூடிய உலக அறிஞர் சிலருள் அவரும் ஒருவரென நினைக்கிறேன். வெகு இடங்களுக்குப் பிரயாணம் செய்திருக்கிறார். ஐரோப்பாவிலும், அமெரிக்கா விலுமுள்ள முக்கியமான மனிதர்களோடு அவர் அளவு வேறு எவரும் தொடர்பு வைத்துக்கொள்ளவில்லை. உலகப் புகழ்பெற்று எல்லோருக்கும் தெரிந்தவர்களாக இருக்கிற மூன்று இந்தியர்களில் அவர் ஒருவர் என்று சொன்னால் அது சரியென்றே எண்ணுகிறேன். மகாத்மா காந்தி, ரவீந் திரநாத் தாகூர், ஜவாஹர்லால் நேரு ஆகிய மூவரைத்தான் சொல்லுகிறேன். இப்போது உலகயுத்தம் முடிந்துவிட்டது. இந்தியாவில் ஒரு புதிய திட்டம் கொண்டுவரப்படலாம். அப்போது ஜவாஹர்லால் புதியதொரு பதவியிலமர்ந்து சேவை செய்ய நேரிடலாம். இந்திய சுதந்திரப் போராட் டத்துக்கு மக்களைத் தட்டி யெழுப்புவதற்கும், இந்தியப் பொதுமக்களின் அபிப்பிராயத்தை ஒழுங்குபடுத்துதற்கும் அவருடைய சக்திகளில் பெரும்பகுதி இதுவரை செலவிடப் பட்டது. அந்தப் போர் இனிதாக நிறைவேறும் என்று ஆவலோடு நம்புகிறோம். சுதந்திரம் கிட்டிவிடும், சர்வ தேசங்களுக்கு மிடையே இந்தியாவும் தனக்குரிய இடத் தைப் பெறுமென்று நம்புகிறோம். சமாதான மகாநாட்டில் ஜவாஹர்லால் மூலமாக இந்தியா உருப்படியான முக்கிய யோசனைகளையும் காரியங்களையும் செய்யும் என்று நாம் யாவரும் எதிர்பார்க்கிறோம். தன் நாட்டின் சார்பாக அவர் பெரிய நாவலராக விளங்குவார். ஆனால், அதுவும் சோதனைக் காலமாகவே யிருக்கக்கூடும். அவர் எப்படிப் பேசினாலும் எத்தகைய யோசனைகளைக் கூறினாலும் இந்திய மக்கள் அவரை நிறைபோட்டுப் பார்க்கமாட்டார்கள். வெளி நாட்டார் அவ்வாறு செய்யக்கூடும். ஐரோப்பா, ஆப்பிரிக்கா கண்டங்களிலுள்ள ஒடுக்கப்பட்ட மக்களின் சார்பாகவும் அவர் பேசுவார் என்பதில் நமக்குச் சந்தேகமில்லை. இந்தியா வின் சுதந்திரத்தைப்போலவே பர்மா, மலேயா, இந்தோ-

சீனு முதலிய இடங்களின் சுதந்திரமும் அவருக்கு முக்கிய மானது என்பது தெளிவு. அப்போது நாம் பெருமை யோடும் அன்போடும் சர்வதேச மகாநாடுகளில் அவருடைய காரியங்களைக் கவனிப்போம். உள்நாட்டிலும் அவருடைய பேராற்றல் வெவ்வேறு புதிய துறைகளில் ஈடுபடலாம். காங்கிரஸால் ஏற்படுத்தப்பட்ட இந்தியத் திட்டக் கமிட்டி யின் தலைவராக இருந்து, வருங்கால இந்தியாவின் முக்கிய மான பிரச்சினைகளைத் தீர்ப்பதில் தனது தெளிவான அறிவை வெளிப்படுத்தினர். விடுதலைபெற்ற, பூரணப் பொறுப்பு வாய்ந்த இந்தியாவில் தன்னுடைய யோசனைகளை நடை முறையில் கொண்டுவருவதற்கும், உபாயங்களைக் காணவும் அவருக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும். இந்தியாவில் மட்டு மின்றி உலகமெங்கும் யுத்த பிற்காலச் சீரமைப்புத் திட்டங் களைப்பற்றிக் கேள்விப்படுகிறோம். யுத்த பிற்காலச் சீரமைப்புத் திட்டங்களை தேசமக்களின் பேராதரவு பெற்ற தேசீய அரசாங்கத்தால்தான் நடத்தமுடியுமென் பது யாவரும் ஒப்புக்கொள்ளும் விஷயம். அந்தத் தேசீய அரசாங்கமும் சீக்கிரம் ஏற்பட்டு, ஜவாஹர்லால் நேரு திட்டங்களை வகுக்கவும், நிறைவேற்றவும் போதுமான சந்தர்ப்ப வசதிகளைப் பெறுவார். பிற்கால இந்திய சரித் திரம் எழுதப்படும்பொழுது, வருங்கால சரித்திராசிரியன், அவரை, நம் தேசத்தை உருவாக்கிய பெரியோர்களில் ஒருவ ராக எடுத்துக் கூறுவான். சுதந்திரத்துக்காகப் பாடுபட் டவர் மாத்திரம் அல்லர், அதைப் பெற்ற பின்னர் அதை எப்படிப் பத்திரப்படுத்துவது, பலப்படுத்துவது என்பதை யும் நன்கு தெரிந்தவர் என்பதை எடுத்துக் கூறுவான்.

# சர்வதேசீயவாதி நேரு

**எப். ஆர். மொரேஸ்**

அனேக மாதங்களுக்கு முன்பு ஜவாஹர்லால் நேருவை ஒரு பிரத்தியேக விருந்தின்போது சந்தித்தேன். அப்பொழுதுதான் அவர் ஸ்பானிஷ் யுத்த முனையிலிருந்து திரும்பி வந்த சமயம். திரு. சேம்பர்லேன் துரை லண்டனுக்கும் பெரெட்டெஸ்காடனுக்கும் மூனிச்சுக்குமாக ஊசலாடிக் கொண்டிருக்கும்பொழுது பண்டித ஜவாஹர்லால் நேரு லண்டனிலிருந்து கொண்டு நெருக்கடி முதிர்வதைக் கவனித்து வந்திருக்கிறார்.

ஸ்பெயின் நிலைமை அவரைப் பெரிதும் பாதித்திருந்ததென்பது நன்றாகப் புலப்பட்டது. ரிபப்ளிக் கட்சியின் நியாயமே முன்னேற்றத்துக்கும் மனிதவர்க்கத்துக்கும் நன்மையாக அவர் மனத்துக்குப் புலப்பட்டது. யுத்த முனைக்குப் போனது பற்றியும் ரிபப்ளிகன் படைகளின் தீரம் உற்சாகம் பற்றியும் உணர்ச்சியோடு பேசிக்கொண்டிருந்தார்.

"வெடி மருந்தும் உணவும் கொடுத்தால் அவர்கள் ஜெயிக்காமலிருப்பதற்குக் காரணமேயில்லை" என்றார். யோசனையோடு பேசினாலும் குதூகலமாயிருந்தார். ஆம், அவர் லாபாஷனராவைச் சந்தித்திருக்கிறார். "குறிப்பிடத் தக்கவள்" என்றார். மேலும் அவளைச் சந்தித்ததுபற்றி விவரமாகச் சொன்னார். ஸ்பெயின் சோக நாடகம் அவரைப் பெரிதும் கவர்ந்திருந்ததென்பது புலனாயிற்று.

எட்டு மாதங்களாகவில்லை. பின்னுமொரு முறை அவரைப் பார்க்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. ரிபப்ளிகன் கட்சி தோற்றுவிட்டது. மாட்ரிட் தலைநகரிலிருந்து கொண்டு பிராங்கோ அதிகாரம் பண்ணிக் கொண்டிருந்தார். லாபாஷனரா நாடு கடத்தப்பட்டார். தூரகிழக்கில் எவ்வளவோ தடுத்தும், ஜப்பான் கொடிய நாசம் விளைவித்துக் கொண்டிருந்தது. சீனு முழுதும் துன்பக் கடலில் ஆழ்ந்திருந்தது. செக்கோஸ்லோவேகியா கொடுமைக்கு முன் தலை சாய்ந்து விட்டது.

இச் சம்பவங்களெல்லாம் நேருவின் மனத்தை எவ்வளவு தூரம் பாதித்தன வென்பது ஆச்சரியமாக விருந்தது. சாதாரணமாக யோசித்துப் பார்க்கிற இந்தியர்களுக்கு உலக விஷயங்களெல்லாம் என்னமோ கூத்துப்போல இருந்தன. நேருவுக்கோ தன்னைப் பெரிதும் பாதிக்கும் சொந்த விஷயங்களாக இருந்தன. "துன்பம் எங்கும் ஒன்று போலத்தானே இருக்கிறது. சீனு, செக்கோஸ்லோவேகியா, ஸ்பெயின் முதலிய நாடுகளிடம் பரிவு கொள்வதற்கும் உதவி செய்வதற்கும் இந்தியா மறுப்பானேன்" என்று அவர் அடிக்கடி சொல்வதுண்டு.

ஸ்பெயினிலிருந்து திரும்பியதும், ஸ்பெயினுக்கு உணவுக்கப்பல் அனுப்புமாறு பாலார்டுபையர் என்ற இடத்தில் பேசும்பொழுது கண்ணீர் வடித்துவிட்டார் என்று சொல்லக் கேள்விப்பட்டேன்.

சர்வதேச விஷயங்களில் அவருக்குள்ள ஈடுபாடு அவருடைய போக்கு முழுவதிலும் தோய்ந்திருக்கிறது. "நேரு இந்தியாவில் இல்லை. அவருடைய மனமும் இதயமும் வெளி நாடுகளிலிருக்கின்றன. ஸ்பெயின் ரிபப்ளிக் கட்சியின் தோல்வி அவருக்குச் சொந்த துக்கமாகிவிட்டது. அந்த வருத்தத்திலிருந்து அவர் இன்னும் மீளவில்லை" என்று எனக்கொரு பிரபல காங்கிரஸ்காரர் சமீபத்தில் சொன்னர். பம்பாயில் ஒரு தடவை கட்சிக் கூட்டம் நடந்து

கொண்டிருக்கையில் நிகழ்ந்த சம்பவத்தை ஒரு காங்கிரஸ் சோஷலிஸ்டு சொன்னது எனக்கு நினைவிருக்கிறது. "நாங்கள் ஏதோ ஒரு விஷயமாகப் பேசிக் கொண்டிருந்தோம். நேருவும் வந்திருந்தார். திடீரென்று எழுந்து நடந்து சென்று சைனுவின் இன்னல்களையும் படும் துன்பத்தையும் பேசினுர். 'நான் மாத்திரம் போகமுடிந்தால்' என்று திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டே யிருந்தார். எங்களுக்கு பிரமிப்பாக யிருந்தது. ஆனுல் அவர் பேச்சு ஒரே உருக்கமாக இருந்தது. நேருவிடம் அளவுக்கு மிஞ்சிய உணர்ச்சி உண்டு. சில சமயம் நாங்கள் திகிலடைந்து விடுவோம்" என்ருர்.

அவருடைய மன எழுச்சிகள் அவரது நுண்ணறிவை ஆளுகின்றனவோ! அநேக விதங்களில் அப்படித்தான். உதாரணமாக திரு. காந்தியிடம் அவர் கொண்டுள்ள விசுவாசம் உயர்ந்த மன எழுச்சியின் பாற்பட்டதே. ஆனுல் பெரும்பாலான உணர்ச்சியாளர்களைப் போலில்லாமல் நேரு தன்னுடைய மன எழுச்சிகளுக்குப் பகுத்தறிவுச் சாணை தீட்டிவிடுகிருர்.

இந்த இடத்தில் தான் அவர் வேறுமாதிரி மனிதராகப் போய்விடுகிருர். தன் மனத் துடிப்பின் வசப்பட்டு தான் செய்யுங் காரியங்களுக் கெல்லாம் காரண காரிய வொழுங்கைக் கற்பித்து விடுகிருர். அதன் பின் அவரை அசைப்பது முடியாமல் போய்விடுகிறது.

எங்கே மன எழுச்சியோடு நுண்ணறிவும் கூடி சூழ்ச்சி செய்கிறதோ, அதுவும் ஆழமான உணர்ச்சிகளும் உயர் தரமான கூரறிவும் உள்ள மனிதனிடத்தில் இது நிகழுமானுல், அங்கே அதன் சக்தி எதையும் மீறிவிடும். நேரு விஷயத்தில் இதுதான் பெரும்பாலும் உண்மை. இருந்தாலும் அவருடைய கூரறிவு அவருடைய மன எழுச்சிகளோடு மோதுவதாகச் சிலசமயம் நமக்குப் புலப்படும். அப்பொழுது அவர்படும் வேதனை கடுமையாக இருக்கும். ஏதாவ

தொரு பிரச்னை வந்துவிடும். அவ்வளவுதான், அவரைச் சந்தேகங்கள் மொய்க்க ஆரம்பித்துவிடும்.

தீர ஆராய்ந்து துணிதல், துணிந்த காரியத்தில் சடாரென்று இறங்கிச் செய்து முடித்தல் ஆகியவையே தலைவனது தனிக்குணங்கள். இக்குணங்களில் நேரு குறிதவறி விடுகிறார். காலதாமதம் பண்ணி காரியசித்தியை அடையப் பார்ப்பார்; காலம் கருதி சும்மாயிருப்பார்; தள்ளிப் போடுவார்; இதன் மூலம் வழிபிறக்காதா என்று முயல்வார்.

இதையொட்டி, அவருடைய சுயசரிதையிலிருந்து ஒரு பகுதியை இங்கு எடுத்துக் காட்டுவது நன்றாக யிருக்கும். "மிக முக்கியமான விஷயங்களில் நமது மனம் நமக்கு அதிக தூரம் வழிகாட்டவில்லை யென்பது எனக்கு அதிக உறுதியாகிறது. 'உனது இதயம் மாத்திரம் விரும்பவில்லையானால் உனது அறிவும் உன்னை நம்பவிடாது.' மன எழுச்சிகளே நமது பொதுப் பார்வையை ஆள்கின்றன; மனத்தை அதிகாரம் பண்ணுகின்றன. மதம், அரசியல், பொருளாதாரம் ஆகியவைகளைப் பற்றிய நமது பேச்சுக்கள் எழுச்சி அல்லது இயற்கையறிவை அடித்தளமாகக் கொண்டிருக்கின்றன. ஸ்காபெனூர் கூறியிருப்பதைப் போல தான் தீர்மானிப்பதை மனிதன் செய்துவிடக் கூடும். ஆனால் என்ன தீர்மானிப்ப தென்பதை அவனால் தீர்மானிக்க முடியாது."

இந்த முரண்பாட்டிலிருந்து நேரு கூட தப்பிக்க முடியாதது சோகமான விஷயமே. எப்பொழுது தப்பிக்கிறாரோ? தப்பித்துவிட்டால், அப்போது இந்திய சரித்திரம் வேறுவிதமாக இருக்கும்.

இதற்கிடையில் இந்திய அரங்கத்தில் மிகக் கவர்ச்சியான மனிதராக அவர் இருக்கிறார். பிரபு வீட்டுப் பிள்ளையாதலால் தாழ்ந்த நிலையிலுள்ளவர்களைக் கண்டால் ஏற்படக் கூடிய அருவருப்பும் சகியாமையும் கொஞ்சம் இருக்

கத்தான் செய்கிறது. பொதுஜனங்களுக்கோ, அவர், தம்மி லொருவராக இல்லை. அடியோடு மாறுதல் விரும்பும் அவருக்கு ஹாரோ, கேம்பரிட்ஜைப் பற்றிய பழைய நினைவுகள் மகிழ்ச்சி தரா.

அனேக ஆண்டுகளுக்கு முன்பு, ஸ்பெயின் நாட்டுப் பேராசிரியரும் அரசியல்வாதியுமான உயர்திரு. மடாரியகா தான் ஜினிவாவில் பண்டித மோதிலால் நேருவையும் பண்டித ஜவாஹர்லால் நேருவையும் சந்தித்த விவரத்தைச் சொல்லக் கேட்டது நினைவுக்கு வருகிறது. "அவர்கள் ஸ்பானியர்களைப்போல இருக்கிறார்கள்" என்று இரைந்தார். மேலும் "ஆ, என்ன இனிமையான பேர்வழிகள்! அதிலும் சிறப்பாக அவர் மகன். மகன் தகப்பனைக் காட்டிலும் புத்திசாலி, இல்லையா? நீ என்ன நினைக்கிறாய்?" என்று கேட்டார்.

'தகப்பனைக் காட்டிலும் புத்திசாலியா?' அநேகர் இதை மறுக்கலாம். ஆனால் இளைய நேரு அதிக நுட்பமானவரே. அவரைப் பொதுமேடையிலோ அல்லது வீட்டிலோ கவனியுங்கள். அவருடைய மெல்லிய உணர்ச்சி ததும்பும் கைகளைப் பார்க்கும்போது மடாரியகா நினைத்துக் கொண்டதுபோல அவர் ஒரு ஸ்பானியப் பிரபு போன்றிருக்கலாம். ஆனால் திடீரென்று அவர் மனப் போக்கு மாறக்கூடும். சில சந்தர்ப்பங்களில் அவருடைய மன எழுச்சிகள் அணையை உடைத்துக்கொண்டு பீறி வருகின்றன. அப்பொழுது மனத் தளர்வுக்கோ குதூகலத்துக்கோ வழி விட்டுவிடுகிறார்.

"ஆனந்தபவனில் அமிழ்ந்துவிட்டார். அந்தப் பெரிய வீட்டில் தன்னந்தனியாக இருக்கிறார். அவர் மனைவி இறந்து விட்டாள். தாய் இறந்து விட்டாள். அவர் மகள் வெளி நாட்டிலிருக்கிறாள். அவருடைய இரு சகோதரிகளும் அலகாபாத்தில் இல்லை. வெளியூர்களில் வாழ்கிறார்கள். அந்த வீடாகிய சமாதியில் தனியாக வாழ்கிறார்.

அவரைப் பார்ப்பதே வருத்தமளிக்கும்" என்றொரு காங்கி ரஸ்காரர் என்னிடம் கூறினார்.

இன்றைய நிலைமையில் நேரு காங்கிரஸுக்குள் சந்தோஷமாயில்லை என்ற எண்ணத்திலிருந்து நாம் தப்ப முடியவில்லை. அதற்கு வெளியே போய்விட்டால் அவர் சந்தோஷமாக இருப்பார் என்பது அர்த்த மல்ல. அவ ரில்லாத காங்கிரஸைக் கற்பனை செய்யமுடியாது. அவரில் லாத காங்கிரஸ் இராமனில்லாத இராமாயணம் போன் றது. காங்கிரஸின் அங்கம் அவர். அதற்கு வெளியில் அவருக்கு வாழ்வில்லை; இருப்பில்லை.

எனினும் சமீப கால நிகழ்ச்சிகள் அவருடைய மனத் தைப் புண்படுத்தி யிருக்கின்றன. அவருடைய நிலைமை யையும் மோசமாக்கி விட்டன. சர்வதேசீய விவகாரங்களில் அவருக்குள்ள சிரத்தை அவர் 'தப்பித்துக் கொள்கிறவர்' என்பதையா காட்டுகிறது? இல்லை என்றே கருதுகிறேன். அவருடைய அக்கறை உண்மையானது. அவருடைய எழுச்சிகள் காரண காரிய ஒழுங்கில் செல்பவை. அவருடைய உற்சாகங்களும் உண்மையானவை. அவை 'கணீர்' என்று ஒலிக்கின்றன. மலைகளையும் சாய்க்கும் நம்பிக்கையை அவர் பெற்றிருக்கிறார்.

அடியோடு மாறுதல் செய்ய விரும்பும் ஒவ்வொரு வரும், கடைசியில் மனத்தளர்ச்சியிலே முடிவுறுவார்கள். இவருக்கும் அப்படியோ? என அஞ்சுகிறேன். ஒரு நாள் அவரும் கூட 'மன உறுதியற்ற மிதவாதி' என்று ஏசப் படலாம். அப்படிப்பட்ட மோசமான காலமும் வருமா? அநேகமாக வராது. எனினும் இப்பொழுதே அத்தகைய சலசலப்பு கேட்கிறதே.........

# சோஷலிஸ்ட் ஜவாஹர்லால்

**ஆசார்ய நரேந்திர தேவ்**

ஜவாஹர்லால் இங்கிலாந்தில் மாணுக்கராக இருக்கும் பொழுதே அங்கு வாய்ப் பேச்சளவில் இருந்த சோஷலிஸம் அவருக்கு ஆசை காட்டிற்று. என்ருலும் 1926-27ல் அவர் ஐரோப்பாவில் பிரயாணம் செய்தபோதுதான் சோஷலிஸம் அவரைப் பெரிதும் ஆட்கொண்டது. ரஷ்யப் புரட்சி, அநேக அறிஞர் இதயத்திலும் நுண்ணுணர்வினர் மனத்திலும் ஆழமாகப் பதிந்துவிட்டது. பொதுமக்களுக்கு நல்வாழ்வு அளிப்பதற்காகவும் எல்லாவிதச் சுரண்டலை ஒழிப்பதற்காகவும் சோவியத் அரசாங்கம், சமுதாயத்தின் பொருளாதார அடிப்படையைத் திருத்திய பரிசோதனைகளும் அவர்கள் மனத்தில் பெரிதும் பதிந்தன. அரசியல் விடுதலையோடு கூடவே இப்பொழுதிருக்கும் பொருளாதார சமுதாயக் கட்டுக்கோப்பில் அடிப்படையான மாறுதல்களும் ஏற்பட்டாலொழிய அவ்வரசியல் சுதந்திரத்தால் பயனென்றுமில்லை என்ற முடிவுக்கு வந்துவிட்டார்கள். சமூகத்தில் காணப்படும் அநீதியும் சுரண்டலும் வறுமையும், துன்பமும் அவர்களைப் பரம வேதனைக்குள் ஆழ்த்தின. முதல் உலகப் போருக்குப்பின் குடியேற்ற நாடுகளிலேற்பட்ட பொதுஜன விழிப்பைக் கண்டதும், உலக அறிஞர்கள் இப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு வெறும் அரசியல் சுதந்திரம் மாத்திரம் போதுமா என்ற கேள்வியை தமக்கே போட்டுக் கொண்டார்கள். ரஷ்யச் சோதனைகள் இவர்

களுக்கு வாழிகாட்டின. இந்தியாவிலுள்ள நுண்ணறி வாளர்கள் யாவரும் சுயராஜ்யம் என்பது பொதுமக்களின் வாழ்வு நிலையைக் கொண்டு முடிவு செய்ய வேண்டியது என்று சொல்லத் தலைப்பட்டார்கள். சுதந்திரம் என்ற சொல்லுக்குரிய அரசியல் கருத்து ஒருபுறம் இருக்க அதற்குப் பொதுமக்களைத் தொடர்பு படுத்திப் பார்க்கும் கருத்தையும் புகுத்திக் காட்டினார்கள்.

1927ல் ஐரோப்பாவிலிருந்து திரும்பியதும் ஜவாஹர் லால் காங்கிரஸ் கொள்கையை ஒரு புதிய துறையில் திருப்பினார். அவர் பள்ளிக்கூட மாணவராக இருந்த நாட் களில் திலகரைப் பின்பற்றும் உறுதியான தேசீயவாதியாக இருந்தார். இப்பொழுது அவருடைய சோஷலிஸ்ட் கண் ணோட்டம் நிலைமைகளைப் புதிய முறையில் பார்க்கச் செய் தது. நாம் எந்த வகையான சுயராஜ்யத்திற்காகப் போரிட் டோம், அதை அடைவதன் மார்க்கம் என்ன என்பதே அவருடைய புதிய பிரசினையாயிற்று.

திடமானபிரச்னைகளை ஆராய்வதற்கு மார்க்ஸீயம் அவ ருக்கு ஒரு விஞ்ஞான மார்க்கத்தை அளித்திருந்தது. இந்த முறை மனிதர்களையும் சம்பவங்களையும் அலசி ஊடுருவிக் கவனிக்க ஆற்றல் அளிக்கிறது. இவ்விரண்டும் எந்தச் சூழ் நிலையிலிருந்து பிறந்தனவோ அதைக் கவனிக்கும்படி செய் தது. இவ்வித ஆராய்ச்சி மனிதனுக்கும் சம்பவங்களுக்கு மிடையே யுள்ள ஒற்றுமையை வெளிப்படுத்துகிறது. மனிதர்கள் சம்பவங்களை எப்படி உண்டாக்கினார்கள், சம்பவங்கள் மனிதர்களை எப்படி உண்டாக்கின என்பதை யும் காட்டுகிறது. அந்தந்த சரித்திர காலத்தில் ஒவ்வொரு சம்பவத்தையும் மனிதனையும் நன்குணர இவ்வாராய்ச்சி உதவுகிறது. இந்தக் கட்டுக்கோப்பு தனி நபருக்குரிய வேலை என்ன, அந்த வேலையினுடைய தன்மை என்ன என் பதையும் அறியச் செய்கிறது. இந்த விஞ்ஞான முறையை நமது பிரச்னைகளுக்கும் பயன்படுத்த ஜவாஹர் முயல்

கிறார். மனிதர்களையும் சம்பவங்களையும் ஒன்றுபடுத்திய படமொன்றை அவரால் கொடுக்க முடிகிறது. பொருள்களுக்குக் கொடுக்கக்கூடிய மதிப்பினால் நோக்கங்கள் எவ்வாறு வெளிப்படுகின்றன என்பதை அவரால் காட்ட முடிகின்றது. சரித்திரத்தை உருவாக்கும் சக்திகள் காண்பதற்கரியன. மனிதர்கள் அச்சக்திகளின் தோன்றி மறையும் அடையாளங்களாகவே இருக்கிறார்கள். அச் சரித்திர சக்திகளை ஜவாஹர் அறிய முயல்கிறார். வெளித் தோற்றங்களினால் அவர் ஏமாறுவதில்லை. ஆகவே, அவ்வெளித் தோற்றங்களையும் ஊடுருவி ஆழத்தில் சென்று அச்சரித்திர சக்திகளை உணர முயல்கிறார்.

நம்முடைய தேசீய லட்சியம் குடியேற்ற நாட்டு அந்தஸ்தா அல்லது பூரண சுதந்திரமா என்ற அடிப்படையான கேள்விக்குத் தெளிவான பதில் தேவையாக இருந்தது.

இக் கேள்விக்குத் தெளிவான பதில் ஒருபோதும் அளிக்கப்படவில்லை. அந்நிய ஏகாதிபத்தியத்தோடு சமாதானமும் உடன்படிக்கையும் ஏற்பட்டு விடும் என்ற ஆபத்தும் இருந்து வந்தது. ஆகவே சமாதானமும் பேரமும் முடிவு பெற்று புரட்சிகரமான நடவடிக்கைகளுக்கு ஒரு நிகழ்ச்சி முறையை ஏற்படுத்த வேண்டுமென்றால் அரசியல் லட்சியத்தின் இந்த அடிப்படையான கேள்வியைப் பற்றி ஒரு முடிவுக்கு வந்துவிட வேண்டியதாக இருந்தது. 1906-ல் சுதேசி இயக்க நாட்களிலே லோகமான்ய திலகர் தலைமையின்கீழ் ஏற்பட்ட தீவிரக் கட்சி இந்தக் கேள்வியைக் கொண்டு வந்தது. அதற்கப்புறம் அவ்வப்பொழுது இந்தக் கேள்வி கொண்டுவரப் பட்டாலும் பலன் ஒன்றும் ஏற்படவில்லை. 1927-ல் சென்னையில் காங்கிரஸ் கூடியபோது ஜவாஹர் இந்தக் கேள்வியைக் கொண்டு வந்து பூரண சுதந்திரமே நமது லட்சியம் என்ற தீர்மானத்தை எதிர்ப்பின்றி நிறைவேற்றினார். இருந்தாலும் பழைய கொள்

கையே நிலவி இருந்தது. அந்த வருஷம் காங்கிரசுக்கு மகாத்மா காந்தி வரவில்லை. அவருக்கு அந்தத் தீர்மானம் பிடிக்கவில்லை. கொள்கையை மாற்றாத வரை நிலைமை ஒன்றும் திருப்திகரமாக இல்லை. இந்தப் புதிய கொள்கையை காங்கிரஸ் ஏற்றுக் கொள்வதற்கு முன்பு நாட்டை அதற்காகத் தயார் செய்ய வேண்டியது அவசியம் என்ற எண்ணம் தோன்றியது. இதற்காகச் சிலருடன் சேர்ந்து ஜவாஹர்லால் 1928-ல் சுதந்திர இந்தியா லீக் என்ற ஸ்தாபனத்தை அமைத்தார். அதனுடைய நோக்கம் பூரண சுதந்திரம் மாத்திரம் அல்ல. இந்திய சமுதாயத்தில் சமூகப் பொருளாதார சமத்துவத்தையும் ஏற்படுத்துவது என்பது குறிப்பிடத்தக்கது. 1928-ல் கல்கத்தாவில் காங்கிரஸ் கூடியபோது கொள்கையைப்பற்றிய பெரிய விவாதம் ஏற்பட்டு அடுத்த வருஷத்திற்கு ஒத்திப் போடப்பட்டது. அடுத்த வருஷம் லாகூர் காங்கிரஸில் பரிபூர்ண சுதந்திரமே மாற்றமுடியாத லட்சியமாக ஆக்கப்பட்டது.

இந்த அரசியல் லட்சியத்துக்காகப் பாடுபட்டுக் கொண்டிருக்கும்போதே இந்தியா ஒதுங்கி நின்று வாழ வேண்டுமென்று ஒருக்காலும் ஜவாஹர் விரும்பவில்லை. தற்காலம் ஒருதேசம் மற்றொரு தேசத்தை நம்பி வாழும் காலம். சோஷலிஸ்டு ஆக இருப்பதினால் குறுகிய தேசீய மனப்பான்மை உடையவரல்லர். குடியேற்ற நாட்டு அந்தஸ்து என்ற லட்சியம் கைகூடினால்தான் இந்தியா பரந்த சர்வ தேசீய வாழ்வில் நேரடியான பங்கெடுத்துக் கொள்ளமுடியாது. இங்கிலாந்தில் உள்ள அரசியல் பொருளாதார முறை இந்தியரைக் கட்டுப்படுத்தியது. பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தைச் சேர்ந்தவர்கள் நமக்கு இனவகையிலும் மதத்திலும் மொழியிலும் அந்நியமானவர்கள். சாம்ராஜ்ஜியத்தில் நிலவும் அரசியல் பொருளாதார எண்ணங்களும் நமக்கு அந்நியமானவை. இந்தியா தொன்மையான நாகரிகம் வாய்ந்தது. மனித வளமும் பொருள் வளமும் நிறைந்

தது. சாம்ராஜ்ஜியத்தில் சேருவதனுல் இத்தகைய சிறப்பான தேசம் இங்கிலாந்தோடு இணைக்கப்பட்டுவிடும். சுதந்திரமாக ஆசியாவில் தனது கடமையைச் செய்யமுடியாது. இந்தியா ஒரு ஆசிய நாடு. ஆசிய மக்களிடையே ஏற்படும் சமஷ்டியில்தான் அதற்கு முக்கிய இடமுண்டு.

தொழிலாளர் ஸ்தாபனங்களை அமைப்பதில் ஜவாஹர் லால் முக்கிய பங்கெடுத்துக் கொண்டார். 1929-ல் முழு இந்திய தொழிற்சங்க காங்கிரசுக்குத் தலைவரானுர். தொழிலாளர்களுடைய போராட்டங்களில் காங்கிரஸ் அக்கரை கொள்ளுமாறுசெய்திருக்கிறுர். பொருளாதாரபிரச்னைகளை முன்னணிக்குக் கொண்டுவர முயல்கிறுர். 1931-ல் கராச்சி காங்கிரஸில் அடிப்படை உரிமைகளைப்பற்றிய தீர்மானத்தை நிறைவேற்றினுர். அவருடைய செயல்களால் நாட்டின் அரசியல் எண்ணங்கள் பெருமாறுதலை அடைந்தன. போராட்டத் திட்டத்தை காங்கிரஸ் மேற்கொள்ள வேண்டுமென்று அவர் வற்புறுத்தினுர். யுத்தத்தினுல் ஏற்படக்கூடிய ஆபத்தைப்பற்றி முதன்முதல் சிந்திக்கச் செய்தவர் அவரே. ஏகாதிபத்திய யுத்தத்தை எதிர்ப்பதற்கு நாட்டை ஆயத்தப்படுத்தினுர். சமஸ்தான மக்களுக்காகப் பாடுபட்டார். இந்தியாவை மேலும் மேலும் சர்வதேசிய அரங்கத்திற்குக் கொண்டு வந்தார். அதனுல் உலகத்திலுள்ள முன்னேற்றச் சிந்தனையாளர்களின் ஆதரவு இந்தியாவுக்குக் கிடைக்கும்படி செய்தார். சர்வ தேசிய விஷயங்களில் மிகுந்த அக்கரை எடுத்துக் கொள்ளுமாறு காங்கிரஸைத் தூண்டினுர். சர்வதேசிய விஷயமாக அவ்வப்போது நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் அவருடைய கைவண்ணங்களே. காங்கிரஸைப் பிரதிநிதியாகக் கொண்ட அதிகாரபூர்வமற்ற இந்தியாவுக்குத் தனியான வெளிநாட்டுக் கொள்கையை உண்டாக்கிக் கொடுத்தார்.

காந்திஜியின் பொலிவும் மகிமையும் அவருடைய தலைமையின் கீழ் காங்கிரஸ் துவக்கிய பொதுஜன இயக்கமும்

உலகத்தின் கவனத்தை இழுத்து இந்திய விவகாரங்களை வெளிநாடுகள் கவனிக்கும்படி செய்தன என்பதில் சந்தேகம் இல்லை. காங்கிரஸ் வெளிநாட்டு விவகாரங்களில் அதிகசிரத்தை எடுத்துக்கொள்ளும்படியாக ஜவாஹர்லால் தூண்டாவிட்டால், உலகத்தின் முன்னேற்ற சக்திகளோடு தானும் கலந்து கொள்வதற்கு இந்தியா தன்னுடைய அவாவைத் தெரிவிக்காதிருந்தால் உலகமும் இந்திய விஷயங்களில் பெரும் சிரத்தை காட்டியிருக்காது என்பதும் உண்மையே. உலகெங்குமுள்ள முன்னேற்றச் சிந்தனையாளர்கள் காந்திஜியின் புதிய பரிசோதனையில் அக்கறை கொண்டார்கள். இந்தியாவின் சுதந்திர உரிமையை ஆதரித்தார்கள். ஆனால் காந்திஜியைத் தேசியவாதியாகவும், ஜவாஹர்லாலை சோஷலிஸ்டாகவும், சர்வதேசியவாதியாகவும் கருதினார்கள். ஜவாஹர்லாலைத் தனது பிரதிநிதியாகக்கொண்ட வாலிப இந்தியா ஒதுங்கி நிற்கும் தனி வாழ்வில் நம்பிக்கை கொள்ளாது, சர்வதேசிய அமைப்பில் தனது கடமையைச் செய்ய ஆவல் கொண்டிருப்பதன் காரணத்தினலேயே உலகம் இந்திய விவகாரங்களில் மிகுந்த சிரத்தை கொண்டிருக்கிறது. ஜவாஹர்லால் இந்தியாவுக்களித்த மிகப் பெரும் சேவையில் இதுவே சிறந்தது என்பதை யாரும் மறுக்க முடியாது.

இந்தியாவை உலகமெங்கும் அறியச் செய்ததன் அடையாளமாக அவர் இன்று உலக மனிதராக இருக்கின்றார். ஜவாஹர்லாலின் செயல்கள் யாவும் காங்கிரஸோடு ஒட்டியவை. தன்னை முற்றிலும் அதனோடு ஐக்கியப்படுத்திவிட்டார். பொதுமக்களுடைய அன்பையும் விசுவாசத்தையும் காங்கிரஸ் பெற்றிருக்கிறது என்பதன் அடையாளமாக அவர் இன்று இந்தியப் பொது மக்களால் பெரிதும் பாராட்டப்படுகிறார். காங்கிரஸின் கொள்கைகளோடும் முடிவுகளோடும் அவர் அநேக தடவை மாறுபட்டிருக்கிறார். ஆனல் எப்பொழுது ஒரு தீர்மானம் முடிவு

செய்யப்பட்டுவிட்டதோ உடனே அதற்கு கட்டுப்பட்டு நடப்பார். "காங்கிரஸ் தவறு செய்யாது" என்று அவர் சொன்ன சொல் அவருடைய மனப்போக்கைக் காட்டுகிறது. 1937-ல் காங்கிரஸ் பதவி ஏற்பதை எதிர்த்தார். ஆனால் பதவி ஏற்பதென்று முடிவு செய்யப்பட்டதும் முடிவை ஏற்றுக்கொண்டார்.

இவ்விதமாகத் தன்னை முற்றிலும் காங்கிரஸோடு ஐக்கியப்படுத்திக் கொண்டதின் மூலமாக அதைத் தன் மனத்தின்படி பெரிதும் உருவாக்கி இருக்கிறார். எந்த சோஷலிஸ்டு கட்சியோடும் அவர் சேர்ந்து கொள்ளவில்லை. ஆகவே நாட்டிலுள்ள எல்லா புரட்சிச் சக்திகளுக்கும் சோஷலிஸ்டு சக்திகளுக்கும் பொதுவாக முன்னின்று ஆக்கமளிக்கிறார்.

இந்திய இளைஞர்களால் அவர் போற்றப்படுவதன் காரணம் இதுவே. சக்தியும் கவர்ச்சியும் உள்ள அவருடைய தோற்றப் பொலிவும், துணிந்த நெஞ்சும், ஆண்மையும், ஊக்கமும் எங்குமுள்ள வாலிபர்களை அவர்பால் இழுக்கின்றன. பஞ்சாபியர் முரடர்கள், வீறு கொண்டவர்கள்; பலத்தையும் சக்தியையும் பெருமையையும் விரும்புகிறவர்கள். அவர்களிடையே ஜவாஹருக்கிருக்கும் அபரிமிதமான செல்வாக்குக்கும் புகழுக்கும் இதுவே காரணம். பஞ்சாப், அரசியல் விழிப்பில் பின் நிற்பது; இருந்தாலும், பஞ்சாபியர் அவரிடம் பைத்தியம் கொண்டவர்களாக இருக்கிறார்கள். இந்திய அரசியல் பிரமுகர்களில் துணிகரத்தை விரும்புகிறவரும், தீரம், தியாகம், ஊக்கமான செயல் ஆகியவைகளைப் பாராட்டுகின்றவருமாக ஜவாஹர் இருப்பதினால்தான் பஞ்சாபியர் அவரை நேசிக்கிறார்கள் என்பதைத் தவிர்த்து வேறு காரணம் இருக்க முடியாது.

தற்கால எண்ணங்களோடு இந்தியாவும் ஒட்டிவரும்படி செய்தும், இணைத்தும், கூடுமானால் ஜனநாயகத்துக்கும் சோஷலிஸத்திற்கும் பாடுபடுகிற சர்வ தேசீய இயக்கத்

தோடு இந்தியாவை ஒன்று சேர்ப்பதுமே ஜவாஹரின் முக்கியமான வேலை. காங்கிரஸ் பல வகுப்புகளாலாகிய ஸ்தாபனம். சோஷலிஸ்டு அரசாங்கத்தை இதைக்கொண்டு ஏற்படுத்தமுடியாது. ஆனால் வலிமை மிகுந்த சக்திகள் மோதிக் கொண்டிருக்கும் தற்கால உலக நிலைமையில் காங்கிரஸைப் புதிய திசையில் திருப்பலாம். பூரண சுதந்திரம் என்ற தனது லட்சியத்தை அடைய வேண்டுமானால் சோஷலிஸக் கருத்துக்களை பெருத்த அளவில் அது தன்னதாக்கிக் கொள்ளவேண்டும்.

ஆகையினால் ஜவாஹர்லாலுடைய காரியங்கள் எல்லாம் சோஷலிஸ அரசாங்கத்தை ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கம் கொண்டவை என்று அவரைக் குற்றம் சாட்டமுயல்வது தவறாகும் என்று நினைக்கிறேன். தன்னை சோஷலிஸ்டு என்று கூறிக் கொள்ளுகிறார். ஜனநாயகம் வேண்டும், பொதுமக்கள் வாழ்வு மேன்மையுற வேண்டும் என்ற எண்ணங்களை அடிப்படையாகக் கொண்டே அவர் எல்லாக் காரியங்களையும் மேற்கொள்ளுகிறார். எந்த அரசியல் தத்துவத்தோடும் அவர் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவில்லை. எந்தக் கட்சிக்கும் அவர் தலைவராக இருக்கத் தகுதியற்ற சுபாவமுடையவர். விஞ்ஞான ரீதியில் சோஷலிஸத்தின் அடிப்படை உண்மைகளை நம்புகிறார். ஆனால் மார்க்ஸ், லெனின் கூறுபவைகளை வேதவாக்காக எடுத்துக்கொள்ள அவர் தயாராக இல்லை. சிறிதும் இணங்கிவராத நோக்கங்களை அவர் ஒப்புக்கொள்வதில்லை. சமூக நலனைத் தரும் கருத்துக்களைச் சுதந்திரமாக ஆராயக்கூடிய நிலைமையில், தான் இருப்பதாக அவர் கருதுகிறார். அவ்வப்பொழுது கிடைக்கும் அனுபவங்களுக்கேற்ப தனது கருத்துக்களை மாற்றிக் கொள்கிறார். ஏட்டுச் சுரைக்காய் கறிக்குதவாது என்பதை நன்கறிவார். அதைக் காட்டிலும் பிரத்தியட்ச நிலைமைகளே மிகவும் சக்தி வாய்ந்தவை என்று நினைக்கிறார். பொருளாசையே முக்கிய

சக்தியாக இருக்கின்றது என்பதையும் ஒவ்வொரு யுத்தமும் பொருளாசையை அரசாங்கங்களிடையே தூண்டியிருக்கிறது என்பதையும் கடந்த 25 வருஷ சரித்திரம் காட்டியிருக்கிறது. சமய சந்தர்ப்பம் இல்லாமல் எந்த நேரமும் புரட்சிச் சொற்றொடர்களை உபயோகிப்பவர்களையும், நாடு புரட்சியை நெருங்கிக் கொண்டிருக்கிறதென்று சதா சொல்லிக் கொண்டிருப்பவர்களையும் கண்டால் அவருக்கு மிகுந்த எரிச்சல் உண்டாகும். எப்பொழுதோ கிடைக்கப் போகும் கோடி செல்வத்துக்காக அடுத்த நிமிஷம் கிடைக்கப்போகும் காணிச் செல்வத்தை இழக்கமாட்டார். சோஷலிஸத்தில் அவர் முன்பு கொண்டிருந்த வேகம் சமீபகாலத்தில் நிச்சயமாகத் தடைப்பட்டு விட்டது. சமீப காலத்திய உலக நிகழ்ச்சிகள் அவரைச் சாந்தப்படுத்தி விட்டன. மெதுவாகப்போகிறார். 1936 - 38ல் அவர் கொண்டிருந்த ஆவேசத்தை இப்பொழுது அவர் காட்டுவதில்லை.

இவ்விதமாக நேரு எந்தக் கட்சிப் பிரிவினையையும் சேர்ந்தவரல்லர். நம்பிக்கை உடையவர். அவருடைய நம்பிக்கை மதச் சார்பற்றது. இயற்கையை மீறிய சக்தியில் அவருக்கு நம்பிக்கை கிடையாது. அவர் விஞ்ஞானக் கண்ணோட்ட முடையவர். தத்துவ விசாரணையிலோ ஆன்மீக ரகசியங்களிலோ நம்பிக்கை உடையவரல்லர். அரசியல் பிரச்னையை மதப்பற்றோடு அல்லது மனவேகத்தோடு அவர் அணுகுவதில்லை. ஸ்தாபன ரீதியில் அமைந்த மதம் பிற்போக்குத் தன்மைக்கு ஆதரவளிக்கிறது என்றும் மனிதர்கள் வாழ்வில் முன்னேறுகின்றஆசையை தடைசெய்கிறதென்றும் கருதுவதால் அதை வெறுக்கிறார். சமுதாயத்தில் தாழ்ந்த நிலையில் உள்ளவர்கள் தங்களுடைய நிலைமையைச் சகித்துக் கொள்ளுமாறு செய்வதே மதத்தின் வேலையாக இருக்கிறது. தனி மனிதர்களுடைய நடத்தையை மேன்மைப் படுத்துகிற தூயமத வாழ்வைப் பற்றி அவருக்கு வெறுப்புக் கிடையாது. நல்லொழுக்கமான நடத்தை

தேவை என்று நம்புகிருர். மனிதனை மனிதனுக மதிக்கும் உணர்ச்சி அவரிடம் அதிகமாயிருக்கிறது. சமூக முன்னேற்றத்திற்கான லட்சியங்களில் அவருக்கு நம்பிக்கை உண்டு. ஜனநாயகத்தையும் சுதந்திரத்தையும் அடைவதற்காகத் திட்டமிடப்பட்ட வாழ்க்கை தேவை என்று நம்புகிருர். ஆனால் அதற்காக எல்லோரையும் ஒன்று போல ஆக்க முயலுவதை வெறுக்கிருர். திட்டமிடப் பட்டுள்ள பொருளாதார அமைப்பையும் தனி நபர் சுதந்திரத்தையும் எவ்வாறு இணைப்பது, எந்த அளவில் இவைகளை வைத்துக்கொள்வது என்பதைக் காணமுற்படுகிருர் உற்பத்தி சாதனங்களைப் பொதுவுடைமையாக ஆக்கினுலன்றிப் பொதுமக்களுக்கு பொருளாதார சுதந்திரம் கிடைப்பதரிது என்று எண்ணுகிருர். ஆனால் உற்பத்திச் சாதனங்களைப் பொதுவுடைமை யாக்கும்பொழுது தனி மனித சுதந்திரத்தில் எவ்வளவு தூரம் கைவைக்காமல் செய்ய முடியுமோ அவ்வளவு நல்லது.

பாதுகாப்பு வேண்டுமா அல்லது சுதந்திரம் வேண்டுமா? என்ற நிர்ப்பந்தம் ஏற்படும்பொழுது மக்கள் பாதுகாப்பையே வேண்டுமென்பார்கள் என்பது தெளிவு. ஆகவே பொருளாதாரப் பாதுகாப்புணர்ச்சியற்ற சுதந்திரம் உண்மையான சுதந்திரம் ஆகாது. ஆனால் முதலாளித்துவ அமைப்பில் இதை ஏற்படுத்த முடியாது. அவரவர் இஷ்டப்படி தொழில் முயற்சியில் ஈடுபடும்படி விட்டுவிடுவதனுல்தான் சுதந்திரம் நிலைக்கும் என்று சிலர் கூறுகிருர்கள். பொருளாதார வாழ்வைக் கட்டுப்படுத்தினுல் அரசாங்க நிர்வாகத்தில் அதிகார வெறி அதிகமாகி தனி நபர் சுதந்திரத்தை அழித்துவிடும் என்று அவர்கள் கூறுகிருர்கள்.

தொழில் முயற்சியில் இச்சைப்படி விடுவதை ஜவாஹர்லால் சம்மதிக்கவில்லை. அரசாங்கத்தின் மூலமாகவோ அதிகார வர்க்கத்தின் மூலமாகவோ வேறு பொருளாதாரத்

திட்டம் செய்தல் இயலும் எனக் கருதுகிறார். அரசாங்கத்தின் முடிவுகளை நிறைவேற்றுவதற்கு நிர்ப்பந்தம் அவசியம் என்பதையும் ஒப்புக் கொள்ளுவார். பொது ஜனங்களிடையே காணப்படும் தொழிலின்மையும் வறுமையையும் முதலாளித்துவ அமைப்பினால் தீர்க்க முடியாது என்பதை நன்றாக அறிகிறார். பொருளுற்பத்தியில் குழப்பம் உண்டானால் சமுதாயத்திலும் அது குழப்பத்தை உண்டாக்கும். ஒரே மாதிரியான பொருளாதார அமைப்பைக் கொண்டு வராமல் கலப்பு முறையை அவர் ஏற்படுத்தலாம். ஜனநாயக உணர்ச்சியை ஊட்டுவதற்காக கூட்டுறவுச் சங்கங்கள், தொழிற் சங்கங்கள், பொதுச் சங்கங்கள் முதலியவற்றை ஏற்படுத்தக் கூடும். பொருளாதாரத் துறையில் அவர் மேற்கொள்ளும் காரியங்கள் அனைத்தும் பாதுகாப்பையும் சுதந்திரத்தையும் கொடுக்கக் கூடியனவாக இருக்கும். பொருளாதார வாழ்வைச் சீர்படுத்துவது எளிதான காரியம் அல்ல. அது எண்ணற்ற கஷ்டங்கள் நிறைந்தது. சிறந்த மேதைகள் இதற்கொரு வழி காண்பதில் ஈடுபட்டிருக்கிறார்கள். உண்மையான ஜனநாயக வாழ்வு நிலைக்க வேண்டுமென்றால், மனிதனை மனிதனாக மதிக்கும் உணர்ச்சி பாதுகாக்க வேண்டுமென்றால் பொருளாதாரப் பிரச்சினையை எப்படியும் தீர்க்க வேண்டும்.

நான் ஏற்கெனவே கூறியபடி ஜவாஹர்லால் எந்த சோஷலிஸ்டு கட்சியையும் சேர்ந்தவரல்லர். அவருடைய சோஷலிஸ தத்துவத்தைச் சுருக்கமாகச் சொல்லச் சொன்னால், அதை "ஜனநாயக சோஷலிஸம்" என்று கூறுவேன். சோஷலிஸ லட்சியங்களே மனித மதிப்பைக் காப்பாற்றுகின்றன. அவைகளின்றி சுதந்திரமான கூட்டுறவு வாழ்க்கை ஏற்படமுடியாது. ஆகவே, அவருடைய செயல்கள் அனைத்தும் சோஷலிஸ லட்சியங்களால் தூண்டப்பட்டவையாக இருக்கின்றன.

இந்தியாவில் ஜமீன்தாரி முறையை அவர் எடுத்து

விடுவார். உழுவனுக்கும் அரசாங்கத்துக்கும் இடையிலுள்ள வகுப்பை நீக்கிவிடுவார். ஆனால் தற்சமயத்துக்கு முக்கியத் தொழில்களை தேசிய மயமாக்குவதோடு அவர் திருப்தியடையக்கூடும். தனி நபர்களும் தொழிலில் ஈடுபட இடங்கொடுத்தாலும் அங்கும் கட்டுப்பாடுகளை ஏற்படுத்துவார். பொது மக்களுக்கு கூடுமான அதிக அளவில் சுதந்திரமும் கண்ணியமும் கூடிய நல்வாழ்வைக் கொடுக்க ஆசைப்படுகிறார். பொருளாதாரத் திட்டம் இல்லாமல் பொது மக்களுக்கு பொருளாதார சுதந்திரம் கிட்டாது. இதற்காக அரசாங்க நிர்ப்பந்தத்தையும் அவசியமான தீமை என்று ஓரளவு வைத்துக் கொள்வார். முக்கியமாக அவர் ஒரு ஜனநாயக வாதி. எந்தக் காரணத்தைக் கொண்டும் ஜனநாயகத்துக்கு இடையூறு ஏற்படாதவாறு கவனித்துக் கொள்வார். சர்வ தேசிய அரங்கில் எல்லா தேசங்களுக்குமிடையே சமாதானமும் சுதந்திரமும் முன்னேற்றமும் நிலைப்பதற்காகப் பாடுபடுவார். அவருடைய எண்ணத்தையும் செயலையும் தூண்டுகின்ற கொள்கை இதுவே.

# சுய சரித்திரம்

## காலஞ் சென்ற மகாதேவ தேசாய்

ஜவாஹரின் சுய சரித்திரத்தை மொழிபெயர்க்கும் வேலையை மேற்கொண்டபோது அதை ஒரு பெரிய பாக்கியமாகவே கருதினேன். அப்போது நான் இருவகையான குற்றச் சாட்டுகளைச் சமாளிக்க நேர்ந்தது. ஒன்று எனது நண்பர்களிடமிருந்து வந்தது. காந்திஜீக்கு விரோதமான பிரசாரத்துக்கு ஒத்தாசை செய்யும் வேலையில் நான் இறங்கி விட்டதாக அவர்கள் கூறினார்கள். இன்னொன்று தங்களை சோஷலிஸ்டுகளென்று கூறிக் கொள்பவர்களிடமிருந்து வந்தது. காந்தீயத்துக்குச் சரியான அறைகூவல் போன்று இருக்கிற ஒரு நூலை நான் எங்கே திரித்துப் புரட்டி அதில் என்னுடைய காந்தீயக் கருத்துக்களையேற்றி அதன் வேகத்தைக் குறைத்து விடுவேனோ என்பது அவர்களுடைய குற்றச்சாட்டு. நல்ல வேளை, இவ்விரு குற்றச்சாட்டுகளுக்கும் இடமில்லாதபடி வெற்றிகரமாக அம் மொழிபெயர்ப்பை முடித்தேன். அதிகமான வேலைப் பளுவுக்கிடையே இதற்கும் எனது அரிய நேரத்தைச் செலவிட்டேன். நண்பனுக்குரிய பக்தியோடும் விசுவாசத்தோடும் அவ் வேலையை அணுகினேன். இந்தத் தலைமுறையிலும் வருகின்ற தலைமுறையிலும் மக்கள் மனத்தைப் பெரிதும் கவரக்கூடிய ஒரு நூலை ஆங்கிலமறியாத குஜராத்திகளுக்கு என்னையன்றி

வரை யாவரும் ஏற்றுக்கொள்ளத்தக்க முறையில் நன்கு முடித்தேன்.

பண்டித ஜவாஹர்லாலின் புத்தகம் காந்திஜீக்கு விரோதமான பிரசாரமோ அல்லது காந்தீயத்துக்கு அறை கூவலோ அல்ல. உண்மையில் அந்நூலில் அநேக பக்கங் களில் காந்திஜீயின் வாழ்வும் சிந்தனையும், நல்லெண்ணத் தோடும் பக்தியோடும் போற்றி ஆராயப்பட்டிருக்கின்றன. காந்திஜீயை அறிந்து பின்பற்றுகிறவர்களும், அறியாது பின்பற்றுகிறவர்களும் யாரும் அவ்வளவு நன்ருக எழுத முடியாது. முயன்ருலும் அதற்கு இணையாக எழுதமுடி யாது. அப்படியாஞல் அதை மிஞ்சப் போகிறதெங்கே? காந்திஜீயைப் பற்றிய குற்றச் சாட்டுகளும் இருக் கின்றன. காந்திஜீயின் செயல்களையும் வேலைத்திட்டத்தை யும் தத்துவத்தையும் கடுமையாகத் தாக்கி யிருக்கிருர். சில இடங்களில் கண் மூக்குத் தெரியாமலும் தாக்கி யிருக் கிருர். திறந்த மனத்தோடும் நல்ல நோக்கத்தோடும் இவ் வாறு தாக்கி யிருப்பதைக் காந்திஜீயைப் போல வேறு யாரும் அவ்வளவு நன்ருகப் பாராட்ட மாட்டார்கள். தம் முடைய வேலைத் திட்டத்தையும் தத்துவத்தையும் ஆரா யாது குருட்டுத்தனமாக அப்படியே ஏற்றுக் கொள்வதைக் கண்டுதான் காந்திஜீ காங்கிரஸை விட்டு விலகிஞர். பெரும் பாலான நமது இளைஞர்களின் மனத்திலுள்ள உணர்ச்சி களை அவர்களால் கூறமுடியாத விதத்தில் நன்ருக பண் டித ஜவாஹர்லால் கூறியிருக்கிருர். இதன் மூலம் நாட்டுக் கும் காந்தீயத்துக்கும் ஒப்பற்ற சேவை செய்திருக்கிருர். காந்திஜீ எந்தக் கொள்கைகளுக்காகப் பாடுபடுகிருரோ அவை நிலைத்திருக்க வேண்டுமாஞல் எவ்வளவு கடுங்குற் றச் சாட்டுகளையும் மீறி அவை நிலைத்து நிற்கவேண்டும். பண்டித ஜவாஹர்லால் காதியில் நம்பிக்கை வைத்திருப் பதைப் பற்றி காந்திஜீ 'ஹரிஜன்' பத்திரிகையில் இவ் வாறு எழுதிஞர்: "பண்டித ஜவாஹர்லால் இவ்வாறு நம்

பிக்கை கொண்டிருப்பது ஒரு பெரிய ஆறுதலான விஷயம். அதைப்பற்றி மேலும் ஆராய்ந்த பிறகு காதிக்கு விரோத மாகக் கிளம்புவது அவசியமென்று அவர் கருதினால் காதி ஊழியர்கள் என்ன செய்யவேண்டும்! காதியைப் பற்றியும் அதனால் எவ்வளவு நன்மைகள் விளையுமென்பதைப் பற்றியும் பதினாறு வருஷ அனுபவம் அடைந்த பிறகு நமக்குப் போதுமான ஊழியர்கள் இருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். காதித் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்து நிறைவேற்றிப் பார்த்த அனுபவத்தின் பேரில் அவர் கள் காதியில் நம்பிக்கை வைத்துள்ளார்கள் என்று நினைக் கிறேன். ஆனால் அது இன்னும் பிறருடைய வாசகங் களினால் ஏற்பட்ட நம்பிக்கையாக இருக்குமானால், என் னோடு காதியும் இறந்துவிடுமென்றும் அச்சமயத்தில் உடைத்தெறியப்படும் ராட்டைகள் எனது உடலை எரிப் பதற்குப் போதுமானதாக இருக்குமென்றும் ஒரு பிரபல பத்திரிகைக்காரர் கூறிய வார்த்தைகள் சந்தேகமில்லாமல் உண்மையாகி விடும்.''

இந்த மேற்கோளில் காதி என்ற சொல் இருக்குமிடத் தில் 'அஹிம்சை' அல்லது 'சத்தியாக்கிரகம்' அல்லது 'சத்தியாக்கிரகக் கொள்கை' என்ற சொற்களைப் போட வேண்டும். அப்பொழுதுதான் அன்பும் மதிப்பும் உள்ள ஜவாஹர்லாலைப் போன்றவர்களுடைய இதமான குற்றச் சாட்டுகளையும் பிறரது விரோதக் குற்றச் சாட்டுகளையும் எவ்வாறு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நமக்குப் புலப்படும்.

ஆனால் ஜவாஹருடைய நூல் காந்திஜீயைப் பின்பற்று கிறோமென்று சொல்லிக்கொள்கிறார்களே அவர்களுக்கு ஒரு அறைகூவலாகும். ஜவாஹர்லால் கூறுவதுபோலக் "குருட்டுத்தனமாகக் காந்திஜீயைப் பின்பற்றுகிறவர்களுக் கும் முதுகெலும்பில்லாதவர்களாய் ஒழுக்கமும் நெஞ்சி லுரமும் நேர்மைத் திறமும் இல்லாதிருப்பதே பக்தியின்

வெளித் தோற்றம் என்று நினைப்பவர்களுக்கும் இந்நூல் ஓர் அறைகூவலாகும். இவர்கள் சக்தியற்ற சமாதானப் பிரியர்களாகவோ அல்லது கொடுமையை எதிர்க்க மாட்டோம் என்று கூறுகிற டால்ஸ்டாய் வாதிகளாகவோ அல்லது கண்கூடாகக் காணப்படும் வாழ்வோடும் உண்மையோடும் தொடர்பில்லாதவர்களாகவோ இருக்கிறார்கள். இவர்களைச் சுற்றி ஒரு கோஷ்டி கூடிவிடுகிறது. இருக்கிற நிலைமையைச் சிறிதும் மாற்றக்கூடாது என்பது இவர்களது விருப்பம். இதற்காக இவர்கள் அஹிம்சைப் போர்வையில் புகுந்து கொளகிறார்கள்," என்று ஜவாஹர்லால் இவர்களைப்பற்றிக் கூறுகிறார். நம்மில் யாருக்கேனும் இவ் வருணனை பொருந்துமானால் அவர்கள் இந்த அறைகூவலை ஏற்றுக்கொள்ளவேண்டும். நீங்கள் சொல்வதை நிரூபியுங்கள் என்று அவரைக் கேட்காமல் தங்கள் வாழ்க்கையின் மூலமாக அவருடைய வார்த்தைகளைப் பொய்ப்படுத்தட்டும்.

காந்திஜீயின் வாழ்வையும் எண்ணங்களையும் குறை கூறுவதாலும், காந்தீயத்தையோ அல்லது அவரைப் பின்பற்றுகிறதாகச் சொல்லிக்கொள்பவர்களையோ அறைகூவுவதாலும் மாத்திரம் இப்புத்தகம் மேன்மையுள்ளதென்று கூறிவிட முடியாது. அவருடைய சுய சரித்திரம் அசாதாரணமான வாழ்வைப்பற்றிக் கூறுகிறது. நல்ல அபிவிருத்தியும் வளர்ச்சியுமுடையது அவ்வாழ்வு. அவ்வாழ்வு இன்னும் வளர்ந்துகொண்டிருக்கிறது. "சதா வளர்ந்து கொண்டிருப்பதுபோன்ற உணர்ச்சி என்னுள் இடையறாது இருந்து வருகிறது. அவ்வுணர்ச்சி இப்பொழுதும் இருக்கிறது. செயல்களில் ஈடுபடுவதற்கும் புத்தகங்களைப் படிப்பதற்கும் பொதுவாக வாழ்க்கையை ரசிப்பதற்கும் மேன்மேலும் ஊக்கங்கொடுப்பது அவ்வுணர்ச்சியேயாகும்" என்று அவர் கூறுகிறார். அவரைப்போல் நம்மில் எத்தனை பேர் தங்களைப்பற்றி இவ்வாறு கூறிக்கொள்ள இயலும்? பதினைந்து வருடகாலம் போராடியபிறகு நம்மில் பெரும்

பாலருக்கு 46 வயதுக்குமேலே களைப்பும் தளர்ச்சியும் உண்டாகி விடுகிறது. அநேகர் வளர்ச்சி குன்றியது போன்ற உணர்ச்சி பெற்றுவிடுகிறார்கள். ஆனால் இங்கே ஒரு அற்புதமான வாழ்க்கை வரலாற்றைப் பார்க்கிறோம். இவர் எல்லோரையும் போலப் போராடியிருக்கிறார் ; கஷ்டப்பட்டிருக்கிறார். அதற்காக வாய்க்குள் முணங்கவில்லை அல்லது வாய்விட்டு அலறவுமில்லை. அவரை விதி, இரத்தம் சிந்தும்படி அடித்திருக்கிறது. அதனால் அவரது தலை வணங்கிவிடவில்லை. கடைசிவரை வணங்கப்போவது மில்லை. அவருக்கு "வாழ்வு எவ்வளவோ ருசியாக யிருக்கிறது. படிப்பதற்கு எவ்வளவோ இருக்கிறது, ஈடுபடுவதற்கு எவ்வளவோ காரியங்கள் இருக்கின்றன. உழைப்பும் வீரமும் நிறைந்த வாழ்வைக் கொடுத்ததற்கும் "எதற்கும் தோல்வியுறாத தனது ஆன்மாவுக்காகவும்" தேவதைகளுக்குத் தனது வந்தனத்தைச் செலுத்துகிறார், அத் தேவதைகள் யாராவது இருப்பார்களானால். இங்கிலாந்துக்குச் செல்வதற்குமுன் சிறுபையனாக இருக்கும்பொழுதே இவர் ஒரு ஆங்கில ஆசிரியரிடம் கல்வி கற்றார். அவ்வாசிரியர் புத்தகங்களைப் படிப்பதில் இவருக்கு விருப்பத்தை உண்டாக்கினார். அப்பொழுதே டுமாரியர் எழுதிய 'பீட்டர் இப்பட்ஸன்' போன்ற நூல்களைப் படிப்பதில் பெருமகிழ்ச்சி யடைந்தார். 'பீட்டர் இப்பட்ஸன்' என்ற நூலை வாசித்தது "இன்னும் நன்றாக நினைவிலிருக்கிறது" என்று கூறுகிறார். 'டுமாரியர்', 'பீட்டர் இப்பட்ஸன்' என்ற நூலில் இவ்வாறு கூறுகிறார். "இதை நான் நன்கறிவேன். ஒருவன் இம்மண்ணுலக வாழ்வை முழுவதும் எவ்வளவு நன்றாக உழைத்து வாழ்கிறானோ அவ்வளவு எல்லோருக்கும் நல்லது. எல்லாவற்றிற்கும் அடிப்படையாக இருப்பது அதுவே.........நாம் பெறும் அறிவு முழுவதும் இம் மண்ணுலகத்திலிருந்தே கிடைக்க வேண்டியதிருக்கிறது. இப்போதுள்ள அண்ட கோளங்களின் நியதிப்படி நாம் வசிக்கும் பூமியே புண்ணியம்

செய்ததாக இருக்கின்றது. கடவுளர்களுடைய அனுக்கிரகம் பெற்றதாக இருக்கின்றது. இன்னும் அனேக கோடி வருஷங்களுக்கு இப்படித்தானிருக்கும். இன்னும் இரண்டு அல்லது மூன்று கோளங்களிருக்கின்றன. ஆனால் அவை அவ்வளவு சிறப்பானவை அல்ல'' இவ்வாறு டுமாரியர் எழுதியிருக்கிறார். அவர் குறிப்பிட்ட வாழ்வை ஜவாஹர் வாழ்ந்து காட்டியிருக்கிறார். அருஞ் செயல்கள் நிறைந்த முழுவாழ்வை ஜவாஹர் வாழ்ந்திருக்கிறார். டுமாரியரின் எழுத்து நடையைப் போன்ற நடையில் ஜவாஹர் தன் வாழ்வைப்பற்றி எழுதியிருக்கிறார். ஜவாஹர் உயர்ந்த விண்ணுக்குச் சென்றிருக்கிறார். தணியாத அனலும் ஒளியுமுடைய கதிரவனிடமிருந்து தனது அனலையும் ஒளியையும் பெற்றிருக்கிறார். எனினும் பூமியில் தன் பாதங்கள் படும்படியாகவே இருக்கிறார். ''நான் இந்த மண்ணுலகத்தைச் சேர்ந்தவன். மண்ணுலகத் தொடர்பினனாகவே யிருக்கிறேன்'' என்கிறார்.

அவருடைய நூலின் உயர்ந்த சிறப்பு இதுவே என்றாலும் இதுமட்டும் அதனுடைய சிறப்பு என்று கூறுவதற்கில்லை. சமீப காலங்களில் எழுதியவற்றில் இந்தியாவில் நடக்கும் பிரிட்டிஷ் ஆட்சியை இவ்வளவு கடுமையாகவும் ஆனால் நியாயமாகவும் தாக்கி எழுதப்பட்ட நூல் வேறு கிடையாது. நேர்மையான அனேக ஆங்கிலேயரிடை இந்நூல் பெரிதும் பரபரப்பை உண்டாக்கிவிட்டது. கசப்பான உண்மையை அவர்கள் பாராட்டுகிறார்கள். அவ்வுண்மை அவர்களைப்பற்றியதாக இருந்தாலும் வாள் வெட்டுப் போன்ற சொற்களில் உணரத்தக்க முறையில் சொல்லப்பட்ட நியாயத்தை ஏற்றுக்கொள்கிறார்கள். நமது வீரப் போராட்டத்தைப்பற்றி அனேக வரலாறுகள் எழுதப்பட்டிருக்கின்றன. எனினும் அவைகளில் இவ்வளவு மேன்மையானது கிடையாது. தன்னுடைய எண்ணங்களையும் ஆராய்கின்ற நூலும் இதுபோன்று வேறு கிடையாது.

ஒருதலைப்பட்சமான போக்கிலும் அவருடைய சொந்த அபிப்பிராயங்களைக் கூறுகிற போக்கிலும் அவருடைய நூல் அமைந்திருக்கிறதென்றாலும் நிகழ்ச்சிகளை இவ்வளவு தெளிவாகப் படம்பிடித்துக் காட்டுகின்ற நூல் வேறு இல்லை. இந்நூல் போராட்டத்திலீடுபட்ட பெரிய மனிதர் களை,

> "அதிலும் பூதஉடல் நீத்து மக்கள் மனத்தில் வாழ்பவர்களை அவ்வாறு வாழ்ந்து அவர்கள் மனங்களை யுயர்த்தும்,"

ஹக்கீம் சாஹெப் அஜ்மல்கான், தேசபந்துதாஸ், சுவாமி சிரத்தானந்தா, மௌலானா முகமதலி, லாலா லஜபதி ராய், பண்டித மோதிலால் நேரு, கணேச சங்கர வித்யார்த்தி ஆகிய புகழாளர்கள் யாவரும் மீண்டும் பூதவுடல் பெற்று நம்முன் வாழ்கிறார்கள். அவருடைய நூலில் நமது பிரச்சினைகளிற் சில ஆராயப்படுகின்றன. உதாரணமாக வகுப்புவாதம் பயங்கர இயக்கம் ஆகியவைகளை இவ்வளவு நன்றாக யாரும் ஆராயவில்லை. நம்மை அனேக சந்தர்ப்பங்களில் காட்டிக் கொடுத்தவர்களின் செயல்களைத் தெள்ளத் தெளிவாக அலசியிருக்கிறார். அவருடைய நூலின் சில பக்கங்கள் 'பர்க்' என்ற ஆசிரியனுடைய வேகத்தையும் அரசியல் மேதையையும் நமக்கு நினைவுறுத்துகின்றன. உதாரணமாக' திறமையும் நன்மையுமற்ற நாபா அரசனுடைய கொடுங்கோன்மையைப் பற்றிய பகுதியும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைப்பற்றிய அனேக பகுதிகளும் பர்க்கின் நடையை யொத்திருக்கின்றன. வட்டமேஜை மகாநாட்டின் போது நடைபெற்ற கீழ்த்தரமான சூழ்ச்சிகளையும் தந்திரங்களையும் நேரில் பார்த்தவர்கள்கூட அவ்வளவு அழகாக வருணிக்க முடியாது. மதிப்பிற்குரிய தந்தையை-மனிதருக்குள் சிங்க ஏறுபோன்று விளங்கிய தன் தந்தையைப்

பற்றியும், இவளையும் கொண்டுபோகக்கூடிய பாக்கியம் கிடைத்தது என்று எமனும் கர்வமடையக் கூடியவாறு அவ்வளவு நீரம் பெற்ற தன் மனைவியைப்பற்றியும் சோகம் கனிந்து கூறும் அப்பகுதிகளைப்பற்றி நான் என்னென்று கூறுவது? அவருடைய அந்தரங்க உள்ளத்தை வெளிப் படுத்தும் காட்சிகள் ஆங்காங்கு காணப்படுகின்றன. அவர் எவ்வளவோ பெரிய மனிதர். எனினும் இக் காட்சிகள் அவரை நமது அன்புக்குரியவராக்குகின்றன. இங்கிலாந்தில் கேம்ப்ரிட்ஜ் பி. ஏ. படித்து பாரிஸ்டராகி இந்தியாவுக்குத் திரும்பின புத்தடியில் "பாராட்டுவதற்கு என்னிடம் ஒன்று மில்லையாயினும் சிறிது கர்வியாக இருந்தேன்" என்று கூறுகிறார். நாபா சமஸ்தானத்தில் கித்வானி கைதியானபோது தானும் அங்கேபோய் அவரைப்போலக் கஷ்டங்களை அனுபவிக்க வேண்டுமென்று நினைத்தார். நட்பு அவ்வாறு தூண்டிற்று. ஆனால் அனேக நண்பர்கள் வேறுவிதமாக நினைத்தார்கள். என்னைப் போகவேண்டாமென்று சொன்னார்கள். நண்பர்களுடைய புத்திமதியின் கீழ்பதுங்கிக் கொண்டேன். என்னுடைய கோழைத்தனத்தை மறைப்பதற்கு அவர்களுடைய புத்திமதியைச் சாக்காக வைத்துக்கொண்டேன். என்ன இருந்தாலும் அது என்னுடைய பலஹீனமே. மீண்டும் நாபா ஜெயிலுக்குப் போகவேண்டாமென்ற எண்ணமே என்னைப் போகவொட்டாமல் தடுத்தது. தோழனை இவ்வாறு கைவிட்டதற்கு நான் நாணமடைகிறேன். துணிந்து இறங்குவதற்குப் பதில் ஜாக்கிரதையாக இருப்பது எனத் தீர்மானித்தேன். நாம் யாவரும் பெரும்பாலும் அப்படித்தானே. தொண்டர்களை நடத்திக்கொண்டு போகும்போது அவர்கள் தடியடி வாங்கின சமயத்தில் 'இவரும் தன்னுடைய முழுப்பங்கையும் பெற்றார். அப்போது தன் உள்ளத்திலெழுந்த எண்ணங்களை அற்புதமாக எடுத்துக் கூறும் பகுதி ஒப்பற்றது. "தெரு மத்தியில் நான் மட்டும் தனியாக இருப்பதைத் திடீரெனக் கண்டேன். கொஞ்ச

தூரத்தில் போலீஸ்காரர்கள் நம்முடைய தொண்டர்களைக் கீழே அடித்துத் தள்ளுவதையும் பார்த்தேன். எல்லோர் பார்வையிலும் படாமலிருப்பதற்காகத் தெருவோரத்திற்கு மெதுவாக நகர்ந்தேன். பிறகு நின்று கொண்டேன். எனக்குள்ளே சிறிது தர்க்கம் நடைபெற்றது. நகருவது இழுக்காகுமென்ற முடிவுக்கு வந்தேன். இவ்வளவும் இரண்டொரு விநாடிக்குள் நடந்த தென்றாலும் இந்த அகப் போராட்டம் தெளிவாக நினைவிருக்கிறது. நான் கொண்ட முடிவும் கர்வத்தினால் ஏற்பட்டதே. நான் கோழையாக இருப்பது என்னுடைய கர்வத்துக்குப் பொருந்தாது. அப்பொழுது என் மனத்தில் தீரத்துக்கும் கோழைத்தனத்துக்கும் இடையில் மயிரிழை தூரம்தான் இருந்தது. நான் எளிதில் கோழையாகி யிருக்கலாம்.........தடியடி விழுந்தது. கண் திறக்க வழியில்லை. உள்ளூர செயலற்ற கோபம் குமுறியது. பதிலுக்குப் பதில் செய்யவேண்டுமென்ற நினைவு ஓடியது. எனக்கு முன்னாலிருக்கின்ற போலீஸ் அதிகாரியை குதிரையிலிருந்து கீழே தள்ளி அதில் நான் ஏறிக் கொள்வது எவ்வளவு சுலபம் என்பதை நினைத்துப் பார்த்தேன். ஆனால் நெடுநாள் பயிற்சியும் கட்டுப்பாடும் என்னை அடக்கிவிட்டன. அதன் பிறகு முகத்தில் அடிவிழாதபடி தடுத்துக்கொள்ளவே கையை உயர்த்தினேன்.” ஜவாஹர் தன் மனத்தை வெளிப்படுத்தும் இன்னொரு பகுதியைப் பார்ப்போம். “என்னைப் பெற்றவள் இரத்தம் வடியத் தெருப் புழுதியில் கிடக்கிறாள் என்ற எண்ணம் மனத்தில் கவிந்து கொண்டது. பக்கத்திலிருந்தால் நான் எவ்வாறு நடந்திருப்பேன் என்பதைக் கற்பனை செய்து பார்த்தேன். என்து அஹிம்சை எவ்வளவுதூரம் நிலைத்திருக்கும்? வெகுதூரம் நிலைத்திருந்திருக்காது என்றே நினைக்கிறேன். சுமார் பன்னிரண்டு வருஷங்களுக்கு மேலாக, நான் கற்க முயன்ற பாடங்களை அக்காட்சி மறக்கடித்திருக்கும். எனக்கோ அல்லது தேசத்துக்கோ என்ன

வந்தாலும் சரியென்றே முன்பின் யோசிக்காமல் இறங்கி யிருப்பேன்."

இப்பகுதிகளை வாசிப்பது மனத்துக்கு உயிரூட்டும்; அறிவு புகட்டும்; மனத்தை உயர்த்தும். நமது தேச சரித்திரத்தை அறிய விரும்பும் எவரும் இதைப் படிக்காமலிருக்கமுடியாது.

ஜவாஹரின் சுயசரித்திரத்தைப் பற்றிய புகழுரைகள் ஏற்கெனவே குவிந்துவிட்டன. அத்தோடு நானும் ஏராள மாக எழுதிச் சேர்க்க நினைக்கவில்லை. ஜவாஹரும் ஏராள மான புகழை அனுபவித்துவிட்டார். "பெரயில்ஸ் போர்டு போன்றவர்களுடைய பாராட்டுதலை நான் அவ்வளவாக மதிக்கவில்லை. அப்ஸர்வர் பத்திரிகையில் தாம்ஸன் எழுதி யிருப்பதுபோன்ற நிறை குறைகளைக் கூறும் விமர்சனங் களையே மதிக்கிறேன்" என்று ஒரு சமயம் ஜவாஹர் என் னிடம் கூறினார். உண்மையறிய முற்படும் மாணுக்கனைப் போல ஆராய்ச்சிப் போக்கில் அப்புத்தகத்தை இப்பொழுது அணுகலாமென நினைக்கிறேன். அவருடைய வாழ்க்கை யனுபவம் நமக்கு எத்தகைய பெரும்பயனை யளிக்கிறது என்பதை நானறிந்து கொள்ளவும் பிறரும் அறியும்படி செய்யவும் ஒரு சக ஊழியனைப் போன்று இப்போது அதை அணுகுகிறேன்.

'ஜவாஹர்லால் நேருவின் சுயசரித்திரம்' என்பது இந் நூலுக்கு இட்ட முதற் பெயரில்லை. இப்பெயர் பதிப்பாளர் இட்டது. ஜவாஹர்லால் கொடுத்த பெயர் "சிறைக்கு உள்ளும் வெளியிலும்" இதோடு "இந்தியாவில் நடந்த சமீபகாலச் சம்பவங்களைப் பற்றிய சிந்தனைகளுடன் கூடிய சுயசரித்திரக் கதை" என்ற தலைப்பையும் கொடுத்திருந்தார். இந்தப் பெயர்கள் அப்படியே யிருந்திருக்குமானால் அவை நிரம்பப்பொருத்தமாயிருந்திருக்கும். உண்மையானசுயசரித் திரப் பண்பைக் காட்டும் அம்சங்களைக் காணேமே என்று சில வாசகர்கள் நினைப்பதற்கு இடமேற்பட்டிருக்காது. இங்கு அவருடைய குழந்தைப்பருவ வாழ்க்கையைப் பற்றி

யும் இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும் அவர் நடத்திய வாழ்க்கையைப் பற்றியும் விவரமாகக் கூறியிருக்கிருர். நார்வேக்கு உல்லாச கடற்பிரயாணம் செய்தபோது ஆபத்திலிருந்து தனது ஆங்கில நண்பனுல் காப்பாற்ற பட்டதுமாகிய சம்பவங்களைப் படம் பிடித்தாற் போலக் காட்டுகிருர். நமக்காக அவருடைய உயிரைக்காப்பாற்றிய ஆங்கில நண்பனின் பேர்கூட நமக்குத் தெரியவில்லை. அவருடைய நூலில் சில அத்தியாயங்கள் இருபது அல்லது இருபத்துமூன்று பக்கங்கள்கூட ஓடுகின்றன. ஆனுல் அவருடைய திருமணத்தைப்பற்றிய அத்தியாயம் இரண்டே பக்கங்களில் அடங்கிவிடுகிறது. அந்த இரண்டு பக்கங்களிலும் திருமணத்தைப்பற்றிய வரிகள் இரண்டு தான். இவருடைய மனத்தைக் கவர்ந்த உன்னத மலைக் காட்சிகளைப் பற்றியே பெரிதும் எழுதியிருக்கிருர். அவரை அவருடைய நூலில் எல்லா மன நிலைகளிலும் காணலாம். அவருடைய தளர்வு, வெற்றிமுழக்கம், பொறுமையின்மை, அமைதி யாவும் காணலாம். முக்கால்வாசியும் அரசியல் கதையாகவே இருக்கும். அந்த நூலில் அவருடைய அழுகை, சிரிப்பு அத்தனையும் காணலாம். என்ருலும் ஏதோ குறைபாடு இருப்பதைப் போலவும் என்னமோ அதில் சேர்க்கப் படவில்லை என்பது போலவும் நமக்குத் தோன்றுகிறது. தெளிவும் ஜீவனும் நிறைந்த அவருடைய நடை அனேக இடங்களில் கவிதையாக மாறுகிறது. இன்னும் அனேக இடங்கள் அரசியல் பிரசுரங்கள் போன்றிருக்கின்றன. வெல்ஸ் என்ற பேராசிரியருடைய அரசியல் போக்கிலமைந்த நாவல்களைப் போலுமிருக்கின்றன. நடையின் தரத்தில் இவ் வேறுபாட்டுக்குக் காரணம் என்ன? அவர் இலக்கிய நயத்துக்காக இதை எழுதவில்லை. சரியான சுய சரித்திரமாக இருக்க வேண்டுமென்றும் எழுதவில்லை. பேசுகிற மாதிரி எழுதியிருக்கிருர். பெரிய எழுத்தாளர்களிடம் காணப்படும் சிறந்த பண்பாகிய கள்ளமற்ற உள்

ளம் இவருடைய எழுத்துக்களில் நிறைந்திருக்கிறது. சுய சரித்திரம் எழுத வேண்டுமென்று நினைத்திருந்தாரானால் இந்த நூலைப்போல் இரண்டு மூன்று மடங்கு பெரிதான நூல் ஒன்றை வெகு சுலபமாக எழுதி முடிக்க முடியும். எவ்வளவோ விஷயங்களைப்பற்றி அழகாகச் சொல்கிறார். எதையும் கூர்ந்து கவனித்திருக்கிறார். நுட்பமான அறிவைக் காட்டுகிறார். மனித சமுதாயத்தின்மீது அதிகமான அன்பு செலுத்துகிறார். எதையும் நுணுக்கமாகப் பகுத்தறிகிறார். இத்தகைய வல்லாளனுக்கு சரியான சுயசரித்திரம் எழுதி முடித்தல் மிக இலேசான காரியம். இவர் தன்னுடைய தந்தையையும் காந்திஜீயையும் படம் பிடித்துக் கூறுகின்ற அத்தியாயத்தைப் பார்த்தாலும் "ஐரோப்பாவில்" என்ற நகைச்சுவை ததும்பும் அத்தியாயத்தைப் பார்த்தாலும் அல்லது மௌலானா மகமதலியை நம்முன் உயிரோடு கொண்டுவந்து நிறுத்துகிற அத்தியாயத்தைப் பார்த்தாலும் அவருடைய திறமை நன்றாக விளங்கும். இவை என்றென்றும் இலக்கியமாக விளங்கக் கூடியவை. நான் ஏற்கெனவே கூறியபடி அவருடைய நோக்கம் வேறு. சிறையில் தனியாக அடைபட்டுக் கிடந்தபோது போகாத பொழுதைப் போக்கடிப்பதற்காக இதை எழுதினார். நடந்த சம்பவங்களைச் சத்தம்போட்டு நினைத்துப் பார்த்தார். நான் சம்பந்தப்பட்ட சம்பவங்களைத் தெளிவாக நினைவுபடுத்துவதற்காக மீண்டும் மனத்திற்குக் கொண்டு வந்ததாகக் கூறுகிறார். தன்னுடைய சக ஊழியர்களும், தன்னையும் தன் செயலைப் பற்றியும் ஆராய்கின்றவர்களும், தன்னை நன்குணருவதற்காக தன் மனப் போக்குகளை விரிவாக எடுத்துரைக்கிறார். நிகழ்ச்சிகள் தன்னை எவ்வாறு பாதித்தன, அவைகளால் தான் எவ்வாறு ஆத்திரமடைந்தார் என்பதையும் கூறுகிறார். மிகச் சிறந்த பிரபுவின் மகனாய்ப் பிறந்து அவருடைய எல்லாக் குணாதிசயங்களையும் உடையவராய் அவருடைய பேரறிவாற்றல்களையும் பெற்றிருக்கிறார். அறி

வாற்றல்களில் தாழ்ந்தவர்களைப் பொறுத்துக் கொள்ள மாட்டார். மதத்தையும் மதச் சார்பான விஷயங்களையும் அலட்சியமாகக் கருதுகிற முறையில் அவருடைய கல்வி யிருந்தது. கல்லூரியில் படித்த நாட்களில் இன்பமே நல்லது என்ற மனப்போக்கில் வளர்ந்தார். ஆகவே மத சம்பந்த மான மன எழுச்சிகளை அவரால் மதிக்க முடியவில்லை. எளிய வாழ்வை மேற்கொள்ள வேண்டுமென்று யாரேனும் வற்புறுத்தினல் " உயிரற்ற, மகிழ்ச்சியற்ற, துன்ப வாழ் வும் எளிய வாழ்வும் ஒன்றுதான் " என்று கருதுகிருர். ஜவாஹர் அரசாளப் பிறந்தவர். அதிகாரம் பண்ணப் பிறந்தவர். அப்படியிருந்தும் தேசத்தின் அழைப்பையும் கடமையையும் ஆணையையும் சிரமேற்கொண்டார். செல் வச் செழிப்பில் பிறந்தும் இன்பங்களை வெறுத்துக் கடும் உழப்பை மேற்கொண்டார். ராஜி செய்து கொள்வ தென்பது அவருக்குப் பிடிக்காத விஷயம். இருப்பினும் அவருடைய வாழ்வு முழுதும் ராஜியாக இருக்கிறது. மனிதாபிமானம் நிறைந்தவர். காந்திஜீயின் இணையற்ற துணிவும் ஆண்மையும் ஜவாஹரை அவர்பால் இழுக்கின் றன. ஆனல் காந்திஜீயின் சமயப்பற்றும், ஆன்மீகப் போக்கும், மேனுட்டு முறையில் வளர்ந்த ஜவாஹருக்கு விளங்கவில்லை. ஆகையினல் எரிச்சல் உண்டாகிறது. எதற்கு விசுவாசமாக இருப்பது என்ற பிரச்சினை பெரும் புயல் போலக் கிளம்பி அவர் மனத்தில் அடிக்கடி போரா டத் தொடங்கிவிடும். சந்தேகமும், அதைரியமும் அவரைப் பிய்க்க ஆரம்பித்துவிடும். அவரது வாழ்க்கையில் காணப் படும் முரண்பாடுகளுக்கு இதுவே காரணம். இத்துடன் அவருடைய வாழ்க்கைச் சம்பவங்களும் வேறு சேர்ந்து கொண்டன. கிட்டத்தட்ட இடைவிடாது ஏழு வருஷங் களைத் தனியாகச் சிறையில் கழித்திருக்கிருர். வீட்டிலே நோய்வாய்ப்பட்டிருக்கும் பெற்றேர்கள், தந்தையோ சிறை யால் நலிந்து சில மாதங்கள் கழிந்து இறந்துவிட்டார்,

மனைவியின் தீராத நோயும் இவருடைய வாழ்வில் அப்போது துன்பம் தோயச் செய்தது. மனிதர்களையும் காரியங்களையும் அவர் கடுமையாகத் தாக்கியிருப்பதற்கு இவையெல்லாம் காரணங்களே. துக்கச் சூழ்நிலையற்ற சாதாரண காலமாக இருந்திருப்பின் இன்னும் அடக்கத்தோடும் அமைதியோடும் எழுதியிருப்பேன் என்று கூறுகிறார். இன்னும் நன்றாக அறிந்துகொண்டும் எழுதியிருப்பார் என்பதையும் சேர்த்து நான் சொல்லலாமல்லவா?

காந்திஜியின் ஒப்பற்ற பொலிவையும், சக்தியையும், அவர் இந்தியாவின் பிரதிநிதியாக விளங்குவதையும் ஜவாஹர்லால் நன்கு பாராட்டி வியந்து எழுதியிருக்கிறார். ஷேக்ஸ்பியரை நோக்கி மாத்யூ ஆர்னல்டு "மற்றவர்கள் எங்களது அறிவுக்கு அடங்கியவர்கள். நீயோ மீறியவன்" என்று கூறுவதைப் போல ஜவாஹரும் காந்திஜீயைப் பார்த்து "அவர் சாதாரண நடைமுறைகளைக் கடந்தவர். மற்றவர்களை நாம் நிதானிப்பதுபோல அவரையும் நிதானித்து மதிப்பிட முடியாது" என்று கூறுகிறார். கூறிவிட்டுத் தானே மதிப்பிடுகிறார். ஒத்துழையாமை இயக்கத்தை காந்திஜி நிறுத்தியது ஒழுக்கக்கேடு என்று கூறுகிறார். பின்னால் அது அறிவுடைமை என்று ஒப்புக்கொள்ளா விட்டாலும் அவசியம் என்று ஒப்புக்கொள்கிறார். காந்திஜீ கூறும் காரணங்கள் ஜவாஹருக்கு எரிச்சலை உண்டாக்குகின்றன. தன்னுடைய அந்தரங்க எண்ணங்களையும் வெளியிடுவது தான் காந்திஜீயின் வழக்கம் என்பதை ஜவாஹர் மறந்துவிடுகிறார். ஒத்துழையாமை இயக்கத்தை நிறுத்துவதற்கு நாட்டின் நிலைமையே காரணம் என்றும் தனது தோழர் கூறிய தகவல் கடைசிக் காரணம் என்றும் காந்திஜீயே தெளிவுபடச் சொல்லியிருக்கிறார். துணையற்றுத் தனியாகச் சிறையில் கிடந்த காரணத்தினால் ஜவாஹர்லால் தன்னை மறந்து சாதாரண காலத்தில்தான் உபயோகிக்காத சொல்லெல்லாம் அப்பொழுது சொல்லியிருக்கிறார்.

"சிறையிலிருக்கும்போது கிடைக்கக் கூடிய தகவல் களைக் கொண்டு வெளியிலுள்ள நிலைமையைச் சரியாக நிதானிக்க முடியாதென்பதை நீண்டகால அனுபவத்தால் தெரிந்திருக்கிறேன்" என்று ஒரு இடத்தில் சொல்லுகிருர். ஆனால் தனது தோழர்கள் சிறைக்கு வெளியில் செய்த முடிவுகளைத் தாக்குவதில் அனேக பக்கங்களைச் செலவழித் திருக்கிருர். ஹரிஜன இயக்கத்தின் பிறப்பை மறந்து விடு கிருர். ஹரிஜன இயக்கமும் ஒத்துழையாமை இயக்கமும் வெவ்வேறு விஷயங்கள் என்பதை மறந்து விடுகிருர். ஆலயப் பிரவேச மசோதாவுக்கு அங்கத்தினர்களின் வோட்டுகளைச் சேகரிக்க ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் முயன்றது கண்டு ஆச்சரியமும் கோபமும் கொள்கிருர். அதுபற்றி, சிறைக்கு வெளியே யிருந்ததால் சொல்லமாட்டாத வார்த்தைகளைச் சொல்லுகிருர். "இத்தகைய காரியங்களை ஆதரிப்பது எனக்கோ அல்லது காந்திஜீக்கோ அல்லது வேறு எந்தக் காங்கிரஸ் தலைவருக்கோ இயலாத காரியம். இது ஒழுக்கக் கேடாகவும் போராட்டத்தை நடத்திக் கொண்டிருக்கிற வர்கள் அல்லது ஜெயிலுக்குள் இருப்பவர்களுக்குத் துரோ கம் செய்கிறதாகவும் தோன்றியது. காந்திஜீயைப் "பெரிய ஒழுக்கக் கேடான யோசனைகளைக் கூறுகிறவர்; நம்பிக் கைத் துரோகமான ஒழுக்கக் கேடுகளைச் செய்யக் கூடிய வர்" என்று குற்றம் சாட்டிவிட்டு பின்பு "அற்புதமான மனிதர், அற்புதமான வசீகரமும் நுட்பமான சக்தியும் உடையவர். ஜனங்களை மயக்கி விட்டார். இந்திய மக்கள் மனத்தில் துணிவு, ஆண்மை, கட்டுப்பாடு, சகித்தல், உயர்ந்த நோக்கங்களுக்காக மகிழ்ச்சியோடு தியாகம் செய் தல் முதலிய குணங்களை ஊட்டிவிட்டார். தாழ்மையும் பெருமையும் உடையவர். பெரிதும் வியக்கத்தக்க முறை யில், இந்தியாவின் பிரதிநிதியாக இருந்து, கொடுமைக்கா ளான இந்தப் பழைமையான நாட்டின் இதயத்தை எடுத் துரைக்க வல்லவராக இருக்கிருர்" என்று கூறுகிருர். இது

என்ன ஆச்சரியமான முரண்பாடு! குற்றம் எங்கே இருக்கிறது? காணப்படும் பொருளிலா? அல்லது காணும் கண்களிலா? கண்ணாடியிலா? கண்ணாடியைப் பார்க்கும் சோக முகத்திலா?

இந்திய மிதவாதிகளைப் பற்றியும், ஜெயிலுக்கு வெளியில் இந்திய மிதவாதிகளின் மனம் எப்படி இருக்கிறதென்பதைப் பற்றியும் அவர் எழுதியிருப்பதில் பெரும் பகுதியிலும் கோபத்தையும் எரிச்சலையும் கொட்டியிருக்கிறார். உன்னதக் கலையுணர்ச்சியும் மென்மையான பண்பாடும் பின்னடைந்துவிட்டன. அவர்களைப் பற்றிக் கூறியதெல்லாம் அளவுக்கு மிஞ்சியிருக்கின்றன. சில இடங்களில் அன்பில்லாமலும் இருக்கின்றன.

"விசுவாசமுள்ள இடைச்சி" என்ற கவிதையில் "என்னை வலுவந்தம் செய்வது முடியாத காரியம்; நானே அவ்வளவு இணங்கியிருக்கிறேன்" என்று கூறும் சுலோ என்பவளோடு மிதவாதிகளை ஒப்பிடுகிறார். "முயற்சி செய் மீண்டும் முயற்சி செய்" என்ற பழமொழியைத் திரித்து 'முதல் தடவையில் வெற்றி பெறாவிட்டால் மீண்டும் முயற்சி செய்' என்பதுவே மிதவாதிகளின் லட்சிய மந்திரமாக இருக்கலாம் என்றும் கூறுகின்றார். இவ்வாறெல்லாம் மிதவாதிகளைப் பற்றிச் சொல்லும்போது, மௌலானா மகமதலியை இவர் என்ன குற்றம் சாட்டினாரோ அதே குற்றத்தை இவரும் புரிகிறார் என்பது இவருக்குத் தெரியுமா? "அவர் சுறுசுறுப்பான அறிவுடையவர். ஆனால் சில சமயம் அவருடைய கொடிய கேலி வார்த்தைகள் புண்படுத்தக் கூடியன. ஆகையினால் அனேக நண்பர்களை அவர் இழந்தார். யாரைப் பற்றியேனும் சடார் என்று தோன்றும் எண்ணங்களை மனதுக்குள்ளே வைத்துக்கொள்ள அவரால் முடியாது" என்று அவரைப் பற்றிச் சொல்கிறார்.

காந்திஜீயின் தர்மகர்த்தாக் கொள்கையை எவ்வாறு

சுவிரக்கமில்லாமல் தாக்குகிருர் என்பதையும் கவனிப்போம், காசி சர்வகலாசாலே தொடக்க நாளன்று காந்திஜீ அரசர்களேப் பார்த்து "போங்கள், உங்களுடைய நகைகளே வில்லுங்கள்," என்று சொன்ன சந்தர்ப்பத்தை ஜவாஹர் வர்ணிக்கிருர். அரசர்களுக்குக் கடுமையாக எச்சரிக்கை செய்த அந்த தீர்க்கதரிசியின் ஆவேசத்தைப் பெரிதும் வியக்கிருர். அந்த ஆவேசத்தீ இப்பொழுது புகையில் அணேந்து விட்டது என்றும் மிதவாதிகளேக் காட்டிலும் அடக்கமாகவும் மிதவாதியாகவும் போய்விட்டாரென்றும் கூறுகிருர், தர்மகர்த்தாக் கொள்கையிலே ஏதாவது நியாயமிருக்குமாளுல் பிரிட்டிஷ் அரசாங்கம் தன்னே இந்தியாவின் தர்மகர்த்தா என்று சொல்லுவதை நாம் ஏன் மறுக்க வேண்டும் என்றும் கேட்கிருர். தர்க்கம் பண்ணுகிற வேகத்திலே வெகு தெளிவான விஷயத்தை அதாவது தர்மகர்த்தாவாக நான்தானிருப்பேன் என்று யாரும் தன்னேத்தானே நியமித்துக் கொள்ளக்கூடாது என்பதை மறந்து விடுகிருர். ஒரு மனிதனேத் தர்மகர்த்தாவாகப் பிறர் ஏற்றுக்கொள்ள வேண்டும். "பிரிட்டிஷ் தொடர்பை அறுத்துக் கொண்டு தேசீய சுதந்திரத்தை ஏற்படுத்த வேண்டுமென்று ஆசைப்படுகிற நானும் என்னேப் போன்றவர்களும் எங்களுடைய மனத்தை மாற்றிக்கொண்டு சோஷலிஸ பிரிட்டனேடு நெருங்கிய உறவை ஏற்படுத்த விரும்பக்கூடும். பிரிட்டிஷ் மக்களோடு ஒத்துழைப்பதற்கு எங்களுக்குத் தடையில்லே. அவர்களுடைய ஏகாதிபத்தியத்தையே எதிர்க்கிருேம். அவர்களுடைய ஏகாதிபத்தியத்தை உலேத்து விட்டார்களாளுல் ஒத்துழைப்புக்கு வழியேற்பட்டு விடும்" என்கிருர். அரசர்களேயோ ஜமீன்தார்களேயோ தர்மகர்த்தாக்களாக ஏற்றுக் கொள்வதும் நிபந்தனேயற்ற காரியமல்லவே. மேலே எடுத்துக் காட்டப்பட்ட பகுதியில் ஜாவஹர் என்ன நிபந்தனேகளேக் கூறுகிருரோ அந்த நிபந்தனேக்கு எவ்வகையிலும் குறைந்து விடாது, அல்லது வித்தியாசமாக இருக்

காது அரசர்கள் அல்லது ஜமீன்தார்களைத் தர்மகர்த்தாக்க ளாக்கும் நிபந்தனையும்.

'மனமாற்றம் அல்லது வற்புறுத்துதல்' என்று ஒரு அத்தியாயம் எழுதியிருக்கிறார். அதில் நுட்பமான அறிவைக் காட்டியிருக்கிறார். தேசீய இயக்கத்தில் அக்கரை கொண்டவர்கள் சிந்திக்க வேண்டிய விஷயங்கள் அதில் நிறைய இருக்கின்றன. அஹிம்சைக்கு விரோதமாக இருக்கும் என்று நினைத்துக் கொள்வதினால் இதர நோக்கங்களையும் கொள்கைகளையும் கண்டிக்கக்கூடாது என்று சொல்லுவதிலே நியாயம் இருக்கின்றது. "இது பிரச்சினைகளைத் தலைகீழாகக் கவனிப்பது போலாகும். லட்சியத்திற்குக் கொண்டு சேர்க்கக் கூடியதாகவும் விரும்பத்தக்கதாகவும் பலனளிக்கக் கூடியதாகவும் இருந்ததினாலே பதினைந்து வருடங்களுக்கு முன்பு அஹிம்சையை நாம் மேற்கொண்டோம். ஆனால் இப்பொழுது நம்முடைய லட்சியத்தையே அஹிம்சையைக் கொண்டு அளவிடுவதாகத் தெரிகிறது. நமது லட்சியம் அஹிம்சையோடு பொருந்தாவிட்டால் அந்த லட்சியத்தையும் உதறித் தள்ளுவதாகவும் தோன்றுகிறது" என்று கூறுகிறார். இவ்வாறு ஜவாஹர் கூறுவது சற்றும் நியாயமில்லை. நமது லட்சியத்தை அடையும் வழி எவ்விதத்திலும் ஹிம்சையாக இருக்கக் கூடாதென்றே பொறுப்பு வாய்ந்தவர்கள் கூறியிருக்கிறார்கள். ஆனால் பலாத்காரமாக எதையும் கைப்பற்றுவதைக் கண்டித்தால், அவ்வாறு கண்டிப்பது, லட்சியத்தை, அதை யடையும் மார்க்கத்தைக் கொண்டு மதிப்பிடுவதாகாது.

"அஹிம்சை மூலமாக நாம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை விரட்டி அரசியல் சுதந்திரத்தைப் பெற முடியுமானால் அதேபோல உள் நாட்டுப் பிரச்சினைகள், ராஜாக்கள், ஜமீன்கள் முதலிய பிரச்சினைகளையும் ஏன் அதன் மூலமாகத் தீர்க்கக் கூடாது?" என்று கேட்கிறார். அன்னிய அரசனை எதிர்த்துத்தான் அஹிம்சையை உபயோகிக்க முடியு

மென்று கூறமுடியாது. உள்நாட்டுச் சுயநலக்காரர்கள், முன்னேற்றத்தின் எதிரிகள் முதலியோரை எதிர்த்தும் அஹிம்சையைக் கையாளலாம். இந்நாட்டவராக இருக்கிற அவர்களுடைய மனத்தை அஹிம்சை பெரிதும் மாற்றக் கூடும். "அஹிம்சை வழி சக்தியும் வேகமும் உள்ள தானல் தற்போதைய சமூக அமைப்பை அது மாற்றக் கூடியதாகவும் இருக்க வேண்டும்" என்றும் கூறுகிறார். எல்லாம் வாஸ்தவமே. காந்திஜீ கூட இவ்வளவு தெளிவாகச் சொல்ல முடியாது. ஆகையினல் தான், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை ஒழித்தலாகிய முதல் நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு அஹிம்சைப் பரிசோதனை நடத்தும் போது பொறுமையும் அவகாசமும் காட்டும்படி சொல்கிறார். அஹிம்சை மூலமாக சமூக அமைப்பை மாற்றுவது மிக எளிது. நமக்கு மாத்திரம் நம்பிக்கை யிருக்கவேண்டும்.

இப்படி நான் சொல்வதுகண்டு ஜவாஹர் என்னைத் திட்டமாட்டார் என்ருலும் அது சரியென்று ஒப்புக் கொள்ளமாட்டார். "அஹிம்சை நமக்குப் பெரிதும் உதவும். ஆனல் அது நம்மை முடிவான லட்சியத்துக்கு இட்டுச் செல்லுமா என்பது சந்தேகம்தான்" என்று கூறுகிருர். அஹிம்சையின் சக்தியைப் பற்றிய சந்தேகமும் காந்திஜீயின் சமயச் சார்பான நோக்கமும் ஜவாஹரை காந்திஜீயிடமிருந்து தள்ளிவைக்கின்றன. அங்கும்கூட ஜவாஹரின் சங்கடத்துக்குக் காரணமாக இருப்பன அவரது மேனாட்டு வளர்ப்பு முறையும் பயிற்சியுமே. எதையும் சீக்கிரம் நன்ருக உணரக்கூடிய அவர், இங்கிலாந்து செல்வதற்கு முன்னல், தான் அளவற்ற அன்பு செலுத்தும் தாய்நாட்டில் இன்னும் சில வருஷங்கள் இருந்து இந்நாட்டின் ஆன்மீக வளத்தை நன்கு அறிந்தபின் சென்றிருந்தால் எவ்வளவு நன்ருக இருந்திருக்கும்!

நூறு தலைமுறைகளாக பிராமணர்கள் நினைத்த நினைவுகள் ஜவாஹர்லாலிடம் துறவு உணர்ச்சியை வளர்த்

திருக்கின்றன. அவரை ஒரு கர்மயோகியாக ஆக்கியிருக்கின்றன. "முடிவில் கிடைக்கும் பலனல்ல, போராட்டமே வாழ்வுக்கு மதிப்பைக் கொடுக்கிறது" என்று கூறுகிறார். தன்னுடைய நூலில், யாரும் அறிந்த பகவத்கீதை சுலோகத்தை எடுத்துப் போடாமல் டால்மட் கூறிய கவியை எடுத்துப் போடுகிறார். பழையனவும் பழகினவையும், தங்கமானவையாக இருந்தாலும் அவைகள்மீது அவருக்கு வெறுப்பே உண்டுபோலும். "பண்பற்று ஒழுக்கமுள்ளவனாக இருப்பவனைக் காட்டிலும் பண்புடையவனான ஒழுக்கக் கேடனே எனக்குப் பிடித்தமானவன். பண்பற்று ஒழுக்கமுள்ளவன் அறிவில் ஒழுக்கக் கேடனே. பண்புடைய ஒழுக்கக் கேடனுடைய கருத்துக்கள் அசாதாரணமானவை, ஒழுக்கக் கேடானவை, அதிர்ச்சியுண்டாக்கக் கூடியவை. எனினும் அவைகளை நாகரிகமாக விவாதிக்கிறான்" என்று ஒரு சமயம் தனியாகப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது சொன்னார். பண்பும் ஒழுக்கமும் வெவ்வேறு என்று அவர் நினைக்கிறார் போலும். தரித்திர நாராயணன் என்ற வார்த்தை விவேகாநந்தரால் உண்டாக்கப்பட்டு தேசபந்துதாஸரால் கையாளப்பட்டது. காந்திஜீயும் அதை உபயோகப்படுத்தினார். ஜாவஹருக்கு அச் சொல் உணர்ச்சியற்றதாகத் தோன்றுகிறது. அச்சொல் வறுமையைப் பெருமைப்படுத்துகிறது என்று நினைக்கிறார். ஆயுதபாணியான பாட்டாளியைப் போற்றி, அறிஞர்களும் அப் பாட்டாளிக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமென்று கருதுகிற கம்யூனிஸ்டும் இதைத்தானே செய்கிறான் என்பதை அவர் மறந்து விடுகிறார். பாட்டாளிகளையும் ஏழைகளையும் போற்றுவதென்றால் அவர்கள் சமுகத்துக்கு அடிமையாக உழைப்பதையோ அல்லது அவர்களுடைய வறுமையையோ பெருமைப் படுத்துவதாகாது. ஏழைகளுக்கும் பாட்டாளிகளுக்கும் நாம் முதலில் சேவை செய்ய வேண்டும் என்பதே அதன் பொருள்.

அவருடைய வீட்டு வாசலில் நிற்கும் ஆயிரக்கணக்கான யாத்திரிகரைப் பார்த்து விட்டு " இவர்களையும் இவர்களுடைய முன்னோர்களையும் இந்தியாவின் நாலா மூலையிலிருந்தும் ஆயிரக்கணக்கான வருஷங்களாகப் புண்ணிய கங்கையில் நீராடும்படி வரவழைக்கிற இந்த மதம் எவ்வளவு அற்புதமானது " என்று கூறுகிறார். பின்னும் அதே மனிதர் அடிக்கடி ஐரோப்பாவுக்குப் பிரயாணம் செய்ததனாலும் பொருளாதாரம் சரித்திரம் முதலியவைகளை ஆராய்ந்ததனாலும் பொருளாசையே மனிதச் செயல்களை மாற்றுகிறதென்ற முடிவுக்கு வருகிறார். துறவும் தியாகமும் அவருக்குக் கவர்ச்சிகரமானவையில்லை. ஆனால் மார்க்ஸீயத்தைப் பற்றி ஒன்று மறியாத கோடிக்கணக்கான மக்கள் துறவிலும் தியாகத்திலும் அளவற்ற மோகம் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் ஜாவஹரை அவருடைய உன்னதமான துணிவுக்குப் போற்றுவதைப்போல அவருடைய துறவுக்கும் போற்றுகிறார்கள் என்பதையும் அவர் மறந்து விடுகிறார். அரசியலில் பொருளாதாரத்தைப் புகுத்துவார். ஆனால் அரசியலில் ஆத்மீகத்தைப் புகுத்துவது பயனற்றது என்பார். இந்தியாவில் கடந்த 15 வருடங்களாக நடக்கும் போராட்டத்தை யறிந்தவர்கள் இவ்வளவு முன்னேற்றத்துக்கும் காரணம் அரசியலில் ஆத்மீகத்தைப் புகுத்தியதே என்பதை ஓடுகிற ஓட்டத்தில் உணர்ந்து கொள்வார்கள்.

வர்க்க எதிர்ப்பைப் பெரிதும் வற்புறுத்துகிறார். நல்ல வேளை, அதைத் தெய்விகமாகப் போற்றவில்லை. ஆகையினால் காதியைப் பற்றி " காதியிலிருந்து அதிக வருமானம் கிடைப்பதால் ஜமீனோ அரசாங்கமோ அதிலிருந்து தனக்கும் அதிக வருமானம் கிடைக்கும்படி செய்துகொள்கிறது. அதிக வருமானம் நிச்சயமானால் அதற்குத் தக்கபடி நிலவரியும் கூட்டப்பட்டு அந்த வருமானத்தையும் தின்றுவிடும் " என்ற வண்ணம் பேசத் தொடங்கிவிடுகிறார். உண்மையும் அப்படித்தானிருக்கிறது. பர்டோலித் தாலுகாவில் காதியும்

மதுவிலக்கும் அபிவிருத்தி அடைந்த காரணத்தினுல் கிரா மங்களில் சிறிது செழிப்பு ஏற்பட்டதைக் கண்டு அதிக வரி விதிக்கலாமென்று புரூம் பீல்டு கமிட்டி சிபார்சு செய்தது. அதற்காக காதியையும் மதுவிலக்கையும் விட்டு விடுவதா? "அஹிம்சை வழி நமக்கு நெடுந்தூரம் உதவி செய்யும். ஆனுல் இறுதியான வெற்றியைக் கொடுக்குமா என்பது எனக்குச் சந்தேகம்" என்கிருர். உறுதியான வெற்றிகளைக் கண்ட பின்னரும் ஏன் இந்தச் சந்தேகம்? அஹிம்சையை யும் சத்தியாக்கிரகத்தையும் முதன் முதல் சாம்பரானில் நடத்திக் காட்டியபொழுதே, மிகக் கொடுமையான பொரு ளாதாரச் சுரண்டலும் அதன்முன் நொறுங்கிவிட வில் லையா? திருவாங்கூரில் நிகழ்ந்த தென்ன? அமைதியான மனமாற்றத்திற்கு இதைக் காட்டிலும் வேறு சிறப்பான உதாரணம் என்ன தரமுடியும்?

எளிமையும் இதர நற்குணங்களும் நமது நாட்டு மக் களின் ஒழுக்கத்துக்கு அடிப்படையாக இருக்கின்றன. நல்ல வேளை, இவைகளைக் குலைக்க எத்தனையோ எதிர்ப்புகள் படையெடுத்தும் இவைகளைத் தொடமுடிய வில்லை. இக்குணங்கள் இவருக்குப் பிடிக்கவில்லையென்பது இவருடைய நுண்ணறிவுக்குப் பெருமை யளிப்பதாயில்லை. மார்க்காம் என்ற கவிஞன் எழுதிய "களையெடுக்கும் மனி தன்" என்ற கவிதையில் அவனைப்பற்றி,

"வருந்தாத பொருள், நம்பிக்கை கொள்ளாத பொருள்.
உணர்வற்று, திகைப்பெய்தி, மாட்டுக்குச்
சகோதரனுக நிற்பான்"

என்ற வரிகளை மேற்கோளாகக் காட்டி 'ஏன் இவ்வறுமை நிலையை லட்சிய வாழ்க்கையாகக் கொள்ள வேண்டுமென்று ஆத்திரமாகக் கேட்கிருர். "உணர்வற்ற, உயிரற்ற, துன்ப வாழ்க்கைக்கு ஏன் மீண்டும் செல்ல வேண்டு" மென்று கேட்கிருர். இவ்வாறு சாட்டப்படுகிற

குற்றம் கற்பனையின்றி உண்மையானதில்லையே? யார் இந்த வாழ்வை "உணர்விழந்து, திகைப்பெய்தி, மாட்டுக்குச் சகோதரனாக நிற்கும் நிலைமையை" நிரந்தரமாக்க விரும்புகிறார்கள்? அவனை மீண்டும் மனித நிலைமைக்குக் கொண்டு வருவதற்கு, மனிதவர்க்கத்துக்கு உணவளிப்பதும் உடையளிப்பதும் அவன் கையிலிருக்கிறதென்பதை நினைவூட்டுவதற்குமே எல்லா முயற்சிகளும் எடுத்துக் கொள்ளப்படுகின்றன. அது நிற்க, மேற்கண்டவாறு எப்போது காந்திஜீ எளிமையையும் துறவையும் தீமையும் போற்றினார்? கோழைத்தனம் காரணமாக நன்மையும் தீமையும் செய்யாமலிருக்கின்ற தன்மையை ஜவாஹர் எவ்வளவு வெறுக்கிறாரோ அவ்வளவு காந்திஜீயும் வெறுக்கிறார். காந்திஜீயின் வாழ்வையும் கருத்துக்களையும் நெடுநாள் ஆராய்ந்த ரிச்சர்டு கிரெக் இவ்விஷயத்தை மிகத் தெளிவாக ஒரு கட்டுரையில் விளக்கியிருக்கிறார். "எளிய வாழ்வைப்பற்றி பேசிக்கொண்டிருந்தோம். அநேகமாக எல்லாவற்றையும் என்னால் விட்டுவிட முடியும். ஆனால் புத்தகங்களின் மீதோ எனக்கு அளவற்ற ஆசை இருக்கிறது. ஆகையால் அவைகளை மட்டும் வைத்துக்கொள்ள விரும்புகிறேன்" என்று சொன்னேன். அதற்கு காந்திஜீ அப்படியானால் புத்தகங்களை விட்டுவிடாதீர்கள். எவ்வளவு காலத்துக்கு ஒரு பொருள் உங்களுக்கு மன ஆறுதலையும் உதவியையும் தருகிறதோ அவ்வளவு காலத்துக்கு அவைகளை நீங்கள் வைத்துக்கொள்ளுங்கள். தியாகம் செய்ய வேண்டுமென்ற மன நிலையால் அல்லது கண்டிப்பான கடமை யுணர்ச்சியினால் அதை விட்டுவிட்டால் அதை நீங்கள் மீண்டும் விரும்ப நேரிடும். திருப்தி பெறாத ஆசை உங்களைத் தொந்தரவு செய்யும். ஒரு பொருள் உங்களுக்கு யாதொரு கவர்ச்சியும் தராதவாறு வேறொரு உயர்ந்த நிலையை நீங்கள் விரும்பினால் அல்லது அப்பொருள், நீங்கள் பெரிதும் விரும்பும் ஒன்றைப் பெறுவதற்கு இடைஞ்சலாக

இருக்குமானால் அப்பொழுதே அதை விட்டுவிடவும்" என்று கூறினார்.

மற்றவர்கள் அஹிம்சையைப் பிடிவாதமாக வற்புறுத்துவதாகக் குற்றம் சாட்டுகிற இவரும் அரசியல் பொருளாதாரத் திருத்தங்களினால் குறைகளை நிவர்த்தி செய்துவிடலாம் என்ற கோட்பாட்டை பிடிவாதமாக வற்புறுத்தும் குற்றமுடையவராக இருக்கிறார். மனிதனை முழுதும் அறிய முடியாது, அவ்வளவு சிக்கலான பேர்வழி. பொருளாதார லட்சியங்களினால் மாத்திரம் அவனை எப்படி ஆளமுடியும்? மனிதன் பொருளாதாரத்துக்குள் அகப்பட்ட மிருகம் அல்லன். அதற்கும் அப்பாற்பட்டவன். நமது பொருளாதாரச் சிக்கல்களைத் தவறாக எடுத்துக் கூறுவது பிறரை ஏமாற்றி மயக்க உதவும். "தத்துவத்தின் தொடக்கமே வியப்பிலிருந்து வந்தது. இப் பிரபஞ்சத்தில் இன்னின்ன தொல்லைகள் இருக்கின்றன என்று ஒரு அரசியல்வாதி அவன் மேதையாக இருந்தாலும் சரி, கூறியபிறகு எப்படி ஒரு மனிதன் படைப்பில் வியப்பைக் காண முடியும்" என்று பேராசிரியர் பிகொவ் கேட்கிறார். பழமைப் பித்தர்களை ஏளனம் பண்ணுவது எளிது. ஆனால் பழமைப் பித்தர்கள் செய்கிற தவறுகளையே புதுமைப் பித்தர்களும் தம்மை அறியாமல் செய்யக்கூடும். வளர்ச்சியும் போராட்டமுமே தேவை, நன்மையை ஆராய மறுப்பதல்ல. வேகமும் வளர்ச்சியுமுள்ள ஜவாஹர் நன்மையை ஆராய மறுக்க மாட்டாரென்பது நிச்சயம். இருப்பினும் அவரும் ஆபத்துக்களில் நழுவி விழுந்துவிடாமல் விழிப்புடனிருக்க வேண்டும்.

நான் இந்த ஆராய்ச்சியை நீட்டிக்கொண்டு போகக் கூடாது. ஜவாஹர் மிகவும் சிக்கலான பேர்வழி. அவர் முரண்பாடுகளின் அதிசயமான கலப்பு. உறுதியும் சந்தேகமும், நம்பிக்கையும் அதன் குறைவும், மதமும் அதன் வெறுப்பும் கலந்தவர். ஓய்வொழிவற்ற உழைப்பும், துன்பமும் துயரமும் நிறைந்த வாழ்க்கை வேறுவிதமாக இருக்கமுடியாது.

போராட்டத்தின் ஒவ்வொரு கூட்டத்திலும் நின்று கொண்டு "நாம் எங்கு செல்கிறோம்? என்ன லட்சியத்துக்காக இவை யாவும்? எதை அடைவதற்கு?" என்று கேட்டுக் கொள்கிறார். பின்னும் நம்பிக்கை யென்னும் அறத்தால் எய்தும் நன்மைகளைப்பற்றிய பகுதி அந்நூலின் ஒரு பக்கத்தில் ஒளி வீசுகிறது.

"முன்னேற்றத்தில், இயக்கத்தில், லட்சியங்களில், மனித நன்மையில், மனித விதியில் நம்பிக்கை கொண்டிருத்தல் கடவுளிடத்தில் நம்பிக்கை கொண்டிருத்தல் போலல்லவா? அதைக் காரண காரிய ரீதியில் நிரூபிக்க முனைந்தால் சங்கடந்தான். ஆனால் நம்முள் இருக்கும் ஏதோ ஒன்று அந்த நம்பிக்கையை இறுகப் பற்றிக் கொள்கிறது. நன்மையே நிகழும் என்ற நம்பிக்கையும் ஆசையும் அற்ற வாழ்க்கை நீரூற்றில்லாத பாலைவனம் போன்றிருக்கும்." "இதந்தரு கோடியின்னல் விளைந்தெனை யழித்திட்டாலும் சுதந்திரதேவி நின்னைத் தொழுதிடல் மறக்கிலேனே" என்று தன்னை சுதந்திரத்துக்கே அர்ப்பணம் செய்த எந்த இதயத்தின் ஆழத்திலிருந்தும் இவ்வளவு உண்மையான வார்த்தைகள் பிறந்தது கிடையாது. அச்சமற்ற இந்த நெஞ்சத்தையும் சந்தேகம் அடிக்கடி தாக்குகிறது. இரண்டாவது முறை ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்க வேண்டிய அவசியத்தை யுண்டாக்கிய சம்பவங்களைக் கூறுகிற அற்புதமான அத்தியாயத்தின் இறுதியில் மாத்யூ அர்னால்டு எழுதிய 'பல்லாடியம்' என்ற கவிதையிலிருந்து இரண்டு கவிகளை மேற்கோளாகக் கொடுக்கிறார்.

"மனிதர்கள் நாளை மீண்டும் போரைத்
தொடங்குவார்கள்.
சாந்தஸ் செங்குருதி தோய்ந்திருப்பான்.
ஹெக்டரும் அஜாக்சும் மீண்டும் அங்கிருப்பார்கள்.
ஹெலன் மதில் மீதிருந்து பார்க்க வருவாள்

அப்போது நாம் நிழலிலிருந்து வீழுவோம்.
அல்லது போரில் நின்று ஒளி வீசுவோம்.
குருட்டுத்தனமாக நம்பிக்கை கொண்டும்
குருட்டுத்தனமாக நம்பிக்கை யிழந்தும்
நிலைமாறித் தத்தளிப்போம்.
நமது முழு உயிரையும் ஈடுபடுத்தியதாக நினைத்துக்
கொள்வோம்.
இதெல்லாம் ஆன்மாவை என்ன செய்தன என்பதை
நாம் ஒருக்காலும் அறியப் போவதில்லை''

ஜவாஹரின் குணத்தை அல்லது அந்தக் கணத்தில் இருந்த அவருடைய மனநிலையை இச் சோக வார்த்தைகள் தெளிவாக்குகின்றன. ஆனல் கவிதையின் இதயம் இதற்கடுத்த கடைசிக் கவியில் இருக்கின்றது. அது ஏனே இவரைக் கவரவில்லை? இதோ அந்தக் கவி.

'' இருப்பினும் ஆன்மா உயரத்திலிருக்கும்
தனது தனிக் கோட்டையிலிருந்து
தனது சக்தியை வீசி நமது வாழ்வை ஆள்கிறது.
சக்தியை வீசாதபோது நாம் என்னதான்
போராடினலும், மடிகிறோம்.
சக்தியை வீசும்பொழுது நாம் அழியமாட்டோம்.''

உயரத்திலே கற்களுக்கும் மரங்களுக்கும் மத்தியில் வைக்கப்பட்டிருந்த பல்லாடியம் என்ற சிலையைப் பொறுத்தே டிராய் என்ற நகரத்தின் வாழ்வும் தாழ்வும் இருந்ததென்று கிரேக்கக் கதை கூறுகிறது. சிலை நின்றவரை டிராய் நகரம் நிற்கும். சிலை விழுந்தபோது டிராய் நகரமும் விழும். இங்கு கவிஞன் பல்லாடியத்தை மனித ஆன்மாவோடு ஒப்பிடுகிறான். '' எப்போதாவது சில நொடிகளில் நாம் அதைச் சென்று பார்க்கிறோம். ஆனல் அப்படிப் போவது ஏகதேசம்தான்!'' என்றும் '' நாம் போராடும்

போது ஆன்மாவுக்கு என்ன நேரிடுகிறது என்பது நமக்குத் தெரியாது " என்றும் கூறுகிருர். ஆனுல்,

" அது வீழ்ந்தபோது நாம் என்னதான்
போரிட்டாலும் மடிகிருேம்.
அது வீழாதவரை நமக்கு அழிவில்லை."

இது பண்டித ஜவாஹர்லால் அறியாததல்ல. உண்மையான வீரன், அதிலும் வளர்ச்சியுள்ள வீரன் இதை அறியாதிருக்க முடியாது. அவருடைய வளர்ச்சியிலேயே தேசத்தின் வளர்ச்சி இருக்கிறது. அவரே கூறியுள்ளபடி " தங்கு தடைகள் ஏற்பட்டபோதிலும் இயக்கம் நடந்து கொண்டிருந்தது. லட்சியக் காட்சி மங்காதவரை ஊக்கம் தளராதவரை தோல்வி என்பது கிடையாது. கொள்கையைக் கைவிடுதலும் நமது உரிமையை மறுப்பதும் தவறுகளுக்கு மானக்கேடாகப் பணிவதுமே உண்மையான தோல்வி ". நம்பிக்கை யிழந்து விடுகிருர். சந்தேகம் கிளம்பிவிடுகிறது. ஆனுல் இது ஒரு கண நேரம்தான். இறுதியில் உண்மையே வெற்றியடையும் என்ற நம்பிக்கை தெளிவாக ஒளிவிடுகிறது. அந் நம்பிக்கைதான் சந்தேகப் புயல்களுக் கிடையில் அவரைத் தாங்கி நிலைநிறுத்துகிறது. பேராசிரியர் வில்டூரன்ட் என்பவருக்கு இவர் எழுதிய கடிதத்தில் தனது நம்பிக்கையை எவ்வளவு அழகாக ஒப்புக்கொள்கிருர் என்பதைப் பார்ப்போம். அப் பேராசிரியர் எழுதிய "வாழ்வின் பொருள் " என்ற நூலில் அக்கடிதம் காணப்படுகிறது.

" விஞ்ஞானத்திலும் தர்க்கத்திலும் காரணகாரிய முறையிலும் நம்பிக்கை வைத்திருந்தேன். இன்னும் அவைகளை நம்புகிறேன், ஆனுல் சில சமயங்களில் அவைகளும் ஏதோ குறையுள்ளனவாகத் தோன்றுகின்றன. வாழ்வு, இவைகளைக் காட்டிலும் வலுவான பிற சக்திகளால் ஆளப்படுகிறது என்றே தோன்றுகிறது. இவை

காரணகாரிய அறிவைக் கடந்து அப்பால் நிற்கின்றன. விஞ்ஞானம் தர்க்கம் முதலியவைகளோடு இணங்கியவை அல்ல இவை. எதனாலும் தடுக்க முடியாத தன்னியல்பான சக்திகள் இவை. தேச சரித்திரங்கள், தோல்விகளைக் குறித்துவைத்த குறிப்புகளாகவே இருக்கின்றன. உலகில், எத்தனையோ பெரிய மனிதர்களும் பெரிய காரியங்களும் தோன்றிய பிறகும் உலகில் தீமை நிலவத்தான் செய்கிறது. தற்போது பழங்கால லட்சியங்களும் நாகரிகமும் முறிந்து கிடக்கின்றன. வருங்காலத்தில் ஆபத்துக்கள் நிறைய இருக்கின்றன. இவையெல்லாம் பார்க்கும்போது சில சமயம் நம்பிக்கை யிழந்து நிற்கின்றேன். ஆனால் இவ்வளவிருந்தும் வருங்காலத்தில் மனித சமுதாயத்துக்கும் எனது நாட்டுக்கும் நற்காலம் இருக்கிறதென்ற உணர்ச்சி யென்னுள் இருக்கிறது. சுதந்திரத்துக்காக நாம் நடத்தும் போராட்டம் இந் நற்காலத்தை விரைவில் கொண்டு வருகிறது. இவ்வுணர்ச்சிக்குக் காரணம் கூற என்னால் முடியாது. ஒரு பெரிய இயக்கத்தில் நானும் என்னுடைய பங்கைச் செய்கிறேன், என்னுடைய உழைப்பு வீண் போகாது என்ற எண்ணங்களே என் உள்ளத்தில் அமைதியையும் வலுவையும் ஊக்கத்தையும் அளிக்கின்றன என்பதைத் தான் நான் சொல்லமுடியும். நான் பலனை எதிர்நோக்கியே காரியங்களைச் செய்கிறேன் என்பது வாஸ்தவம். என்னுடைய குறிக்கோளை நோக்கி விரைவாக செல்லவும் ஆசைப்படுகிறேன். ஆனால் அடிப்படையில் காரியப் பலன்களும் எனக்குத் தொந்தரவு கொடுப்பதில்லை. காரியம், அக்காரியம் மாத்திரம் ஒழுங்கானது என்ற உறுதியிருந்தால் அதுவே எனக்குப் போதுமானது.''

சிறிதும் விட்டுக் கொடுக்காத இந்தக் கர்மயோகமே இவரைக் காந்திஜீயுடன் இணைக்கிறது. ரொமேன் ரோலந்து கூறுவதுபோல மதப்பற்றுள்ள மகானின் உன்னதச் சேனையில் தானும் ஒரு சாதாரணப் படைவீரனாகப் பின்

தொடர்ந்து செல்கிறார். இதனால் கோடிக்கணக்கான மக்கள் மனத்தில் நிலைத்து வாழ்வார்.

வாழ்வார், அவ்வாறு வாழ்வதனால்
அம் மனங்களையும் உயர்த்துவார்.
தாராள மனோபாவங்களைத் தூண்டும்
மனத் துடிப்புகளில் வாழ்வார்.
நேர்மைக்கு உரமான செய்கைகளிலும்
தன்னலத்தின் முடிவுறும் இழிநோக்கங்களை
எள்ளுவதிலும் வாழ்வார்.
இரவைப் பிளக்கும் நட்சத்திரங்களைப் போல
ஒளி விடும் உயர்ந்த எண்ணங்களில் வாழ்வார்.
மென்மையாகவும் இடைவிடாதும் எடுத்துச் சொல்லி
பெரிய பலன்களை நாடுமாறு மனிதனைத் தூண்டுவார்.

# எழுத்தாற்றலுடைய தேசபக்தன்

பி. இ. தஸ்தூர்

ஜவாஹர்லால் நேருவை ஒரு எழுத்தாளராக ஆராய்வது ஒரு இலக்கிய மாணுக்கனுக்கு எவ்வளவு எளிதோ அதே சமயத்தில் அவ்வளவு கடினமானதுமாகும்.

ஜவாஹர்லால் நேருவின் நூல்களில் பொதிந்துள்ள அரசியல் அல்லது பொருளாதாரக் கொள்கைகள் சரியா தப்பா என்று ஆராய்வது அம் மாணுக்கனின் அலுவலல்ல. அந்தக் கொள்கைகள் யாவை என்று காட்டவேண்டியது தானே அவனது வேலை. ஆகவே அது எளிது. அக் கொள் கைகளை உணருவதும் எடுத்துக் காட்டுவதும் எளிது. ஜவாஹர்லாலின் பெரும்பாலான நூல்கள் ஒரே கட்டுக் கோப்பாக இருக்கின்றன. அவருடைய வேலை திட்டவட்ட மானது, தெளிவானது, வரையறுக்கப்பட்டது. எத் தனையோ விஷயங்களில் போல இந்த விஷயத்திலும் மகாத்மா காந்திக்கு வேறுபட்டவராக இவர் இருக்கிறார். மகாத்மா பலமான சமய உணர்ச்சி கொண்டவர். அதிசய மான இயற்கை யுணர்வு உள்ளவர். இவைகளைக் கொண்டு நம்மைச் சில சமயம் திக்குமுக்காடச் செய்து விடுவார். எதிர்பாராத ஆத்மீகக் காரணங்களைக் காட்டி நாம் அதிர்ச்சி யடையும்படி செய்துவிடுவார். அவருடைய முரண்பாடுகளை எடுத்துக் காட்டினால் சும்மா சிரித்துவிட்டு 'என்னுடைய இப்படித்தான்' என்று சொல்லி மழுப்பி

விடுவார். காரணம், ஒவ்வொரு நாளும் எப்படி எப்படி உண்மையைக் காண்கிருரோ அப்படியப்படிச் சொல்கிற வர் அவர். ஜவாஹர்லால் நேருவின் நூல்களை வாசிப்பவர்கள் 'புரிந்து கொண்டோம்' என்று உறுதியடைவதற்கு இடமுண்டு. பெரிதோ, சிறிதோ, அன்ருட விஷயமோ அல்லது பத்திரிகை சம்பந்தமோ அல்லது அதற்கு மேற்பட்டதோ எதை எடுத்தாலும், அவை உறுதியான சில கொள்கைகளைக் கூறுகின்றன. அவைகளில் சந்தேகமானவை, உறுதியற்றவை, பிடிபடாதவை என்பன ஒன்றுங் கிடையா. அவரது நூல்களை ஆராய்ந்தவர்கள் சில சமயங்களில அவரைத் தவருக உணர்ந்திருக்கிருர்களென்பதில் சந்தேகமில்லை. ஆனல் அப்படிப்பட்ட ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவ்வாறு நடைபெறுவது ஜவாஹர்லாலின் துரதிருஷ்டமே தவிர அவரது குற்றமில்லை. கண்களை மூடிக் கொண்டிருக்கும்போது பார்க்க முடியாமலிருப்பது எவ்வளவு எளிதோ அவ்வளவு எளிது நாம் ஒருத்தரை உணர விரும்பாதபோது அவரைத் தவருக உணருவது. வேண்டுமென்றே குருடாக இல்லாமலிருப்பவர்கள் நேருவோடு அநேக விஷயங்களில் ஒத்துப்போகலாம். மற்றும், அவரோடு வழக்காடுவதற்கும் அவரை மறுப்பதற்கும் அநேக விஷயங்களிருக்கலாம். ஆனல் அவருடைய சொற்களின் பொருளையோ, கருத்தையோ சந்தேகிப்பதற்கு அங்கொன்றும் இல்லை.

பார்க்கப்போனல் அவரது கொள்கை நிலை அவ்வளவு தெளிவானது. முன்னும் பின்னும் ஒரே மாதிரியானது. அடிப்படைக் கொள்கைகள் மாறுபடாதவை. வரையறுக்கப்பட்டவை. இப்படி மாறுபடாதிருப்பதால், திருப்பித் திருப்பி அனுவசியமாக அதையே சொல்லுகிருர் என்று குறை கூறவும் நமக்கு மனம் போகிறது. தனது சுயசரிதையில் எதைக் கூறுகிருரோ அதையே 'இந்தியாவும் உலகமும்' என்ற நூலிலும் கூறுகிருர். உலக சரித்திரம் என்ற

நீண்ட நூலில் சாம்ராஜ்ஜியத்தை எந்தக் கோணத்தில் வைத்துப் பார்க்கிருரோ அதேபார்வை அவருடைய இதர எல்லா நூல்களிலும் பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தைப் பற்றிக் குறிப்பிடும் எல்லா நூல்களிலும் தென்படுகிறது. ஏதாவதொரு பிரச்சினையைத் தூக்கி முன் வைத்தால் அது பற்றி அவருடைய மனோநிலை என்ன என்பதை நாம் நன்ருக முன் கூட்டியுரைத்து விடலாம். மொழிப் பிரச்சினையா? ''சர்வ தேசீயவாதியாக இருப்பதால் ஆங்கிலத்தை முற்றிலும் கைவிடமாட்டார். முடியுமானல் ஒன்றுக்குமேற்பட்ட அன்னிய பாஷைகளை அவர் கற்கச் சொல்லுவார். தேசீயவாதியாக இருப்பதால் வெளிநாட்டு மொழிகளில் தவறில்லாமல் பேசக் கூடாதென்று சொல்ல மாட்டார். உள்நாட்டுக் கலாசார வாழ்வு மலருவதற்காக இங்குள்ள மொழிகளை வலுவடையச் செய்வார். இந்திய மொழிகள் யாவும் ஒரேவிதமான எழுத்தமைப்பைக் கொள்ளவேண்டுமென்று ஆசைப்படுவார். மாகாணங்களுக்கிடையே பொதுவான மொழி இந்துஸ்தானியாக இருக்கவேண்டுமென்று கூறுவார். கதர் பிரச்சினையா! நிச்சயம் அதைச் சிபாரிசு செய்வார். ஆனல் இயந்திர மயமாவதைத் தடுக்கக்கூடிய நிரந்தரக் கைப்பக்குவ மருந்தாக அல்ல. இன்றைக்கிருக்கக் கூடிய நிலைமையில் வறுமையிலாழ்ந்த கிராமங்களுக்கு உபாயமாக மேற்கொள்ளச் சொல்வர். மகாத்மா காந்தியைப் போல் கதரில் அவ்வளவு அதிகப்படியான மோகம் கொள்ள மாட்டாரென்பது நமக்கு நிச்சயம். ஏனென்ருல் காந்திஜி வெறுப்பதைப்போல இவரும் இயந்திர அபிவிருத்தியை வெறுப்பவரல்லர். முன்னேறும் நோக்கங் கொண்டவர். அவருடைய பார்வை எப்பொழுதும் வருங் காலத்தை நோக்கியிருக்குமே தவிர சென்ற காலத்தில் திரும்பாது. சரித்திரத்தின் வேகமான போக்கை நன்குணர்ந்தவர். ஆகவே தற்கால இயந்திரத் தொழிலபிவிருத்திமீது கடுஞ்சினம் கொள்ள மாட்டார். இயந்திர

சாதனம் செய்யும் கொடுமைகளிலிருந்து மனித ஆன்மா வைக் காக்கக்கூடிய ஒரே கேடயமாகக் கதரைக் கருதமாட் டார். கல்விப் பிரச்சினையா?—ஆண்களுக்கு அளிக்கப்படும் கல்விக்கு வேறுவிதமான கல்வியா பெண்களுக்களிப்பது என்ற கேள்வி வருமானால் அவருடைய பதில் எதுவாக இருக்கலாம் என்று நிச்சயமாகக் கூறிவிடலாம். 'கூடாது' என்ற பதில்தான் வரும். சமூகப் பொருளாதார ஏற்றத் தாழ்வைத் தொலைத்து யாரையும் சரிநிகர் சமானமாக்கு வதற்குக் கங்கணம் கட்டிக்கொண்ட வீரனிடத்திலிருந்து வேறு என்ன எதிர்பார்க்கக் கூடும்?

தனி நபர் வாழ்க்கை அல்லது அரசியல் வாழ்க்கை யைப் பற்றி அவர் என்ன ஆழ்ந்த அபிப்பிராயத்தைக் கொண்டிருக்கிறாரோ அதை யொட்டியே தன்னை எதிர்ப் படும் ஒவ்வொரு பிரச்சினையையும் நோக்குகிறார். அவர் கொண்டுவரும் பரிகாரங்கள் ஒரு ஊற்றிலிருந்து உற்பத்தி யாயின போல் தோன்றும். புதியதொரு பிரச்சினையைப் பற்றி அவர் ஏதாவது கூறத் தொடங்குவாரானால் 'அவ் வளவு சிரமம் வேண்டாம். உங்களுடைய பதில் எங்களுக்கு ஏற்கனவே தெரியும்' என்று அவரைப் பார்த்துச் சொல்லத் தோன்றும் நமக்கு.

அவருடைய நூல்களிலுள்ள சாராம்சத்தைப்பற்றி மொத்தமாகக் கவனித்தால், அதை விளக்கிச் சொல்பவ ருடைய வேலை மிக எளிது. நூலாசிரியருடைய அடிப் படையான மனப்போக்கு எப்படிப்பட்டது என்று குறிப் பிட்டால் போதும். அது சரியா? தப்பா? என்ற ஆராய்ச் சியை, அரசியல் பொருளாதார கொள்கைகளை ஆராய்பவ ரிடத்தில் விட்டு விடுவோம். அவருடைய மனப்போக்குகள் ஒவ்வொரு பக்கத்திலும் வெளிப்படையாக விளங்குவதைக் காணலாம். அவைகள் யாவை என்பதை ஆறு பிரிவாகச் சுருக்கிக் கீழே தருகிறேன்.

முதலாவதாக, இன்றைய உலகம் ஒன்று. ஆகவே

நாம் சர்வதேசீயப் பார்வை கொள்ளவேண்டும். இந்தியா வின் நிலைமை தனியானதல்ல. ஆசியாவில் சாம்ராஜ்ஜி யத்தை எதிர்க்கும் அநேக நாடுகளில் இந்தியாவும் முக்கிய மான ஒன்று. ஆயினும் எத்தனையோ நாடுகளில் இதுவும் ஒன்றுதானே. சுதந்திர இந்தியா, இன்றைய இந்தியாவைக் காட்டிலும் உலகத்தோடு இன்னும் பலமான, ஏராளமான பிணைப்புகளைக் கொண்டிருக்கும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தி யத்தை எதிர்ப்பதற்காக இந்தியாவின் தேசீய மனப் பான்மை தற்காலத்துக்குக் கொஞ்சம் அவசியமானாலும், இந்தத் தேசீயம் ஆக்கிரமிப்புத் தன்மை வாய்ந்ததல்ல. உலகத்திலுள்ள இதர முன்னேற்ற சக்திகளோடு சேர்ந்து கொள்ள இந்தியா ஆசைப்படுகிறது. இரண்டாவதாக, சுதந்திரம் என்பது நல்வாழ்வுக்குச் சாதனமாக இருந்தா லும், சுதந்திரம் இல்லாமல் நல்வாழ்வு இருக்க முடியாது. அதன் பயனாக உண்மையான சுதந்திரம் இருக்கவேண்டும். எல்லோருக்கும் சுதந்திரம் இருக்கவேண்டும். அரசியல் சுதந்திரம் மட்டும் போதாது. அத்துடன் பொருளாதார சமூக சுதந்திரம் யாவருக்கும் கிடைக்கவேண்டும். ஆனால் சுதந்திரத்துக்கும் கடமைகளும் பொறுப்புகளும் உண்டு. உண்மையாக எவ்வளவுக் கெவ்வளவு சுதந்திரம் அதிகமோ அவ்வளவுக் கவ்வளவு அடக்க வொழுக்கம் அதிகமா யிருக்கவேண்டும்.

மூன்றாவதாக, ஏகாதிபத்தியம் எல்லாவித முன்னேற் றத்துக்கும் சமாதானத்துக்கும் எதிரி. முதலாளித்துவத் தின் குழந்தை. சென்ற காலத்திலே அது உபயோகமாக- அவசியமாக - இருந்திருக்கலாம். ஆனால் இக்காலத்துக் கொவ்வாதது, மனிதனால் இயந்திரங்களை ஏராளமாகச் செய்து அவைகளின் மூலம், எல்லாப் பொருள்களையும் எல்லோருக்கும் ஏராளமாகக் கொடுக்கக்கூடிய இக் காலத்திலே ஏகாதிபத்தியமே பஞ்சத்தையும் அனாதரவை யும் ஏற்படுத்துகிறது.

நான்காவதாக, முதலாளித்துவ ஏகாதிபத்தியத்தின் நவீனமானதும் மிக ஆபத்தானதுமான பிறவியே பாசிஸம். அது அவர்களைக் கொல்லுமுன் விடுதலையை விரும்புகிறவர்கள் அதை ஒழிக்கவேண்டும், பாசிஸத்தோடு ராஜி செய்துகொள்வதென்பது முடியாத காரியம்.

ஐந்தாவதாக, வாழ்வின் தீமைகளை அரசியல் பொருளாதாரத் தீமைகளைப் போக்குவதற்கு ஹிம்சை முடிவான வழியல்ல. தன்னுடைய பலம் எதிரியின் பலத்தைக் காட்டிலும் அதிகமாக இருந்தாலொழிய அதைப்பற்றி நினைப்பதற்கும் இடமில்லை. அது பயன்படாது. வெறும் அற்பத்தனமான ஹிம்ஸை உபயோகமில்லையென்பதோடுமட்டுமல்ல; மகா மோசமானதுங்கூட. அரசியல் காரணத்துக்காக ஆங்காங்கே தனிப்பட்டவர்களை ஹிம்சைப்படுத்துவது அரசியலறிவு முதிர்ச்சி பெறவில்லையென்பதையே காட்டுகிறது. கொள்கையளவிலும் நடைமுறையிலும் அஹிம்சை நல்ல பயனை அளிக்கிறது. எப்படியிருந்தாலும் இன்றைய இந்தியாவில் அதுதான் நடைமுறைக்கேற்ற வழி. ஹிம்சை சேர்ந்த சுதந்திரம் அடிமைத்தனத்தைக் காட்டிலும் சிறந்ததென்பதில் சந்தேகமில்லை. இருந்தாலும் ஹிம்சை, அஹிம்யையெனு மிவ்விரண்டில் அஹிம்சையே மேற்கொள்ளத் தக்கது. தவறுதல் இல்லாத ஆயுதமாக அது இருக்காது. ஆனால் அது அறிவுத்தன்மை யுள்ளதல்ல; சண்டித்தனம் வாய்ந்ததல்ல; இது நிச்சயம். வேகம் வாய்ந்தது. நிர்ப்பந்தப்படுத்தும் சக்தி கொண்டது. அதைக் கையாளுவதற்கு மிக உயர்ந்த ரகமான வீரம் வேண்டும்.

ஆறுவது, கட்டுப்பாடாக அமைக்கப்பட்ட மதம் அரசியலுக்குப் பெரிய தலைவலியாக இருக்குமே யொழிய ஒத்தாசையாக இருக்காது. இகலோகத்தைப் பற்றியும் இவ்வாழ்வைப் பற்றியும் கவலை கொள்ளாது செத்த பிறகு கிடைக்கும் பரலோக வாழ்வைப்பற்றி மதம் அதிக வலியுறுத்துவதால் அநீதியையும், வறுமையையும் ஏற்றத் தாழ்

வையும் மக்கள் எளிதில் ஏற்றுக்கொள்ளும்படி செய்கிறது. பெரும்பாலும் பிறரைச் சுரண்டுவதற்கு அது ஒரு போர்வையாக உதவுகிறது. பகுத்தறிவில்லாத மூட நம்பிக்கைகளுக்கும் போரிட்டுக் கொண்டிருக்கும் மத வெறிகளுக்கும் இதுவே காரணமாக இருக்கிறது.

ஜவாஹர் எழுதியவைகளில் முக்கியமானவை யாவும் மேற்சொன்ன அடிப்படை மனப்போக்குகளில் ஒன்றையோ அல்லது பலவற்றையோ விவரிப்பனவாக இருக்கும். இக்கருத்துக்கள் ஏற்கத்தக்கனவா இல்லையா என்பது பிறர் மதிப்பிட வேண்டிய காரியம். எந்த ஊற்றுக்கண்களிலிருந்து உணர்ச்சி பெற்று அவர் எழுத்தாளராக இருக்கிறார் என்பதை எடுத்துக்காட்டி, அவருடைய நூல்களில் இலக்கிய நயமுள்ளவைகளைப் பார்த்தால்மட்டும் போதும்.

இவருடைய எழுத்துக்களின் இலக்கியப் பாங்கைப் பற்றி ஆராய்வதுதான் இலக்கிய விமர்சகருக்குக் கஷ்டமாக இருக்கின்றது. இது அதிசயமல்லவா ? ஏனெனில் இவை இலக்கிய ரசிகனால் எழுதப்பட்டவையல்ல. அல்லது இலக்கியத்தை ஜீவனமாக மேற்கொண்ட இலக்கியக் கர்த்தாவால் எழுதப்பட்டவையல்ல. தன் நாட்டின் விடுதலைக்காக ஓயாது போரிடும் வீரனுடைய நூல்கள். நூலெழுத வேண்டுமென்ற நோக்கத்தை முதல் நோக்கமாகக் கொள்ளாது சுதந்திரப் போராட்டத்தினிடையே அதற்கனுசரணையாக எழுதப்பட்டவை. ஆகவே இவைகளைத் தூய இலக்கிய விமர்சகம்போல ஆராய முற்படுவது தன்னையே மூச்சுத்திணற வைத்துக்கொள்வது போலாகும்.

தான் எழுதியவைகளில் இலக்கியச் சிறப்பு இல்லையென்று அவரே பல தடவை கூறியிருக்கிறார். 'நான் இலக்கிய கர்த்தா அல்ல' என்று கூறுகிறார். 'பத்திரிகை எழுத்தாளனைப் போலச் சிறிது இருக்கிறேன்' என்று தன்னைச் சொல்லிக் கொள்கிறார், என்றாலும் நிச்சயமாக இது தன்னைப் பற்றி மிகவும் தாழ்வாக மதிப்பிடுவதாகும். சாதா

ரணப் பத்திரிகை எழுத்தாளரல்லர் இவர். அறிஞர், இலக்கியகர்த்தா இல்லாவிட்டாலும் இவர் புத்தக மனிதர். எவ்வெப்பொழுது ஓய்வு கிடைக்கிறதோ எப்பொழுதெல்லாம் படிக்க முடியுமோ அப்பொழுதெல்லாம் படிக்கிறார். பிரயாணம் புறப்பட்டாரென்றால், இத்தனை புத்தகங்களை படிக்க முடியாதென்று தெரிந்திருந்தும் அத்தனை புத்தகங்களையும் பெட்டியில் போட்டுக்கொண்டு செல்வார். ஏதாவது சிறிது ஓய்வு கிடைத்தால் ராத்திரியில் உட்கார்ந்து படிக்கிறார். புத்தகங்கள் கிடைத்துவிட்டால், நாலு பேரோடு இருப்பதற்குப் பதில் தனிமையையே விரும்புகிறார். சோம்பலாகக் காலம் கழிக்கும்படி நிர்ப்பந்தம் ஏற்பட்ட காலத்திலே—கடந்த பதினைந்து ஆண்டுகளிலே இப்படி நேர்ந்த காலம் கொஞ்ச நஞ்சமல்ல—அவருடைய சிறைக்கூடம் ஒதுக்கமான படிப்பறையாகி விடுகிறது. அங்கே உட்கார்ந்து படிக்கிறார். நாவல்களை யல்ல; அவை போன்றவைகளையுமல்ல. ஆனால் பெரிய நூல்கள், அதாவது சரித்திரங்கள், பிரயாண நூல்கள், துணிகரச் செயல்களைக் கூறு நூல்கள், மனிதப் போராட்டம், முன்னேற்றத்தைக் குறிப்பவை, ஆகியவைகளையே படிப்பார். புத்தகப் படிப்பிலிருந்து மாறுதல் வேண்டுமென்பதற்காக பேனாவை எடுத்துக்கொண்டு பிரமாதமான சுய சரிதம் எழுதுவதில் தனது இதயத்தைக் கொட்டுவார். அல்லது மகள் மீது தனது வாஞ்சையைக் காட்டுவதற்காகவும் தனது படித்த சரித்திரத்தைக் காட்டவும் அவளுக்கு இருநூறு கடிதங்களை எழுதுவார். அதிலேயே மனித சரித்திர முழுவதையுங் கண்டு விடலாம். ஜெயிலை விட்டு வெளியில் வந்ததும் தான் படித்ததை நண்பர்களுடன் பரிமாறிக் கொள்வார். ஆனால் வெளியே வந்த பிறகு எவ்வளவுதான் ஆசைப்பட்டாலும் படித்துக் கொண்டே யிருக்க முடியாது. வெளி உலகக் குரல்களைத் தடுக்க முடியாது. அம்மாதிரி சந்தர்ப்பங்களில் அவரிடமிருந்து கதிகலங்க வைக்கும் நூல்கள் வராவிட்டாலும்

ஆழ்ந்த சிந்தனையுள்ள கட்டுரைகள், குட்டி நூல்கள், வியாசங்கள், பேச்சுக்கள்—வெளிவரும். இவைகளெல்லாம் நிச்சயமாக, ஒரு பத்திரிகையாளன் அல்லது அரசியல் வாதியின் எழுத்துக்களே. இதில் ஒளிவு மறைவில்லை. அடர்த்தியான முட்புதருக்கு நிகரான பொது வாழ்விலிருந்து, அசாதாரணமான போராட்ட வாழ்விலிருந்து அவசரமாய்ப் பறிக்கப்பட்ட இலந்தைப் பழங்களுக்கு ஒப்பானவை இவ் வெழுத்துக்கள். அதற்காக அவை தாறுமாருகப் பறிக்கப் பட்டவையாகா. சுவை மிகுந்தவை. தொந்தரவில்லாமல் தனிமையில் நன்ருகக் கனிந்த கனிகளான சுயசரிதம் உலக சரிதம்—இவைகளில்தான் பெரிய நூலாசிரியராவதற்குப் பெருமுயற்சி எடுத்துக் கொண்டிருக்கிருர் என்பதில் சந்தேகமில்லை—ஆகிய நூல்களும் கூட உண்மையில் தான் அனுபவித்த அரசியல் வாழ்வின் தூண்டுதலின் பழுத்த பழமேயன்றி இலக்கியம் அல்லது கலைச்சுவையின் தூண்டுதலால் கனிந்த கனிகளல்ல. இந்நூல்கள், தொழிலிலாழ்ந்த ஒரு வாழ்வில் முளைத்த நூல்கள், இவ்வாருக ஜவாஹர்லால் ஒரு சாதாரண பத்திரிகை எழுத்தாளரல்லர். இலக்கிய கர்த்தா என்ற சிறப்பியல்பு கொண்டவருமல்லர். சதா தொழிலில் ஈடுபடுபவர். அதோடு நிறையக் கற்பவர். எழுத்து வன்மையுள்ள தேசபக்தர்.

அப்படியானுல் நூலாசிரியராக, (அவரே ஒப்புக் கொண்டபடி) பத்திரிகையாளராக, அறிக்கைகள், சிறு வெளியீடுகள் எழுதுபவராக அவருடைய எழுத்துத் திறமையை ஆராய்வது அனுவசியமா? அதிகப்பிரசங்கித் தனமா? நிச்சயமாக அதிகப்பிரசங்கித்தன மல்ல; ஆனுல் கண்டிப்பாகக் கஷ்டமான காரியம். பள்ளிக்கூட வகுப் பறைப் பரீட்சை முறையை இங்கு கொண்டு வருவோ மானுல், அல்லது பெரிய காவியங்களோடு ஒப்பிட்டு, அவ் வளவு திருத்தம், மொழி மரபு, இருக்கின்றனவா என்று தேடுவோமானுல் நாம் முக்கியமானதொரு விஷயத்தை மறந்

தவர்களாகிறோம். இவருடைய நூல்கள் ஒருமிக்க நம்பிக்கை கொண்ட இதயத்திலிருந்து கனற்குடாக வந்தவை. சாதாரண இலக்கிய மனப்போக்கிலிருந்து வந்தவையல்ல. உன்னத லட்சியங்களில் நம்பிக்கையற்ற எதிரியோடு போராடிக்கொண்டு அந்த லட்சியங்களைப் பரப்புவதில் தீவிரமாய் ஈடுபட்டிருக்கும் படைவீரன், தான் சொல்ல வேண்டியவைகளை நேருக்கு நேரே, முரட்டுத்தனமாக, அச்சமின்றிச் சொல்லுவானே யொழிய தன் சொற்களை அழகுபடுத்தி, இழைத்து, நாசூக்காக, ஆசாரக் கோவை யறிந்தா சொல்லப் போகிறன்? நான் இவ்வாறு கூறுவதனல் எங்கே எழுத்துப் பிழை காணவல்ல பள்ளியாசிரியர் கைவைத்தால் இவருடைய நூல்களில் பல பிழைக்குமோ என்னமோ என்று நான் சிறிது தயங்குவதாக நினைக்க வேண்டாம். நான் சொல்ல வந்தது அதுவல்ல. அந்த மாதிரி நிலைமையில் பள்ளியாசிரியர் பாடே ஆபத்தாகும். தான் ஒரு பள்ளியாசிரியர் மட்டுமல்ல, தான் ஒரு இலக்கணந் தொங்கி என்பதையுங் காட்டிக்கொள்வார். ஜவாஹருடைய நூல்கள் இப்பேர்ப்பட்டவர்கள் கைவைப்பால் உதிர்ந்து விழக்கூடியவையல்ல. அவ்வளவு உறுதியானவை. யாரும் அதன் சார்பாக மன்னிப்புக் கோர வேண்டிய தேவையில்லை. இந்த மாதிரி இலக்கணந் தொங்கியாக மாறிவிடாமல், அரசியல்வாதிகளுக்குள்ளே அறிஞரான இவருடைய நூல்களிலே இலக்கிய நயத்தை நாம் தேடிப் பார்க்கலாம். இந்த உருப்படியான வேலையிலே இப்பொழுது இறங்குகிறேன்.

அவருடைய நூல்கள் யாவற்றையும் வரிசையாக ஆராய்ந்து ஏதாவது சொல்வது எனது உத்தேசமில்லை. ஆனால் அவருடைய புத்தகங்களில் பெரியவைகளான சுய சரித்திரம், உலக சரித்திரம் ஆகிய இரண்டையும் பற்றி இரண்டொரு வார்த்தை சொல்லத்தான் வேண்டும். அவை மிக விரிவானவை. ஆசிரியரின் சொல்லோ எப்போதும்

தெளிவு வலிமை, அறிவாதாரம் பொருந்தியிருக்கிறது. அவருடைய வாசகத்தில் அறிவு அடித்தளமாக இருக்கிறது. உணர்ச்சி குறைந்து சம்பவங்களைத் தொடர்பு படுத்தாமல் கூறுவதுபோல இருக்கிறது. என்றாலும் இவ்விரண்டு நூல்களும் நிகழ்ச்சிகளை மட்டும் அப்படியப்படியே குறிப்பன வல்ல. சுய சரித்திர மிருக்கிறதே அது வெறும் சம்பவங்களைக் கூறும் கதையல்ல. சம்பவங்கள் என்ன விதமாக மனத்தில் பதிந்தன என்பதை அந்நூல் குறிக்கிறது. ஆகவே, அது முக்கியமாக அவரது அகவாழ்வைப் பற்றியது சில இடங்களில்,

உலக சரித்திரத்தைத் தன் மகள் பொருட்டு எழுதினர். அவள்மீது தனது அக்கரையையும் அன்பையும் காட்டும் இடங்கள் ஏராளமாக இருக்கின்றன. உலக சரித்திரத்தில் தன்னைப்பற்றிக் குறிப்பிடுமிடங்கள் கொஞ்சமல்ல. இவர் உலக சரித்திரத்தில், மனித வர்க்கத்தின் கொடிய குற்றங்களையும் முட்டாள்தனங்களையும் உணர்ச்சியற்ற நடையில் குறித்து வைக்கவில்லை. வருங்காலத்தை உருவாக்குகிற சிற்பியைப்போல சென்ற நெடுங்காலத்தையும் உலகத்தையும் சுற்றிப் பார்க்கிருர். அக் காலத்திய கடும் போராட்டங்கள், கஷ்டப்பட்டு ஜெயித்த சுதந்திரங்கள், வாழ்வு தாழ்வுக் காலங்கள், வெற்றிகள் யாவும் வருங்காலத்தில் ஏற்படவிருக்கும் சர்வதேச சமாதானத்துக்கும் தனிமனித நல்வாழ்வுக்கும் எவ்வாறு வழி செய்கின்றன என்று விளக்கிக் கூறிச் செல்கிருர். உலகத்துக்கு எந்த விதமான பொருளாதார, அரசியல் திட்டங்கள் தேவை என்பது ப்பற்றி அவருக்கு யாதொரு சந்தேகமுமில்லையாதலால் அவருடைய உலக சரித்திரம் முழுவதும் அவருடைய வருங்கால அரசியல் காட்சியாகவே இருக்கிறது. அவருடைய போக்கும் சமூக சித்தாந்தமும் பொது அறிவுக்கும் நியாய வாதத்துக்கும் உட்பட்டவை என்பதை நான் வலியுறுத்த விரும்புகிறேன். அவர் சொல்லுவதத்தனையும் பகுத்தறிவோ

டியைந்தது. இயற்கையுணர்வு என்னும் மந்திரவாளை உப யோகப்படுத்துகிறவரை வெறுக்கிறுர். அல்லது மத நம் பிக்கை என்ற அகலமான கேடயத்தில் ஒளிந்துகொண்டு தற்காப்பு நாடுவதையும் இகழ்கிறுர். அவருடைய வாக்கு வாதம் சரியில்லை என்று நீங்கள் சொல்லலாம். ஆனுல் அனுபவத்தை ஆதாரமாகப் பேசுகிறுர். விளக்கமுடியாத விருப்பு வெறுப்புக்களை அல்லது தேவரகசியமான மூட நம்பிக்கைகளை ஆதாரமாகக் கொண்டு பேசவில்லை. அறிவை ஆதாரமாகக் கொண்ட நேர்மை, ஒளிவு மறை வற்ற தன்மை, பகுத்தறிவை அறைகூவி அழைக்கும் போக்கு ஆகிய குணங்களே அவரைத் தற்கால அறிஞருள் அறிஞனுக ஆக்குகிறது. 'கிழக்கு நாட்டார்களில் இவர் ஒருவர் நமக்கு விளங்கும்படி எழுதுகிறுர்' என்று சொல் லும்படி எழுதுகிறுர். ஐரோப்பிய தோரணையில் பேசு கிறுர். அவருடைய மனப்பாங்கு தற்காலத்துக் கேற்ற முறையில் தெளிவாக அமைந்திருக்கிறது.

இதெல்லாம் நன்ருகத் தெரிந்த விஷயம். அவருடைய நூல்களிலுள்ள இந்தக் குணுதிசயங்களைப் பற்றித்தான் இன்னும் சிறிது ஆராய விரும்புகிறேன். மனத்தைக் கெஞ்சி வேண்டிக்கொண்டல்ல. மன விருப்பத்துடன்.

ஒரு எழுத்தாளர், அவர் வேறு என்ன செய்தாலும் சரி, செய்யாவிட்டாலும் சரி, அவர் நமக்குப் பிரியமாக எழுதுகிறுர் என்ருல் அவர் எப்படி எழுதுகிறுர்? எவர் தன் னுடைய கற்பனையையும் திறமையையும் சேர்த்துத் தெளி வாக வரைகிறுரோ உள்ளத்தை ஈர்க்கும்படி ஒழுங்காகச் சொல்லுகிறுரோ, கவிதையாலும், சோகத்தாலும், அல் லது நகைப்பினுலும் இதயத்தைத் தொடுகிறுரோ அவரே மன்மகிழச் செய்யும் எழுத்தாளர். ஜவாஹர்லாலின் எழுத் துக்களை வாசித்தவர்கள், மேற்போக்கான பத்திரிகைக் கட்டுரைகளையோ அல்லது பெரிதும் கவனிக்கப்படும் பெரிய புத்தகங்களையோ வாசித்தவர்கள் அவர் இத்தனை

வகையாலும் நம்மை மகிழ்விக்கிருர் என்ற உறுதி கொள்ளாமலிருக்க முடியாது. நான் ஏற்கனவே கூறியதுபோல அவர் தனது சுயசரிதத்தை எழுதும்போது, புதியதொரு கலைப்பொருளை ஆக்குவதற்கும், அழகும் மனவெழுச்சியும் கொண்ட பகுத்தறிவில் திட்டம் செய்யப்பட்ட நூலை எழுதுவதற்கு எவ்வளவோ வசதி சந்தர்ப்பம் ஆசை இருந்ததென்பது உண்மையே. கவிகளை மேற்கோளாக எடுத்துக் காட்டுவதிலும், இலக்கிய உதாரணங்களைத் தொட்டுக் காட்டுவதிலும் இன்னும் இதுபோன்ற இலக்கிய ரசனையில் ஈடுபடவும் அவரால் முடியும். ஈடுபட்டு மிருக்கிருர். இவர் எழுதிய ஏராளமான கட்டுரைகள் கிட்டத்தட்ட நிலைத்த சுவையுள்ளனவல்ல. பத்திரிகைகளுக்காகப் பெரும்பாலும் அவசரத்தில் எழுதப்பட்டவை. ஆகையினுல் இக்கட்டுரைகளில் உயர்ந்த கலைப்பண்பைச் சேர்ப்பதற்கு இடமுமில்லை; தேவையுமில்லை. ஆனுல் இவைகளிலும் கலைப்பண்பு, இலக்கிய ரசனை, இலக்கியத்திறம் ஆகிய குணுதிசயங்களின் அடையாளங்கள் ஏராளமாக ஆங்காங்கு பரவி நிற்பதை ஒருவன் காணுனுயின் அவன் அவ்வளவு நன்ருகக் கற்றுணரத் தெரியாதவனுகத்தா னிருக்கவேண்டும்.

சுய சரிதம், உலக சரித்திரம், அதற்கு முன்னேடியாக வந்த ஒலிப் புத்தகமான 'ஒரு தகப்பன் தன் மகளுக்கு எழுதிய கடிதங்கள்' முதலிய புத்தகங்கள் தவிர மேலும் அவருடைய கட்டுரைத் தொகுதிகள், சொற்சித்திரங்கள், 'சோவியத் ரஷ்யா,' 'இந்தியாவும் உலகமும்,' 'இந்தியாவில் பதினெட்டு மாதங்கள்' என்னும் வியாசங்கள், 'சமீபகால விவசாயங்களும் கட்டுரைகளும்', 'நாம் எங்கிருக்கிரேம்?,' 'யுத்தமும் சைனுவும் ஸ்பெயினும்' ஆகிய வெளியீடுகள் என் முன்னிருக்கின்றன. கடைசியில் குறிப்பிட்ட புத்தகத்தை எடுத்து அதன் பக்கங்களைத் திருப்பும்போது மனத்தைக் குலுக்கும் இப்பகுதி தென்படுகிறது.

''ஒரு வருஷத்துக்கு முந்தித்தானு நான் ஸ்பெயினில்

இருந்தேன்? பல்லாண்டுகள், துன்ப அதிர்ச்சிகளை, துயரங் களைத் தாங்கிய பல்லாண்டுகள் கழிந்துவிட்டன. சூரிய சந்திரர்களைக் கொண்டு காலத்தைக் கணக்கிடுகிறோம். வருஷங்கள் செல்லச் செல்ல அவைகளோடு மேலும் சேர்ந்து குவியும் நமது எழுச்சிகளையும் அனுபவங்களையும் அந்த விதமான கால அளவைக் கொண்டு அளப்பது சரி யல்ல. அது மோசமான அளவு. நான் ஸ்பெயின் தேசத் தில் சந்தித்த ஆண்களும் பெண்களும் துணிவும் கண்ணிய மும் உடையவர்கள். நாட்டின் நம்பிக்கைக்கு அறிகுறியா யிருந்தவர்கள். இன்று மாயத் தோற்றங்களாகி விட்டார் கள். அனேகர் இறந்து போயினர். அனேகர் அகதிகளா கத் திரிந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் எனது ஞாபக மாளிகையில், அந்தக் கொஞ்ச நாளில் நான் ஸ்பெயினில் கண்ட காட்சிகளும் மனிதர்களும் நிரம்பியிருக்கிறார்கள். சில சமயங்களில் நான் நேற்றுத்தான் பார்த்ததுபோல அவ் வளவு தெளிவாக அக் காட்சிகள் மனக்கண்முன் வந்து நிற் கின்றன. சில சமயங்களில் அனேகாயிர வருஷங்களுக்கு முன்பு பார்த்தது போலவும் எனக்கு நிரம்ப வயதானது போலவும் தோன்றுகிறது. காலம் என்பதிருக்கிறதே அது நமக்கு ஒரு அதிசயமான, பிடிக்குளகப்படாத தோழன். ஆனால் நமது ஞாபகத்தின் மாயா ஜாலங்கள் இன்னும் அதிசயமாக இருக்கின்றன. நெடுநாளைக்கு முன்பே மறந்த விஷயங்கள் மனதிற்குத் திரும்புவதும், உணர்வு நிலையில் கீழ்ப்படியிலுள்ள உயிர்வர்க்கத்திடையே திடீரென்று நமது கவனம் சென்று திரும்புவதும் மனித வர்க்கத்தின் ஆதித் தோற்றத்தின் மங்கலான நினைவுகளும், மனத்தின் அற்புத மாயா ஜாலங்களாக இருக்கின்றன. மனிதர்கள், நாம் இருக்கிறோமே மிக மிக முதுமையானவர் கள். ஆதி மனிதன் காலத்து வானம்பாடியின் குரல் இன் னும் நமது காதுகளில் ஒலித்துக்கொண்டிருக்கிறது. அவ னுடைய கனவுகள் இன்னும் நம்மை அமைதியாக இருக்க

விடவில்லை. பழங்காலக் கொடுஞ் செயல்கள் நம்மைக் கீழே அமுக்குகின்றன."

கவிதை ரூபமான, உயர்ந்த ரகமான, சந்தவின்பம் கூடிய உரைநடை ஜவாஹர்லாலின் நூல்களில் சாதாரண மாகக் காணலாம். காலப் போக்கைக் கூற விரும்பும் போதும் அல்லது மனித ஜீவனைப்பற்றிக் கூற விரும்பும் போதும் இத்தகைய உரைநடையில் சிறகடிக்க ஆரம் பித்து விடுவார். சரித்திரத்திலாழ்ந்த இன்பமும், மனத்தின் ஜீவனின் துணிகரச் செயல்களை யறிவதில் விருப்பமும் உள்ளவர் என்பதை இந்நடை காட்டுகிறது. 'சைனாவும் ஸ்பெயினும் யுத்தமும்' என்ற நூலில் 'ஸ்பானிஷ் ரிபப் ளிக்குக்குப் பாராட்டு' என்ற அத்தியாயத்தின் முதல் பத்தியையும் சுயசரித்திரத்தில் (பக்கங்கள் 429-430) முற் கால இந்திய சரித்திரத்தையும், உலக சரித்திரத்தில் உயிரா கிய ஆறு உற்பத்தியாகிற வருணனையும் (194-வது கடிதம்); 'இந்தியாவில் பதினெட்டு மாதங்கள்' என்ற நூலின் ஆரம் பக் கட்டுரையில் இயற்கையோடு மனிதன் நடத்திய துணி கரப் போராட்டச் சிந்தனைகளையும் (பக்கங்கள் 3-5) பாருங்கள். துரதிருஷ்டமான மக்கள் அல்லது நபர்கள் படுந் துன்பத்தைப் பற்றிக் கூறும்போது வீழ்த்தி மிதிக்கப் பட்டு அடக்கியொடுக்கப்பட்ட மக்கள் மீது அவர் கொண்ட அன்பும் பரிவும் அவருடைய வார்த்தைகளுக்கு அரிய சக்தியும் சோகரஸமும் கொடுக்கின்றன. உழவர் களுக்கிடையே மகாத்மா காந்தி எவ்வாறு தோற்றமளிக் கிறார் என்பதை வருணிக்கும் அவரது சொல்லோவியத் தைப் பாருங்கள்.

"ஆனால், கடைசியாக நம்பிக்கையின் ஒளி இலேசாகக் கால் வீசிற்று. 'நல்ல காலம் வருகுது கஷ்டங்கள் குறையுது' என்று ஒரு குரல் இலேசாக ஒலித்தது. ஒல்லியான ஒரு மனிதர் வந்தார். நேரே அவன் கண் களுக்குள் உற்று நோக்கினார். வாடி வதங்கிய அவனுடைய

இதய ஆழத்தினுள்ளும் சென்று அவனை வருத்திய நீண்ட வேதனையை உணர்ந்தார், அவரது கண்களில் மந்திர சக்தியிருந்தது. அவர் தொடுகையில் ஆவேசம் பிறக்கும். அவரது குரலில் ஆதரவும், உதவி செய்யப் பேராவலும் சாகும் வரை எல்லையற்ற அன்பும் விசுவாசமும் தொனித்தன. உழவனும் பாட்டாளியும், இன்னும் வீழ்த்தி மிதிக்கப்பட்ட அனைவரும் அவரைக் கண்டபோதும் கேட்ட போதும் புத்துயிர் பெற்றெழுந்தார்கள். அவர்களது சோர்ந்த இதயங்கள் துடிக்கலாயின. அவர்களுக்கே தெரியாமல் ஒரு அதிசய நம்பிக்கை அவர்களுள்ளத்தில் தோன்றியது. அவ்வளவுதான். ஆனந்தம் பொங்கி 'மகாத்மா காந்திக்கு ஜே' என்று முழங்கினார்கள். தமது துன்பப் படுகுழியிலிருந்து வெளியேற முற்பட்டார்கள்; ஆனால் நெடுங்காலமாக அவர்களை நசுக்கிவந்த அந்தப் பழைய இயந்திரம் அவர்களை அவ்வளவு இலேசில் விட்டுவிடுமா? விடவில்லை. மேலும் சுழன்றது. அவர்களை நசுக்குவதற்குப் புதிய ஆயுதங்களையும் சட்டங்களையும் அவசரச் சட்டங்களையும் அவ்வியந்திரம் உற்பத்தி செய்தது. அவர்களை இறுகப் பிணிக்கப் புதிய தளைகளை உண்டாக்கிற்று. பிறகு?...அது என்னுடைய கதையையோ சரித்திரத்தையோ சேர்ந்த பகுதியல்ல. அது நாளைய தினத்தைச் சேர்ந்த பகுதி; அந்த நாளையத் தினம் இன்றையத்தினமாகும் போது, நமக்கு எல்லாம் தெரியவரும். ஆனால் அதுபற்றி யாருக்கும் சந்தேகமா?"

இந்தக் கதைப் போக்கிலமைந்துள்ள ஏக்கமும் சோகமும் விவிலிய வேத நடையின் இனிய சந்தத்தை எட்டிப் பிடிக்கின்றன. அடுத்தாற்போல எடுத்துக்காட்டப்படுகிற, பிரெஞ்சுப் புரட்சிக் காலத்துப் பயங்கர ஆட்சியைப் பற்றிய வருணனை நாடகக் காட்சிபோல அமைந்திருக்கிறது. வெட்டுகின்ற சொற்கள், கண்டிப்பான தொனி. அதைக் காணலாம்.

'இவ்விதமாகப் பயங்கர ஆட்சி தொடங்கியது. தினங்

தோறும் தண்டனை யடைந்தவர்களை கில்லெட்டின் வெட்டுக் கருவிக்கு இரையாக்குவதற்கு அழைத்துச் செல்லு பிரயாணம் நடந்துவந்தது. இந் நரபலிகளை ஏற்றிச் செல்லும் வண்டிகள் பாரிஸ் தெருக்களின் வழியாகக் கிரீச்சிட்டுக்கொண்டு சென்றன. துயருற்ற அம் மக்களைக் கண்டு ஜனங்கள் கேலி செய்திகழ்ந்தனர். கன்வென்ஷனில் கூட ஆளுகின்ற கோஷ்டிக்கு எதிராகப் பேசுவது ஆபத்தாக விருந்தது. அத்தகைய பேச்சு சந்தேகத்துக்கு இடம் தரும். சந்தேகம் விசாரணைக்கு இடம் தரும். விசாரணை கில்லெட்டினில் கொண்டுபோய்ச் சேர்க்கும். கன்வென்ஷனைப் பொதுநலக் கமிட்டி பொதுப் பாதுகாப்புக் கமிட்டிகள் ஆண்டுவந்தன; இந்தக் கமிட்டிகளின் கையில்தான் எல்லோருடைய வாழ்வும் சாவும் இருந்தன. இந்த அதிகாரத்தைப் பிரசங்கங்களோடு பங்கிட்டுக்கொள்ள அவை விரும்பவில்லை. இக் கமிட்டிகள் பாரிஸ் கம்யூன் சங்கத்தையும் எதிர்த்தன. தங்களோடு இணங்கிவராத எவரையும் எதிர்த்தன. அதிகாரம் இருக்கிறதே அதைப்போல ஜனங்களைக் கெடுக்கிறது வேறெதுவுமில்லை. ஆகவே இந்தக் கமிட்டிகள் கம்யூனை ஒடுக்க ஆரம்பித்தன. கம்யூன் இதுவரையும் தனது கிளைகளுடன் புரட்சிக்கு முதுகெலும்பா யிருந்தது. மூதலில் அதன் கிளைகளை ஒடித்தார்கள். பிறகு கம்யூனையும் முடித்தார்கள்; இவ்விதமாகப் புரட்சி பெரும்பாலும் தன்னையே தின்று விடுகிறது.'

மியூனிக் ஒப்பந்தத்துக்கப்புறம் ஐரோப்பா முழுதும் இமைகொட்டாமல் மூச்சைக் கையில் பிடித்துக்கொண்டிருந்த நிலைமையைப் பின்வரும் நாடக ரூபத்தாலன்றி வேறு எவ்வாறு நம்பிக்கையும் பயத்தையும் பின்னிக் கலந்து நன்ருகச் சொல்ல முடியும் ?

'பிரேகு என்ன முடிவு செய்திருக்கிறது? லண்டனைப் பற்றி என்ன சேதி? பாரிஸைப்பற்றி? லண்டனில் கொந்தளிப்பு கிளம்பிக் கொண்டிருக்கிறது. பாரிஸில் பிரதிநிதி

சபை நாளை கூடுகிறது. பிரெஞ்சு அரசாங்கம் வீழ்ச்சி அடையலாம். அதற்குள்ளாகப் புதுப் பிரதமரின் பேர் அடிபடுகிறது. லண்டனில் பார்லிமெண்டு கூடுகிறது. தொழிற்கட்சி கட்டு மீறிக்கொண்டு வருகிறது. எங்கும் ஆத்திரம் பொங்குகிறது. ஆனால் பத்திரிகைகள் மாத்திரம், சாந்தமாக ராகமிழுத்துக் கொண்டிருக்கின்றன.

டெலிபோன்கள் சதா மணியடித்துக்கொண்டே யிருக்கின்றன. எந்த நேரமும் டெலிபோன் மணி, 'ஹல்லோ பிரேகு! ஹல்லோ பாரிஸ்! கடைசிச் செய்தி என்ன? சண்டையா? சமாதானமா?'

பிரேகிலிருந்து செய்தி. அரசாங்கம் தனக்கு லொக்கார்னோ உடன்படிக்கையின்படி தனக்கு நியாயம் கிடைக்க வேண்டுமென்று கூறியிருக்கிறது. ஜெர்மனி இதற்கு ஒப்புக்கொண்டு விட்டது. அதை ஹிட்லர் பின்னால் ஊர்ஜிதப் படுத்தி யிருக்கிறார்.

பலே! சரியான போடு! பினேஷ் முட்டாளில்லை. அவர் பிரிட்டிஷ், பிரெஞ்சு அரசாங்கங்களை மாட்டிவிட்டார். இப்பொழுது அவர்கள் என்ன சொல்லப்போகிறார்கள்? ஹிட்லர் என்ன சொல்லப்போகிறார்? லொக்கார்னோவில் நியமிக்கப்பட்ட தீர்ப்பாளிகளில் தானும் ஒருவரென்று ஒரு சுவீடிஷ் பிரதிநிதி சொல்லுகிறார்.

நாளைய மறுதினம் சேம்பர்லேன் ஹிட்லரிடம் போகலாம். ஆகாய மார்க்கமாகச் செய்திகள் கொண்டு போவதில் மனிதர் அதிகக் கெட்டிக்காரராகிக் கொண்டிருக்கிறார். பாவம்! அவருடைய தேநீர் விருந்து வந்து சேராது போலிருக்கிறதே.

ஹல்லோ பிராஹா! ஹல்லோ பாரிஸ்? ஹல்லோ லண்டன்? என்ன அது? சண்டையா, சமாதானமா? இப்படியே 1938 செப்டம்பர் 21ம் தேதி வரை, என்ன அது? சண்டையா? சமாதானமா?

இது பத்திரிகை பாஷையாக இருக்கலாம். ஆனால்

சரியான பத்திரிகை பாஷை. அதிலும் இதுவோ அற்புதமான கதைப்போக்கு. நிதானமாக எதையும் அலசி யாராய்ந்து பகுத்தறிவதே அவருடைய முறை. ஒரு மனிதரை அல்லது குணுதிசயங்களை அப்படியே அளந்து வைத்தாற்போல அவரால் கூறமுடியும். ஒரு காட்சியை அருமையாக வருணிப்பார். ஏராளமான செய்திகளைச் சுருக்கிக் கூறுவார். தொனியில் அமைதியும் சொல்லமைப்பில் அடக்கமும் காணப்படுவதால் தெளிவோ கவர்ச்சியோ குறைந்துவிடாது. அவர் சுய சரித்திர முழுவதிலும் அவருடைய தந்தை உயிரோடுலவும் அற்புதக் காட்சிகள் என் மனக் கண்முன் நிற்கின்றன. போலீஸ் தடியடி வாங்கிய தன் மகனைக் காண லட்சுமணபுரிக்கு அவர் இரவு முழுவதும் மோட்டாரில் பிரயாணம் செய்வதும், எரவாடா ஜெயில் சூப்ரின்டெண்டிடம் தனது 'சுருக்கமான' உணவு வகையைப் பூராச் சொல்லுவதும், மேஜையை ஓங்கி அறைந்து கொண்டு ' இனிமேல் என்னால் நோயாளியாக இருக்க முடியா'தென்று கூறுவதும் முடிவில் ஒத்துழையாமை இயக்கத்தைத் தணிப்பதற்கு மறுப்பதும், படுக்கையிலுட்கார்ந்து கொண்டு கடைசி மனிதன் தான் ஒருவராக மிஞ்சினபோதிலும் போராட்டத்தில் ராஜியோ, அல்லது அதைக் கைவிடுதலோ முடியாதென்று அறைவதும், கடைசியாகத் தனது பெருந்தோற்றத்துடன் பேச்சற்று, சரியானபடி காயங்களடைந்த கிழச்சிங்கம் போன்ற நிலைமையிலும் சிம்மத் தோற்றத்தோடும் ராஜகெம்பீரத்தோடும் சிறந்து விளங்கித் தனக்கு இறுதி விடையளிக்க வந்தவர்களை வரவேற்று உபசரிப்பதும் ஆகிய உயிர்க்காட்சிகள் நமது நினைவில் வட்டமிடுகின்றன. அவரைப் பற்றிய சொல்லோவியம் புத்தகத்தில் இல்லாமலில்லை. இருந்தாலும் அவருடைய வாழ்ந்த வாழ்க்கையைப் பளிச்சென்று காட்டும் இவ்வொளிக் காட்சிகள் நமது மனத்தில் தெளிவாகப் பதிகின்றன. அவருடைய சொல்லோவியங்கள் அரு

மையானவை அல்ல என்பது கருத்தல்ல. அவைகளும் அரு மையானவைகளே. மகாத்மா காந்தி, விபரீத மனப்போக் குள்ள ராஜா மஹேந்திர பிரதாப் இன்னும் மற்றையோ ரைக் குறிக்கும் ஓவியங்களும் பல வகையில் நன்ருக இருக் கின்றன. ஜவாஹர்லாலின் அமைதியான எழுத்து நடைக்கு அந்த ஓவியங்களிலிருந்து உதாரணம் எடுக்கவில்லை. லட்சு மணபுரி ஜில்லா ஜெயிலிலிருந்தபோது, அவர் மனத்தில், கார்கால ஆகாயத்தைக் கண்டெழுந்த சிந்தனைகளை எடுத் துக் கொள்கிறேன். இதில் அவருடைய நடை அடக்கத் திற்கும் கண்ணியத்திற்கும் புகழ் வாய்ந்ததாகிறது. அது மட்டுமல்ல, இயற்கையினிடம் அவருடைய பிரியம் எவ்வ ளவு மேன்மையானதென்பதையுங் காட்டுகிறது. ஆசிரிய னுடைய குணாதிசயங்களி லொன்றையும் நமக்கு வெளிப் படுத்துகிறது. இதை யறியாதவர்கள் அவரை 'வரட்டு அறி ஞன் வாஞ்சையற்றவர்' என்று இலேசாகச் சொல்லி விடு கிருர்கள்.

'அந்த வெளியில் படுத்துக்கொண்டு நான் ஆகாயத்தை யும் மேகங்களையும் கவனித்துக் கொண்டிருந்தேன், கணந் தோறும் மாறும் நிறங்கள் எவ்வளவு அற்புதமான அழ குள்ளவை யென்பதை முன் எப்போதையும் காட்டிலும் இப்போது நன்குணர்ந்தேன்.

'ஒருவகை நிலத்துக்குள் மற்ருெரு வகை நிலம்போல மாறிவரும் மேகங்களைக் கவனிப்பதும், படுத்துக் கொண் டிருப்பதும், ஆஹா! எவ்வளவு சொகுசாகக் காலம் செல் கிறது! அதை வாழ்த்துவோம். எங்களுக்குக் காலம் சொகு சாக இருக்கவில்லை. அனேகமாய்ச் சுமையாய்த்தானிருந் தது. ஆனால் திடீர் திடீரென்று மாறிக்கொண்டிருக்கும் மேகங்களைக் கவனித்துக்கொண்டிருந்த நேரம் முழுவதும் தொல்லையற்றதாய் மகிழ்ச்சி நிறைந்ததா யிருந்தது. எதையோ புதிதாகக் கண்டு பிடித்தது போன்ற ஆனந்த மும் சிறையிலிருந்து விடுதலை கிடைத்தது போன்ற உணர்ச

சியும் கிடைத்தன. அந்தக் கார்காலம் மாத்திரம் ஏன் அப்படி இருந்ததென்பது எனக்குத் தெரியவில்லை. அதற்கு முந்தியோ பிந்தியோ கார்கால ஆகாயம் என்னை அவ்வளவு கவரவில்லை. மலைகளின் மீதும் கடலிலும் எத்தனையோ தடவை சூரியோதயத்தையும் சூரியாஸ்தமனத்தையும் கண்டிருக்கிறேன். அவ் வழகில் குளித்திருக்கிறேன். அவ் வற்புதக் காட்சியினில் சிறிது பரவசமடைந்திருக்கிறேன். ஆகவே சூரியோதயத்தையோ, சூரியாஸ்தமனத்தையோ பார்த்துவிட்டு 'சரிதான் தெரிந்ததுதானே' என்று அடுத்த விஷயங்களைக் கவனிக்க ஆரம்பித்து விடுவேன். ஜெயிலிலோ சூரியோதய, அஸ்தமனங்களைப் பார்க்க முடியாது. அடிவானம் மறைந்திருக்கும். விடிந்து வெகு நேரத்துக்கப்பால், எங்களைப் பாதுகாக்கும் சுவர்களுக்கு மேலே வெய்யோன் கிளம்புவான். எங்காவது நிறங்கள் உண்டா? கிடையாது. திரும்பத் திரும்ப மண் நிறமான அந்த ஜெயில் கட்டடங்களைப் பார்த்துப்பார்த்து கண்கள் பூத்துவிட்டன. ஏதாவது ஒளியை, நிழலை, நிறத்தைக் காண்பதற்கு என் கண்கள் தாகமெடுத்திருக்க வேண்டும். அதிசயமான உருவங்களாக மாறிக்கொண்டு கார்கால மேகங்கள் மெதுவாக மிதந்து செல்லும்போது நிறங்களைக் கோலாகலமாக அள்ளித்தெளித்த அந்த அதிசய மகிழ்ச்சியில் என்னை மறந்து மயங்கி லயித்தேன். சில சமயங்களில் மேகங்களுக்கிடையில் வெளி காணப்படும். அவ்விடை வெளி வழியாக கார்காலத்தின் ஆழமான கருநீலம் அற்புதமாகத் தோன்றும். அது எல்லையற்ற பொருளின் ஒரு சிறு துண்டோ எனத் தோன்றும்'—சுய சரித்திரம்.

இப் பகுதியிலுள்ள தெளிவான அழகு ஒரு சிறந்த அம்சமாகும். இந்த அம்சத்தை ஜவாஹர்லால் நேருவின் வாசகங்களில் நிறையக் காணலாம். அவருடைய வருணனை உரைநடைச் செறிவுடன் கூடிய தெளிவான நடைக்கு எடுத்துக் காட்டாக இருக்கும். இதற்கு மிகவும் அருமை

யான உதாரணம் 'உலக சரித்திரத்'தில் சயன்ஸ் முன்னேறு கிறது' என்ற கடிதம் அல்லது அதிகாரத்தில் அடங்கியிருக் கிறது. அதைக் காட்டிலும் மேற்கோளாகக் காட்டிய உதாரணம் இதோ இருக்கிறது. இதில் சரளமான உருவக அணி முழுதும் பரவியிருப்பதைக் காணக்கூடும்.

அனேக தலை முறைகளாகப் பிரிட்டிஷார், பழைய ஆங்கிலேய முறைப்படி, இந்தியாவைத் தங்களுக்குச் சொந்தமான பெரிய கிராமத்து வீடு போலக் கருதி நடத்தி வந்தார்கள். ஆங்கிலேயர் அந்த வீட்டின் சொந்தக்காரர் கள். வீட்டின் நல்ல பகுதிகள் அவர்களுடைய பழக்கத் துக்கு, இந்தியர்களுக்கோ வேலைக்காரர்களுடைய ஹால், சாமான் போடும் அறை, சமையற்கட்டு ஆகியவைகளே.

ஒழுங்கான கிராம வீட்டில் உள்ளது போல கீழ்த்தர உலகமான வேலைக்காரர்களிடையேயும் கீழ்மேலாகப் பல படிகளுண்டு. பட்லர், கணக்கப்பிள்ளை, சமையற்காரன், கையாள், வீட்டு வேலைக்காரி, எடுபிடியாள் என்ற அவர் களுக்குள்ளும் தராதரமான மரியாதை ஒழுங்குகள் பிசகாத படி கையாளப்பட்டன.

ஆனால் அந்த வீட்டைச் சேர்ந்த கீழ்மேல் உலகங் களுக்கிடையிலும் சமூகத் துறையிலும் அரசியல் துறையி லும் கடக்க முடியாத தடைச்சுவர்கள் இருந்தன. இத் தகைய ஏற்பாட்டை பிரிட்டிஷார் எங்கள் மீது திணித்தார் கள் என்பது அதிசயிக்க வேண்டிய விஷயமல்ல. நாங்கள், அனைவரும் ஏற்கவில்லையென்றாலும் எங்களில் அனேகர் இந்த ஏற்பாட்டை இயற்கையானதும் தடுக்க முடியாதது மான வாழ்க்கையின் அமைப்பு முறையென்றோ அல்லது விதிவசமன்றோ ஏற்றுக் கொண்டதுதான் அதிசயமான விஷயம். கிராம வீட்டிலுள்ள நல்ல வேலைக்காரனுடைய மனப்பாங்கை நாங்கள் வளர்த்துக் கொண்டோம். எங்க ளுக்குச் சில சமயம் அரிய மரியாதை கிடைக்கும். அவர்க ளுடைய முற்றத்தில் வைத்து எங்களுக்கு ஒரு கிண்ணம்

டீ தருவார்கள். எங்களுடைய ஆசையின் சிகரம் என்ன தெரியுமோ. அவர்களால் மதிக்கப்பட்டு ஒவ்வொருவராக எங்களை மேலுலகத்துக்கு ஏற்ற வேண்டுமென்பதே! இந்தியர்களுடைய மனத்தில் அடிமைப் புத்தியை ஊன்றியிருக்கிறதே, அது பிரிட்டிஷாரின் ஆயுத வெற்றி, ராஜதந்திரி வெற்றிகளைக் காட்டிலும் மிகப் பெரியதே. ஆதிகாலத்து அறிஞர்கள் சொன்னபடி, அடிமை அடிமையாகவே சிந்திக்கலானான்."—சுய சரித்திரம்.

ஜவாஹர் தீட்டிய படத்தில் ஏளனத்தையும் காண்கிறோம். மனம் வைத்துவிட்டால் கிண்டலாகக் கேலி செய்யவும் அவரால் முடியும். அப்படியும் அனேக தடவை கேலி செய்திருக்கிறார். ருசிகரமற்ற ஒரு நிகழ்ச்சியை அல்லது விவகாரத்தை நையாண்டியாகத் திருப்பி விடுகிறார்; சுங்கிங் நகரத்தில் தனது முதல் ராத்திரியைப்பற்றி எழுதுகிறார். அன்றைக்கு ஜப்பானிய விமானத் தாக்குதல் முடிந்து சதாரண நிலைமை திரும்பியதாம். ஆனால் அங்கங்கே சிலர், 'தங்கள் வேலை முடிந்து உடல் கருகி இறந்து கிடந்தார்கள். இவ்வாறு கிடந்ததன் மூலம் நாகரிகத்தின் முன்னேற்றத்தையும் அதன் வருங்காலத்தைப் பற்றிய உண்மையையும் தெரிவித்தார்கள்' என்று கூறுகிறார். சிறிது அப்பால், எப்படி தன்னை அங்குள்ள மந்திரிகளும் சேனாதிபதிகளும் சந்தர்ப்பம் வந்தபோதெல்லாம் தங்களுடைய சுரங்கக் குழிகளை உபயோகித்துக்கொள்ள அழைத்தார்கள் என்பதைத் தெரிவிக்கும்போது அமைதியாகக் கூறுகிறார். 'விமானத் தாக்குதல் நடக்கும் இந்தக் காலத்திலே இதுதான் உயர்ந்த மரியாதைக்கும் நட்புக்கும் எடுத்துக்காட்டான காரியமென்று நினைக்கிறேன்' 'இந்தியாவில் பதினெட்டு மாதங்கள்' என்ற அவருடைய விவசாயத் தொகுதிகளிலுள்ள இந்த வாக்கியத்தைத்தான் கவனிப்போம். "பிரிட்டிஷ் சர்க்கார் வினயமாகத் தங்களுடைய எதிர்ப்பைத் தெரிவிக்கும் கடிதத்தை அனுப்பினார்கள். வெளிநாட்டு விவகாரத்

தில் இதுதான் இப்பொழுது முக்கியமான வேலை என்று கூறுகிருர்.

'சிறையில் ஒரு ஜன்னல்'-என்ற வியாசத்திலுள்ளது போல வேறெங்கும் அவருடைய நையாண்டியை அவ்வளவு தொடர்ச்சியாகச் சுவை நிறைந்துள்ளதாகப் பார்க்கமுடியாது. இந்தியாவிலுள்ள சமாதானத்தை வருணிக்கிற அந்த வியாச முழுதும் ஒரே நையாண்டி. சொற்பொழிவுகளை நடத்தும் கவர்னர்களைப் படம் பிடித்துக் காட்டுவதும் அவர்கள் முந்தி யிருந்ததைக் காட்டிலும் அதிக அதிகாரம் பெற்றிருந்தும் சும்மா இராமலிருப்பதைப் பற்றிக் கூறுவதும் கவர்னர்களுக்கெல்லாம் மேலான கவர்னராக இருந்துகொண்டு கவர்னர்களாகத் தேர்ந்தெடுக்கப் படுகிறவர்களைத் தயாரிக்கிற சர்மால்காம் ஹெய்லியை வருணிப்பதும், எல்லைப்புறத்தில் குண்டு போடுகிற கருணைப் பொழிவைப்பற்றிக் கூறுவதும், 'நாசகாரக் கலகக் காரர்களையா அங்கு அனுப்புவது? அவ்வளவு நல்ல இடமாயிற்றே வீட்டுக்கு வீடு! அழகுக்கழகு!' என்று அந்தமானுடைய கவர்ச்சிகளை வருணிப்பதைப்பற்றிக் கூறுவதும் அழகாயிருக்கும். ஜவாஹருடைய நையாண்டியை அனுபவிக்க வேண்டுமானல் அந்த வியாச முழுவதையும் அப்படியே படிக்கவேண்டும். காருண்ய சர்க்கார் கொடுக்கிற 'ஸ்டேட்ஸ்மன்' என்ற பத்திரிகையாகிய சிறு ஜன்னல் வழியாக ஒரு கைதிக்கு உலகம் எவ்வாறு தென்படுகிற தென்ற விவரத்தை மாத்திரம் இங்கு எடுத்துக் காட்டுகிறேன்.

'இந்தப் பல நிறச் சாளரத்தின் வழியாகச் சங்கடப் படுகிற உலகத்தைப் பார்த்தோம். மனத் தளர்ச்சி, சந்தேகம், உறுதியற்ற நிலைமை ஆகியவைகளின் இறுகலான பிடியில் மாட்டிக்கொண்டு உலகம் திண்டாடுவதைக் கண்டோம். இந்த துக்ககரமான உலகத்தில் ஒரே ஒரு இடம் தான் சங்கடமில்லாமல் செளக்கியமாக இருந்தது. அந்த

இடம் இந்தியாதான். பிரிட்டிஷ் அரசாங்கம் அதற்கு யாதொரு விதமான தீங்கும் வராமல் பாதுகாத்தது. புராணங்களில் சொல்லப்பட்ட எங்கும் புகழ் பரவிய இந்திரலோகம் இதுவாக இருந்தது. இங்கே காக்கையெல் லாம் மயிலாகவும் வாத்தெல்லாம் அன்னமாகவும் இருந் தன. இங்கே வலிமை தங்கிய அமைதியான பெரிய மனி தர்கள் சாவதானமாக, கம்பீரமாக மேலுலங்களில் ஏகாதி பத்தியக் கழுகுகளைப் போல மிதந்துகொண்டு நாட்டைக் காப்பாற்றினார்கள். ஏகதேசம் பூமியின்மீது திரியும் மனித எலிகளையும் இதரக் கெடுதலான பிராணிகளையும் தொலைப் பதற்கே இவர்கள் கீழே பாய்வார்கள், இங்கு அதிகாரத்தி லுள்ள ஒவ்வொரு மனிதனும் அரிச்சந்திரன். சர் பட்டம் பெற்ற ஒவ்வொரு முட்டாளும் ராஜதந்திரி; சில மோச மான, அறியாமையுள்ள நன்றிகெட்ட மனிதப் பிராணி களின் விபரீதச் செயல்கள் மாத்திரம் இல்லாவிட்டால் இருக்கிற அரசாங்கங்களுக்குள்ளே நல்ல அரசாங்கமான இந்த அரசாங்கத்தில் நடக்கிறதெல்லாம் நன்மைக்குத் தான் என்பதை எல்லோரும் உணர்ந்து விடலாம்.''

இத்தகைய நையாண்டிச் சிரிப்புக்கும் வெளிப்படை யான கோபத்துக்கும் வெகு தூரமில்லை. புகைச்சல் கன லாக எளிதில் மாறிவிடும். கோபத்தில் கவிகள் உதயமாகும் போது நல்ல உரை நடையும் உதயமாகலாம். இந்திய மித வாதிகளின்மீது கோபத்துடன் பாயும்போது அவர் கொண் டுள்ள அருவருப்பு, அருமையான உரைநடையாக மாறு கிறது.

'அவர்கள் படித்த பாழடைந்த புத்தகங்கள் அவர் களுடைய பார்வையில் இந்திய மகாஜனங்கள் புலப்படாத படி செய்துவிட்டது, நாங்கள் ஜெயிலுக்குச் சென்றோம். எங்களுடைய உடல்கள் சிறைக்கூடங்களி லடைக்கப் பட்டன. ஆனால் எங்களுடைய மனங்களோ சுதந்தர மாகத் திரிந்தன' எங்களுடைய உற்சாகம் குறையவில்லை.

ஆனால் அவர்கள் தங்களுடைய விருப்பப்படியே மனச் சிறைகள் கட்டிக் கொண்டார்கள். பாவம் அதற்குள்ளேயே சுற்றிச் சுற்றி வந்தார்கள். அதிலிருந்து வெளியேறத் தெரியாமல் திகைத்தார்கள். நடந்தது நாராயணன் செயல் என்று போற்றித் தொழுதார்கள். காரியங்கள் அப்படியே இருக்கின்றனவா மாறுதல் நிறைந்த இந்த உலகத்தில்? அதுதானே இல்லை. நிகழ்ச்சிகள் மாறும் பொழுது இவர்கள் சுக்கானும் துடுப்புமில்லாத படகு போல திசை தெரியாமல் உடல் நடுங்கி மனம் பதறி, லட்சியங்களில்லாமல், உயர்வான ஒழுக்க பலத்திலும் நம்பிக்கையில்லாமல் திகைத்தார்கள். நாமெல்லாம் ஒன்று முன்னேறவேண்டும், அல்லது முன்னாலே பிடித்துத் தள்ளப்படவேண்டும். வேகமாகச் சுழன்றுவரும் பிரபஞ்சத்திலே அப்படியே அசையாமல் இருந்தது இருந்தபடியே இருக்கமுடியாது. அவர்களுக்கோ மாறுவதற்கு மலைப்பு. அசைவதற்கு அச்சம். இப்படிப்பட்ட மிதவாதிகள் அவர்களைச் சூழ்ந்துள்ள பெரும் புயல்களைக் கண்டு பதறி விட்டார்கள். முன்னேறிச் செல்வதற்குக் காலில் வலுவில்லை. அலையில் துரும்பெனவே அங்குமிங்கும் இழுத்தடிக்கப் பட்டார்கள். கிடைத்த துரும்பை யெல்லாம் பற்றிப் பிடித்தார்கள். கரையேற முயன்றார்கள். இந்திய அரசியலரங்கத்தில் இவர்கள் தான்-அழுகணிகள். எந்த நேரமும் சந்தேகம். எந்த நேரமும் தயக்கம், எந்த நேரமும். நடுக்கம் இந்த மனப்பாங்கே அவர்களுடைய வியாதி.

> "காலம் கெட்டுப் போச்சு! ஐயோ, என் தீவினையே
> இதைச் சரிப்படுத்த நானு வந்து பிறக்க வேணும்"

ஜவாஹர்லாலின் நூல்களில் உள்ள இலக்கிய ரசனையை எடுத்துக்காட்ட விரும்பிய அளவுக்கு மேலாகவே எடுத்துக் காட்டியுள்ளேன். மேலே எடுத்துக்காட்டிய பகுதி மற்றவைகளைப் போலத் தகுதியானதே. இதன் ஆசிரியர்

திறமையாகப் பேனவை ஆளுபவர் மாத்திரமல்லர், மனித உரிமைகளுக்காக அஞ்சாமல் வலிமையோடு போராடுபவர். சில அரசியல் சிந்தனையாளர்கள் இருக்கிறார்கள். பிறரிடம் சொல்லுவதற்கும் அவர்களிடம் ஏதோ கொஞ்சம் விஷயம் இருக்கிறது. ஆனால் அதைப் பதியும்படி சொல்லத் தெரியாது. மற்றும் சிலர், இவர்கள் வார்த்தைகளை வைத்துக் கூத்தடித்துக் கொண்டிருப்பார்கள். இதில் கருத்தோ கற்பனையோ காண முடியாது. ஆனால் ஜவாஹர்லால் நேருவோ அரசியலில் தீவிரமாக ஈடுபடுகின்ற அரசியல் வாதி. தன் எழுத்துக்கு உலகமே செவிசாய்க்குமாறு செய்யக்கூடியவர். தன் கொள்கைகளால் சிந்தனையைத் தூண்டுபவர். இதயத்தின் அடிவானத்தை விரிவுபடுத்துபவர். தனது வாசகத்தின் கவர்ச்சியாலும் சக்தியாலும் மக்கள் மனத்தை மகிழ்வித்து லயிக்கச் செய்பவர்.

ஜவாஹர்லாலின் எழுத்து வெற்றியின் ரகசியமென்ன? அதற்குப் பதில் 'ஜவாஹர்லால்' தான். தற்காலத்தையொட்டியதும் அறிவாதாரத்தை நாடுகிற தன்மையும் கொண்டவர் மட்டுமல்லர். கவர்ச்சியான—யாவர் மனத்திலும் எளிதில் பதிகிற வலிமை மிகுந்த-குணப்பொலிவு உள்ளவர். ஒவ்வொரு வரியிலும் தனது தன்மையைப் பதித்துவிட்டுச் செல்லும் பேராண்மையுடையவர். அவர் மனத்தினுடைய விறுவிறுப்பு விசுவாசம் நேர்மை முதலியன அவருடைய வாசகத்தில் ஒளி வீசி அதற்கு அசாதாரணமான வலிவும் வனப்பும் அளிக்கின்றன. அவர் காலத்திய எழுத்தாளர்களுக்குள்ளே சிறந்த ஸ்தானத்தை அவர் அடைந்திருப்பதற்கு இதுவே காரணம், தனக்கே சொந்தமான புது நோக்கில் சிறந்தவரென்று அவரைக் கூறுவதற்கில்லை, சொந்தமான புது நோக்கைக் காண்பதற்குக் காந்தியினிடம் செல்லவேண்டும். தற்கால முன்னேற்றச் சக்திகளோடு ஜவாஹர்லால் சேர்ந்து நிற்கிறார். அச்சக்திகளில் சேர்த்துக் கொள்வதற்கு அவர் புதிதாகக்

கொண்டு வந்தது ஒன்றுமில்லை. சமூகத்தைப் பற்றிய உயர்ந்த கருத்துக்களை ஒழுங்குபடுத்தி அவைகளுக்கு வலிமை தந்திருக்கிறார். அவருடைய சமூக அரசியல் சித்தாந்தங்களின் முக்கிய அடிப்படைகளை ஏற்கெனவே கொடுத்திருக்கிறேன். அவைகளை நான் ஆராயவில்லை. ஆனால் அக் கோட்பாடுகள் அவருக்கே சொந்தமானவை என்பது வெளிப்படை. அவைகட்குப் பின், மார்க்ஸ், லெனின், காந்தி, வெல்ஸ் இவர்களுடைய போதனைகள் நிற்கக் காணலாம். இவைகளை அவர் தனதாக்கிக் கொள்ள வில்லை என்று சொல்ல வரவில்லை. சந்தேகமில்லாமல் தனதாக்கிக் கொண்டிருக்கிறார். அவைகளைத் தனது சட்டைபோல அணிந்துகொள்ளவில்லை. தனது அங்கமாகக் கொண்டிருக்கிறார். நான் சொல்ல வந்தது இதுதான். இவைகளைத் தனது மூச்சாக அவர் கொள்ளுமுன்பே அவைகள் காற்றில் மிதந்து நின்றன.

அவருடைய வார்த்தைகளின் பின் நிற்பது அவருடைய சொந்தமான புதுக் கருத்துக்களல்ல. பண்பும், குணமும், உயர்ந்த நோக்கமும் வாய்ந்த மனிதரின் குரலே அங்கு தொனித்துக் கொண்டிருக்கிறது, லட்சிய வேகமே அவர். லட்சிய வேகத்தை நீக்கிவிட்டால் அவரிடம் காண்பதற்கு வேறு என்ன இருக்கிறது? ஆகவே அவருடைய சொற்களுக்குப் பின் அவரே முழுதும் இருக்கிறார். ஒரு சமயம் சோகம் நிறைந்தும், ஒரு சமயம் குத்தலான நையாண்டியாகவும், ஒரு சமயம் கடுகடுப்போடு கண்டிப்புடனும், ஆனால் எப்பொழுதும் உயிர் ததும்பி, தெளிவு நிறைந்து, வேகம் பாய்ந்து விளங்குகின்றன. போர் வீரனான ஜவாஹர்லால், அழகுத் தேவதையிடம் தனது சொற்களைக் கொடுத்து மெருகிடுவதற்கு வாய்ப்புமில்லை, விருப்பமுமில்லை என்று ஏற்கெனவே கூறியிருக்கிறேன். ஆனால், பார்க்கும்போது, மெருகிட்டதுபோல் தோன்றுகிறதே என்றால், அஞ்சாத படைவீரன், உண்மையான வீரனிவனென்

பதை அறிந்து அழகுத் தேவதை தானே வந்தடைந்து அவரது ஈட்டி முனைக்கு மந்திர வலிமை ஈய்ந்துள்ளாள்.

ஆகவே பேனு இல்லாமல் எவ்வளவு சாதித்திருக்கிறரோ அவ்வளவு பேனுவைக் கொண்டும் ஜவாஹர்லால் சாதித்திருக்கிறர். ஒரு வகையில் பார்த்தால் பேனு இன்றி சாதித்ததைக் காட்டிலும் பேனுவைக் கொண்டு அவர் சாதித்ததுதான் அதிகமென்பது உண்மை. இந்த வகையிலும் இவர் மகாத்மா காந்தியைப் போலில்லாமல் இவருடைய அரசியல் காரியங்கள் எத்தனையோ வகைப்பட்டவையாய், புகழ் பெற்றவையா யிருந்தபோதிலும், இவர் தனது அரசியல் நடவடிக்கைகளால் அல்லாமல் தனது எழுத்துக்களால் உலக மனிதர் ஆகியிருக்கிறர். தென் ஆப்பிரிக்காவிலும், இந்தியாவிலும் தனது கொள்கைகளை நடைமுறையில் கடைப்பிடித்ததனுல், அஹிம்சையையும் சத்தியாக்கிரகத்தையும் போதித்த தலைவரை உலகம் பூராவும் நன்கு அறிந்திருக்கிறது. மரியாதை செய்கிறது. தனது கொள்கைகளை ஆதரித்து புத்தகங்களிலும் பத்திரிகைகளிலும் அவர் எழுதியதெல்லாம் ஒருகால் அவைகளைத் தெளிவாக்கி யிருக்கலாம். அல்லது அவைகளை மேலும் விளங்காதபடி செய்திருக்கலாம். அஹிம்சை, சத்தியாக்கிரகம், என்னும் ஆயுதங்களைத் தேச மக்களனைவரும் மேற்கொண்டு கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று நடத்திக் காட்டிய செய்கையே உலகத்தின் கவனத்தை அவர்பால் இழுத்தது. ஆனுல் ஜவாஹர்லால் தனது பேனுவினுல் தன்னை உலகம் அறிந்து கொள்ளும்படி செய்திருக்கிறரென்பது உண்மை. தனது பெரிய தேசிய வீரனுக அவரை இந்தியா கொண்டாடலாம். தேச சுதந்தரத்துக்காகப் போராடி, துயர்களை அனுபவித்து, தன் வாழ்நாளில் சிறந்த பகுதியைச் சிறையிருளில் கழித்தவரென்றும், அளவற்ற ஊக்கமும், குறைவற்ற தீரமும் உடையவரென்றும் போற்றலாமெனினும், வெளி உலகத்திற்கு அவர் தேசத் தியாகியென்பது மங்கலா

கத் தெரியும். ஏனெனில் கால் நூற்றுண்டாக இந்திய அர சியலுலகத்தில் மகாத்மா காந்தி வானளாவிய விஸ்வரூப ளுக இருந்திருக்கிறபடியால் ஜவாஹர்லால் போன்ற பேராற்றல் படைத்தவர்களும் அவர்களுடைய வானளா விய பெருமைக்கு முன் குள்ளமாகத் தோன்றுகிருர்கள். யூரேஸ், அமெரிக்க நாடுகளில் உள்ள அறிஞர்களுக்குத் தேச பக்தரான நேருவிடம் அவ்வளவு கவர்ச்சியில்லை. தன் னுடைய நம்பிக்கைகளே சரியென்று அவ்வளவு வன்மை யாகத் தனது சுயசரித்திரத்தில் நிரூபித்திருக்கிற எழுத்தா ளர் நேருவைப்போல, வெல்ஸ் என்ற பேராசிரியனைப் பின் பற்றி உலக சரித்திரங் கண்ட நேருவைப்போல முன் னேற்ற இயக்கங்களுக்கெல்லாம் தனது பரிவையும் ஆதர வையும் சந்தேகத்திற்கிடமில்லாமல் தெரியப்படுத்திய நேருவைப்போல, எந்த உருவத்தில் எந்த அமைப்பில் தோன்றினும் தனது அருவருப்பைத் தெளிவாகக் கூறிய நேருவைப்போல—தான் எழுதிய புத்தகம், கட்டுரை வியா சம் ஒவ்வொன்றிலும் விடாது சர்வ தேசியக் கண்ணேட் டத்தை மேற்கொண்டு, நிலை நிறுத்தி, தான் ஒரு இந்திய னல்லன், ஆசியனுமல்லன், ஆனல் தான் ஒரு உலகினன் என்று பலகாலும் அறைந்த நேருவைப்போல—அவர்களுக் குகந்தவர் தேசபக்த நேருவல்லர்.

# ஒரு தற்காலத் தலைவர்

அமியச் சக்கரவர்த்தி

ஜவாஹர்லாலுடன் இருக்கும் நேரம் அவருடைய பேச்சு, அவருடைய தோற்றம் யாவும் உயரமான மலைமீதுலவும் காற்றின் தன்மையைப் பெற்றிருக்கின்றன. அவரிடம் துறவிக்குரிய வைராக்கியவேகம், புதிய அடிவானங்களின் பொன்னொளி உதயம், மேன்மையான தூயநாட்டின் வலிமை ஆகியவை அமைந்திருக்கின்றன. இளமையின் கம்பீரமான அறைகூவலை முழக்குகிற இக்காலத்து வீரன். போரில் நம்மை ஈடுபடுத்தி, நாம் உண்மையாக எந்த உயர்வுகளடையவேண்டுமோ அங்கு நாம் செல்லுமாறு செய்யும் தலைவன். வருங்காலத் தோற்றத்தைத் தெளிவான வார்த்தைகளில் எடுத்துக் கூறி என்ன செய்வதென்று ஏவவும் வல்லவன். அவருடைய சொல்லை, அதிலும் எழுதப்பட்ட சொல்லை, எதிர்க்க இயலாது. அதன் காரணம்? இன்றைய எழுத்தாளர்களில் முதன்மையான அவர், அறிவாதாரத்தை நாடுபவர், மன எழுச்சி உடையவர் என்ற இரு பாலாரோடும் இணங்குகிறார். பிரசினைகள் சிக்கலாக இருக்கும் பொழுது குருடனுக்கு ஒரேமதி என்ற மாதிரி நுட்பமற்ற ஒரே வழியை நம்பிக் கொண்டிருக்கமாட்டார். அவர் தன்னுடைய தயக்கத்தை வெளிப்படுத்தும்போதே நமக்கு அவரிடம் நம்பிக்கை பிறக்கும்படி செய்துவிடுகிறார். உண்மை நிலையை உணரும் நுண்ணுணர்வுச் சக்தி பெற்றி

ருப்பதால் அவருடைய சொற்கள் கேட்பவர் மனத்தை மாற்றும் வலிமை பெற்றிருக்கின்றன. அவருடைய எண்ணங்கள், தெளிவான அனுபவங்களிலிருந்தும் அனுபவ மாறுதல்களிலிருந்தும் பிறந்தவை. அவருடைய பேச்சுக்களும் அனுபவ மாறுதல்களையே பிரதி பலிக்கின்றன. அவருடைய உற்சாகமான சிரிப்பைப்போல, இனிமை தோய்ந்த பார்வையைப்போல அவருடைய பேச்சுக்களும் ஜீவன் நிறைந்து நம்மைத் தாக்குகின்றன என்பதை உணர்கிறோம்.

ஜவாஹர்லாலின் முன்னோர் பூர்விகத்தில் குடியிருந்தது பனிக்கோட்டையும் பசுந்தளிரும் நிறைந்த காஷ்மீரில். அதுவே அழகின் உறைவிடம், உயரமான மலைகளில் ஏறுவது அவருக்கு மிகப் பிரியமான காரியம். ஒரு மனிதன் மலைகளிலே வசிக்கலாம். ஆயினும், தினசரி சாதாரண காரியங்களை நிறைவேற்றுகையில், மனித உலகத்தின் சுமையில் தன் பங்கைச் சுமக்கையில், மலையின் புனிதத் தொடர்பு மனத்தைவிட்டகன்றுவிடக் கூடும். ஏராளமான மனிதர்களுக்கும் சம்பவங்களுக்கும் மத்தியில் மிகமிகத் தூய்மையான லட்சியத்துடன் ஜவாஹர்லால் பணியாற்றுகிறார். அவ்வப்பொழுது எதிர்ப்படும் சிறு குழப்பங்களை அவர் சமாளிக்கும்போது, உயர்ந்த லட்சியத்தைக் கைவிடாது பற்றற்றிருப்பார். படைக்கும் திறனுடைய அவரது கைகளால் இந்தியாவின் புதுவாழ்வு பெரிதும் உருவாக்கப்படுகிறது. சரித்திர நிகழ்ச்சிகளின் பல நிலைகளிலிருந்தும் அவரால் உண்மையைக் காணமுடிவதே அதன் காரணம். அவருடைய தேசியம், சர்வதேசியத்தினின்று பிரிக்க முடியாத அம்சமாக இருக்கிறது. மனிதவர்க்க முழுமையையும்பற்றிய மனித உண்மையிது. நம்முடைய மண்ணுலக வாழ்வைப் பற்றிய இறுதியான உண்மையை அவர் ஒருபோதும் மறந்ததில்லை. ஆகையால் அரசியல் அல்லது சமூகத் துறையில் ஏற்படும் கஷ்டங்களை அவரால் சமாளிக்க முடியும். குறு

கிய இனவேறுபாடுகள், தேசவித்தியாசங்கள் ஆகியவை தலை காட்டும்போது தனது தெளிவான அறிவினால் அவை களை நீக்குவதும், எல்லோரும் ஓர் குலம் என்ற அடிப்படை மனிதத் தத்துவத்தை வலியுறுத்திக் கொடுமையையும் சச் சரவுகளையும் நீக்குவதும் அவருடைய தலைமைப் பதவியின் வேலைகளாக இருந்திருக்கின்றன. அறவழி அல்லது பொருள்வழி சம்பந்தமான காரியங்களுக்கான போராட் டமா! உடனே குதித்துவிடுவார். உணராதவர்களுடைய உறக்கத்தைத் தொலைப்பதா? உடனே காரியத்தில் இறங்கி விடுவார். இடைவிடாத எடுத்துக்காட்டாக இருந்து நமக் கும் அந்தத் தன்மையை ஊட்டியிருக்கிறார். வறுமை, ஆளு வோர் ஆளப்படுவோரெனப்படும் இரண்டு பக்கத்திலும் ஆண்மையற்ற தன்மையை உண்டாக்கும், கீழ்த்தரமான அன்னிய ஆட்சி, பிறதேசங்களோடு சேராமல் தனித் திருக்கவேண்டுமென்ற பைத்தியக்காரத்தனம் ஆகியவை களை நீக்கும் பொருட்டு நம்மைத் தட்டி எழுப்புகிறார். அவைகளுக்கெதிராக நம் இதயத்தைத் திருத்திவிடுகிறார். அப்பொழுது நாம் யாவரும் நல்ல நடத்தையும் நல்ல எண்ண மும் உடையவர்களாகிறோம். அடிப்படையான பொறுப்பை ஏற்பதைப் பொறுத்துத்தான் இயந்திரங்களை யும் சாதனங்களையும் உபயோகித்தல், பொருளுற்பத்தி யிடங்களைப் பயன்படுத்தல், போன்ற காரியங்கள் நடை பெறும். சமயத்துக்கேற்ற உபாயங்களை மேற்கொள்ளு வதில் அவருக்கு நம்பிக்கை கிடையாது. நன்றாக வெறுக்கிற வர். சமய சந்தர்ப்பம் தெரியாமல் ஒரே கொள்கையில் பிடிவாதம் உள்ளவர்களை அவர் வெறுக்கிறார். குறுகிய பார்வையுள்ள நிபுணர்களால் தவறுகள் ஒழிக்கப்பட வில்லை. தாராள மனப்பான்மையை ஒன்று திரட்டுவதால் தவறுகள் திருத்தப்பட்டிருக்கின்றன என்பதை அவர் நமக்குக் காட்டியிருக்கிறார். ஜவாஹர் நமக்குச் சரியான பார்வையை அளித்திருக்கிறார். ஆக்கங்கருதி உழைக்கும்

இந்தியாவுக்கு இது அவர் அளித்த வெகுமதி. நமது உள் வலிமையைப் பெருக்கி நமது சக்தியை நாம் உணருமாறு செய்திருக்கிறார். அவரால் நமது கஷ்டங்கள் நீங்கிவிட வில்லை. புத்துயிர் பெற்றிருக்கிறோம்; ஆகவே நமது சந்தேகங்கள் குறைந்ததைப்போல உணருகிறோம். நெருக்கடியான சந்தர்ப்பத்தில் ஜவாஹர் வந்துவிட்டால், நமக்கு எவ்வளவு பலம் உண்டாகிறதென்பது ஆச்சரியமாகவே யிருக்கிறது. அவருடைய காரியம் நமக்கு அவ்வளவாக உதவுகிறதென்பதில்லை-காரியத்திலேயே முனையும் பெரியவர் யார்?— நம்மிடம் சரியான மனப்போக்கை அமைத்துக்கொடுக்கிற வகையில் பெரிதும் உதவுகிறார். எழுச்சிஎனும் மது அம்மனப் போக்கில் இருக்கிறது. அவரே அதிக மன எழுச்சி உள்ளவர். ஆனால் அவர் ஏற்படுத்தும் பரபரப்பு அறிவாதாரமானது.

எங்கேயோ எட்டாக்கையிலிருப்பதென்பதும், காரியங்களுக்குள் அகப்பட்டிருப்பதென்பதும் இல்லாமல், இரண்டுக்கு மிடைப்பட்ட சமநிலையை எய்தியதால் ஜவாஹர்லால் சரியான இந்தியர். பொதுவாக எல்லோரும் கருதுவதற்கு மாறாக, ஐரோப்பியர் கருத்துக்குமாறாக, இந்தியா போற்றி வந்த லட்சியம் அது. புத்தர், சைதன்யர், இராமகிருஷ்ணர், இரவீந்திரர் இவர்களிடம் இந்த லட்சியத்தையே இந்தியா கண்டது. நமது காலத்தில் காந்திஜி இதற்கு ஒரு சிறந்த உயிருள்ள எடுத்துக்காட்டாக இருக்கிறார். பொறுக்கித் தின்னும் பக்த கோடிகள் சூழ ஒளிந்துவாழும் ஆன்ம ஞானிகள் எங்கும் போல இங்கும் இருக்கிறார்கள். துறவை மேற்கொண்டு ஒதுங்கி வாழ்ந்து பணம் சேர்ப்பவர்களால் எவ்வாறு இந்தியாவின் போக்கைப் பொய்ப்படுத்த முடியாதோ அதுபோல முன் கூறப்பட்டவர்களாலும் முடியாது. இந்தியாவிலும் சரி, வெளி நாடுகளிலும் சரி, குகைகளில் வாழும் சாதுக்கள் இருந்திருக்கிறார்கள். இவர்கள் உலகக் காரியங்களில் ஈடுபடாமல் ஆன்மசிந்தனை அடிப்படையிலே உழைத்து வந்திருக்கிறார்கள். வாழ்வின் இதரத்

துறைகளில் தலையிடவுமில்லை; குழப்பவுமில்லை; போரிட்டுக் கொண்டிருக்கிற ஏகாதிபத்தியத்துக்கு உதவி செய்யவில்லை. ராஜ தந்திரிகளுக்கு ஆன்மார்த்த வெற்றி வாகைகளைச் சூட்டவில்லை. நம்முடைய உண்மையான சாதுக்களை நாம் பெருமைப்படுத்தி யிருக்கிறோம். தவிர உலகில் இன்னொரு சாரார் இருக்கிறார்கள். இவர்கள் உலோகாயதம் என்ற ஒரு வழியையே பற்றிக்கொண்டு திரிவார்கள். சரித்திரப் பொருத்தமற்ற திட்டங்களை வைத்துக்கொண்டு 'இதுவே கதி' என்று அலறிக் கொண்டிருப்பார்கள். அத்தகையவர்களை நம் தேசத்திலும் பெற்றிருக்கிறோம். ஆனால் தற்கால உலகம்—(நாம் அதில் ஒரு பாகம் தானே)—'கண்டிப்பாய்க் கைமேல் பலன் தரும்' திட்டங்களை அச்சடித்து விற்பவர்களைக் கண்டு பிரமிப்படைவதில்லை. நிகழ் காலக் காரியங்களின் மதிப்பை உணர்ந்து, அவைகளால் உண்மையைக் கண்டு பிடிக்கிறவனையே நாம் நம்புகிறோம்.

வளர்ச்சிக்கோ மாறுதலுக்கோ இடமில்லாது வரையறுக்கப்பட்ட மத அமைப்பு அல்லது அரசியலமைப்பு —(இந்தக் கட்டுக் கோப்புகளிலே வார்க்கப்பட்ட மனம் அவைகளில் ஒன்றையோ அல்லது இரண்டையுமோ விரும்பும்)—இப்போது பழமையாகி விட்டது. இந்தியாவிலுள்ள நமக்குக் கோட்பாடுகளில் மூளையைக் குழப்புவதில் நம்பிக்கை இல்லை. திறந்த மனத்துடன், யாருடனும் நன்கு பழகுகிறவராக இருப்பதால், ஜவாஹர்லால் புதுத் தலைமுறையைத் தன்னோடு அழைத்துச் செல்கிறார். நாமும் அவரோடு சேர்ந்து பிரயாணம் செய்வதுபோன்ற உணர்ச்சி ஏற்படுகிறது. வருங்கால இந்தியாவை ஒருங்கே கண்டு பிடித்து நிலை நிறுத்துகிறோம். நமது விருப்பத்தின் மூலமாகவும் அவருடைய சுயநலமற்ற சேவையைக் கண்டு நாம் கொள்ளும் ஆர்வத்தின் மூலமாகவும் அவர் நமக்கு வழி காட்டுகிறார். ஜனத்திரளின்மீது அபார மோகமோ அல்லது கூட்டத்தின் தடுமாற்றமோ ஏற்பட்டு அதனால் அவ

ருடைய சமூக அரசியல் காரியங்கள் குந்தகமடையவில்லை. அவர் தம்மையும் உயர்த்தி நம்மையும் உயர்நிலைக்கு ஏற்று கிறார். அவருடைய முறையைப் பின்பற்றி மனிதர்கள் அனைவரும் கூடி முயற்சி செய்வதால் தனி மனிதன் பலஹீனப்படுவதில்லை. அவன் அதிக பலமுள்ளவன் ஆகி றான். நன்மையை அடையும் வழியும் நல்லதாக இருக்க வேண்டு மென்பது அவருடைய முறை.

புது இந்தியாவையும் பழைய இந்தியாவையும் ஒன்று படுத்தும் பாலமாக ஜவாஹர்லால் அமைந்திருக்கிறார். ஒன்று பிணைப்பது இந்தியாவின் சக்தி என்பதை மீண்டும் உறுதிப்படுத்துகிறார். அவருடைய பாஷை தற்காலத்தைச் சேர்ந்தது. அவருடைய ஜீவன், நிரந்தரமான மனிதவர்க்கத் தைச் சேர்ந்தது. ஜனங்களுடைய லட்சியங்களின் தலை மையை மேற் கொண்டிருப்பதால் இவரே உண்மையான தலைவர். உலகப் போராட்டத்தில் நெருக்கடியான சமயத் தில் மனித நித்தியத்துவத்தை அறிவிக்க வந்த மகாத்மா காந்தியின் சேவையில் இவர் தம்முடைய அதி தீரமான வாழ்வையும் ஆக்கங்கருதி உழைக்கும் தமது மேதையையும் அதன் செல்வத்தையும் அர்ப்பணம் செய்தது அருங்காரியம். ஆசியாவின் புதுவாழ்வு ஜவாஹரை நம்பியிருக்கிறது. மேற்கு, கிழக்கு நாடுகளின் ஒற்றுமையில் ஆர்வமுடைய தங்களுடைய நண்பன் என்பதை மேற்குலகும் நன்கு அறிந் திருக்கிறது. இந்த ஒற்றுமை எப்பொழுது ஏற்படும்? ஏற்றத் தாழ்வையும் சுரண்டலையும் ஒழிப்பதற்கு நாம் தயாரான போதும், மனித சமுதாயத்தின் பொது லட்சியம் பிரஜா உரிமைச் சுதந்திரம் ஆகியவை நமது நாகரிகத் தின் உயிர்க்கொள்கைகளாக ஆகும் போதும் ஏற்படும். இக்காரியத்தை நாம் மேற்கொள்ளுவதற்குமுன் அடுத்த யுத்தம் மூண்டு விடலாம். சர்வாதிகாரிகள்பால் உள்ள மிருகக் கவர்ச்சியும், மோசடிக்காளாகிக் கைவிடப்பட்ட மக்களிடையே காணும் மந்தை யுணர்ச்சியும் சேர்ந்து

உலகைக் காட்டுமிராண்டித்தனத்தில் அமிழ்த்திவிடலாம். ஜவாஹரைப் போன்ற தலைவர் நம்மைக் காப்பார். அவரிடம் காணப்படும் அடக்கம், தான் மனித வர்க்கத்தைச் சேர்ந்தவன் என்பதில் பெருமை கொள்ளச் செய்கிறது. அதிகாரத்துக்குத் தலைவணங்கவோ, அதனிடம் தோல்வியுறவோ மாட்டார். சேவை செய்வதற்குரிய தீரம், நன்மைக்குப் பணிவது ஆகியவைகளை மட்டுமே அவர் வணங்குவார்.

ஜவாஹர்லால் நம்முடன் இருக்கிறார். இந்தியாவுக்கும் மனித வர்க்கத்துக்கும் அவர் செய்ய விரும்பும் சேவையின் மகத்தான காலம் இதோ அமைக்கப்படுகிறது.

# கலைஞன் நேரு

**ஹுமாயூன் கபீர்**

அழகுணர்ச்சி ஜவாஹரின் சிறப்பியல்பு. அவருடைய இக்குணம் நம்மை உடனே கவர்ந்து விடுகின்றது. அவருடைய அரசியல் பேச்சுகளிலும் இவ்வழகுணர்ச்சியை நன்கு காணலாம். மிகப் பெரிய கவிஞனும் கலைஞனுமாக இருக்கிற ஜவாஹரைத் தியாகம் செய்து பெரிய அரசியல் தலைவனான ஜவாஹரை இந்தியா பெற்றிருக்கிறதென்று 1933-34-ல் சில நண்பர்களிடம் நான் சொன்னதாக நினைவு வருகிறது. அவ் வப்பொழுது அவர் வெளியிடும் அறிக்கைகளும் கூட அவரது கலைக் காதலையும் சந்த உணர்ச்சியையும் காட்டுகின்றன. 1935-ல் சுய சரித்திரம் பதிப்பாகி வெளிவந்த போது அவர் கலைஞன் என்ற உண்மை உறுதியாயிற்று.

இன்றும் கலைஞனாகிய நேருவே நமது கவனத்தைக் கவருகிறார். கலைஞர்கள் வெட்கமுள்ளவர்கள். தம்மைப் பற்றியே சதா சிந்தித்துக் கொண்டிருப்பார்கள். ஏதோ ஒரு அதிசய மனத்தத்துவ விதிக்குட்பட்டு இக் குறைபாட்டுக்கு ஈடுசெய்வது போல வேறொரு தன்மையும் இவர்களிடம் காணப்படுகின்றது. இவர்கள் தங்களது எண்ணங்களையும் மன எழுச்சிகளையும் உலக முன்னிலையில் எடுத்து விவரிப்பதில் ஆசை கொள்கிறார்கள். நேருவின் சில வார்த்தைகளையும் செயல்களையும் பார்த்தால் அவை

கலைஞனின் இந்தத் தனிக் குணத்தால் பிறந்தவை என்று சொல்லலாம் அல்லவா ?

சினத்தால் அல்லது பரிவினால் கலைஞர்கள் அரசியலுக்கு இழுக்கப்பட்டு விடுகிறார்கள். உலகத்தில் காணப்படுகின்ற அக்கிரமங்களைக் கண்டு சாதாரண மனிதனும் கலைஞனும் கொதிப்படைகிறார்கள். நாள் செல்லச் செல்லச் சாதாரண மனிதனின் கொதிப்புத் தணிந்து விடுகிறது. கலைஞனிடம் இம் மனக்கொதிப்பு முற்றி அவனைக் கற்பனை உலகிலேயே தங்கியிருக்க விடுவதில்லை. துன்பப் படுகிறவர்கள் மீது கொள்ளும் பரிவும் அவனை அவ்வாறு துடிக்கச் செய்கிறது. தனது தனிப் பாங்கு என்ற கூட்டை விட்டு வெளியேறி விடுகின்றான். இதனால் மனத்திற்கு அதிகமான சிரமம் ஏற்படுகின்றது. இன்னலையும் ஏற்றத் தாழ்வையும் எதிர்த்துப் போராடுகின்ற போர்முனைக்குச் சென்று விடுகின்றான். முனை முகத்திலும் அவனுடைய போராட்டங்கள் கற்பனைக் கலப்பு வாய்ந்திருக்கின்றன. சாதாரணமாகக் காரியங்களை முடிக்கின்ற மனிதனுக்கும் கலைஞனுக்குமுள்ள நுட்பமான வேறுபாடு இதுவே.

மனிதர்கள் படும் நோயும் வேதனையும் கலைஞனது உணர்ச்சியைக் கொழுந்து விடச் செய்கின்றன. அத்தகைய கலைஉணர்ச்சி கொண்ட நேருவின் உள்ளம் கனல் விடுகிறது. அவருடைய வருத்தத்தின் ஆழம் சாதாரண மனிதனுக்கு விளங்காது. உலக முழுவதும், சிறப்பாக இந்தியாவிலும் சராசரி மனிதன் தன்னுடைய கவலைகளையும் கஷ்டங்களையும் தாங்க முடியாமல் சுமக்கிறான். தன்னுடைய வாழ்க்கைத் தேவைகளைப் பெற்ற பின்பு பிறருடைய இன்ப துன்பங்களைப் பற்றிச் சிந்திப்பதற்கு அவனிடம் சிறிதும் சக்தி இல்லை. தன்னுடைய கண்ணுக் கெட்டாத ஆடவர் பெண்டிர் படும் துன்பத்தைக் கேள்விப்பட்டுக் கண நேரம் பரிவு கொள்ளத்தான் அவனால் முடியும். கலைஞன் இதற்கு மாறுபட்டவன். துன்பங்களை

அவன் கற்பனை செய்து பார்க்கும் நேரத்திலேயே அத் துன்பங்களைத் தன் உடலிலும் அனுபவித்து விடுகிறான். ஜப்பானியர் கைப்பற்றிய பிரதேசத்திலோ, பாஸிஸ்ட் ஸ்பெயினிலோ ஆடவர் பெண்டிர் படும் சித்திரவதையைப் பற்றி ஜவாஹர்படும்வேதனை, அவருடைய கலைஉள்ளத்தை அறியாத பேதையர்க்கு அதிசயத்தைக் கொடுக்கும். தன் நோய்போல் பிறர் நோய் கண்டு உள்ளம் உருகும் கலைஞ னின் மென்மையான உணர்ச்சியோடு பிறர் துயர் துடைக்க வாளெடுக்கும் வீரனின் சினமும் கலந்தவராக நேரு இருக் கிறார். இங்கும் அவருடைய உணர்ச்சி அழகின் அடிப்படை யில் ஏற்பட்டதே தவிர, நடை முறை நோக்கம் கொண்ட தல்ல. கனல் பறக்கும் அவருடைய சொற்கள் ஒடிந்த மனங்களுக்கு உற்சாக மூட்டுகின்றன. அவருடைய சொற் கள் இருளை ஊடுருவிக் கணீரென்று ஒலிக்கின்றன. ஏங்கிக் கிடப்பவர்களுக்கு நம்பிக்கை ஒலி பாய்ச்சுகின்றன. கொடு மைக்கு ஆளானவர்களின் கவிஞனாகவே நேரு உலகெங் கும் கொண்டாடப்படுகிறார்.

வெட்டொன்று துண்டிரண்டாகப் பிறக்கும் அவரு டைய சொற்களும் செயல்களும் எங்கும், எல்லோருடைய கவனத்தையும் இழுத்திருக்கின்றன. அவை சில சமயங் களில் பிறர் பாதகமாக வியாக்கியானம் செய்யவும் இடமளித்திருக்கின்றன. சிலர் அவரை முன்கோபி என் கிறார்கள்; இன்னும் சிலர் அதிகாரவெறியர் என்கிறார் கள். இது முன்கோபமும் அல்ல, அதிகாரவெறியும் அல்ல. இது கலைஞனின் இயல்பு. இதை அவர்கள் அறியத் தவறி விடுகிறார்கள். கலைஞன் உணர்கிறான்; உணர்ந்த பொழுதே வெளியிடுகிறான். மனத்தில் நினைத்துவிட்டான் என்றால் நினைத்த நொடியிலேயே அதற்கு உருவமும் சமைத்து விடுகிறான் என்பதே உண்மை. அவர் உணருகின்ற வேகம் மந்தமனங்களைத் திகைப்பில் சுழலவைத்து விடு கிறது; சில சமயங்களில் தொந்தரவுப்படுத்துகிறது. கலை

ஞனின் வாழ்வு எப்பொழுதும் அலைந்து திரியும் தன்மை யது. ஒவ்வொரு நாளும் ஏதாவது தீமையோ நன்மையோ கிடைத்தால் போதும், அந்தந்தக் கணத்தில் கிடைக்கும் அற்புத அனுபவத்தோடு சரி, அந்த நாள் முழுவதையும் பற்றிக் கவலைப்படுவது கூட இல்லை.

இயற்கையிலும் மனிதனிலும் காணப்படும் எழிலின் மீது நேரு எவ்வளவு மோகம் கொள்ளுகிறார் என்பதைப் பற்றிக் குறிப்பிடுவது தேவை இல்லை. மலைகள் அவரைக் கவர்கின்றன. சூரியாஸ்தமனங்கள் அவர் இதயத்தில் வட்டமிடுகின்றன. அழகிய சொற்களும் செயல்களும் அவரது வாழ்வைச் செழிக்கச் செய்கின்றன. இத்தகைய அழகனுபவங்களுக் கிடையே உலகத்தின் நோயும் துன்ப மும் அநீதியும் அவருக்குத் தென்படுகின்றன. உல கிலிருந்து இந்த அவலட்சணங்களைத் துடைப்பதற்கே அவர் போர்க்கோலம் கொள்ளுகிறார். சென்ற இருபது வருஷ காலமாகத் தொடர்ச்சியாக அரசியலில் ஈடுபட்டும் அவருடைய மென்மையான உணர்ச்சிகள் மழுங்கி விட வில்லை. அவரிடம் உள்ள கலையியல்பு வலிமையான தென்பதற்கு இதுவே தக்க சான்று. அரசியல்வாதிகள் உணர்ச்சி யற்றவர்கள் என்பது பிரசித்தமான விஷயம். எல்லோருடைய குற்றச் சாட்டுகளையும் வாங்கிக் கொள்ள வேண்டியவர்களாக இருக்கின்றார்கள்; திருப்பித் தருவ தற்கும் அடிக்கடி சுதந்திரம் இருப்பதில்லை. நேரு அப்ப டிப்பட்டவர் அல்லர். அவரிடமுள்ள அரசியல்-இயல்பைக் கலை-இயல்பு வென்று விடுகின்றது. அதுவே அவருடைய பெருமையின் ரகசியம். இதர எல்லா அரசியல்வாதி களைக் காட்டிலும் அவர் மீதே மக்கள் பேரன்பு பூணு வதற்கும் அதுவே ஒருகால் காரணமாக இருக்கும்.

# ஒரு அரசியல் முரண்பாடு

**கே. ஆர். கிருபளானி**

ஜவாஹர்லால் ஒரு தன்னந் தனிமையான தலைவர். ஒரு கால் எல்லாப் பெரிய தலைவர்களும் முக்கியமாகத் தனித்து விளங்குவோர்கள் போலும். கோடிக்கணக்கான மக்களால் மதித்து வணங்கப்பட்டாலும் மகாத்மா காந்தியும் ஒன்றியாக இருக்கிறார். அவரைப் பின்பற்றுவதற்கு ஆயிரக்கணக்கானவர்கள் தயாராக இருக்கிறார்களென்றாலும்அவருடைய உள் இதயத்தில் அவரைச் சந்தித்துத் தொடக் கூடியவர் ஒருவரும் இல்லை. அவருடைய காரியங்கள் சரியென்று உணர்கிறோம்; ஆனால் அவருடைய எண்ணங்களின் காரண காரியங்கள் நமக்குப் புலப்படுவதில்லை.

குருட்டுத்தனமாக யாரையும் தொழும் வழக்கத்தைத் தகர்த்தெறியக் கூடியவராக இருந்தாலும் அவர் ஒரு விக்கிரகமாகி விட்டார். ஆனால் ஜவாஹர்லால் வேறொரு வகையில் தனிமையாக இருக்கிறார். அவர் சொல்லுவதை விளங்கிக் கொள்கிறார்கள்; ஆனால் அவரைப் பின்பற்றுகிறவர்கள் அரிது. கட்சியில்லாத தலைவர் அவர். அவருடைய் கருத்துக்களை ஒப்புக் கொள்கிறவர்கள் காந்தியைப் பின்பற்றுகிறவர்களா யிருப்பார்கள், அல்லது அவரைக் காந்திக்கு எதிராகப் பயன்படுத்தலாமென்று நினைக்கிறவர்களா யிருப்பார்கள். அவர் சொல்லுவதைப் புரிந்து கொள்

கிறவர்கள் பிற தலைவர்களைப் பின்பற்றுகிறார்கள் அல்லது அவரைப் போலத் தாங்களும் தனிமையாக இருக்கிறார்கள். அவருடைய அரசியல் செல்வாக்கு, காந்தியின் செல்வாக்குக்கு அடுத்தபடியானதென்றாலும் அது ஒரு முரண்பாட்டின் மேல் அமைந்த ஒன்றாக இருக்கிறது. அவர் பிறரைப் பின்பற்றத் தயங்காத தலைவர். சர்வதேசியத்தில் மனம் ஊன்றிய தேசியவாதி. பொது மக்களை விரும்பும் பிரபு. சோஷலிஸ வீரனாகத் திரும்பிய தனிநபர் வாதி, உணர்ச்சி வேகத்தில் சிக்கிய அறிஞன்.

காந்தியைத் தவிர வேறு யாரும் இவரைப்போல ஜனங்களின் அன்பையும் நம்பிக்கையையும் பெற்றவர் இல்லையென்பது எல்லோரும் ஒப்புக்கொள்ளும் விஷயம். இந்தியாவுக்கு வெளியில் இவருக்கு இருக்கும் செல்வாக்கு காந்தியின் செல்வாக்குக்குச் சமமாக இருக்கும். ஒரு வகையில் பார்த்தால் மிஞ்சியும் இருக்கும். அதிகாரம் இல்லாத செல்வாக்கு, கட்சிக் கட்டுப்பாடு இல்லாத தலைமைப் பதவி, பின்பற்றாமல் புகழ்ச்சி பெறும் பெருமை ஆகியவை அவருக்குக் கிட்டியதன் ரகசியம் தான் என்ன? அந்த ரகசியம் அவருடைய சிறப்பியல்பில் அடங்கியிருக்கிறது. அவருடைய இயல்பு ஒரே சமயத்தில் வேகமும் நிலைத்தலும் வாய்ந்தது. புரட்சியும் அறிவும் பொருந்தியது, கலகமும் கட்டுப்பாடும் கலந்தது. அவர் காந்தீயத்தை மறுக்கிறார்; ஆனால் காந்தியைப் பின்பற்றுகிறார். பேசித் தாக்குகிறார்; ஆனால் செய்கையில் கட்டுப்பாடாக இருக்கிறார். நல்லது கெட்டது ஆராய்ந்து கூறுவதில் அலசியெடுத்து விடுவார்; ஆனால் அடங்கி நடப்பதில் அணுவளவும் பிசகமாட்டார். அடியோடு மாற்ற வேண்டுமென்ற நோக்கத்தோடு இருப்பார். ஆனால் வைதிகர் போல எதையும் கடைப்பிடிப்பார். எல்லாவற்றிற்கும் மேலாகத் தீரமும் உண்மையும் மேன்மையும் உள்ளவர். அதிகாரம் பண்ணுவதற்காகப் பதவிக்கு ஆசைப்படுவதை வெறுக்கிறவர். இதயத்தில் ஊறிய பெருந்தன்மை

யினுல் இவ் வருங் குணங்க ளெல்லாம் அற்புதமான வகை யில் கூடுதல் குறைச்சல் இன்றி ஒழுங்காக அமைந்திருக்கின் றன. இந்திய அரசியலில் அவருடைய ஒப்பற்ற நிலை மைக்கு இதுதான் காரணம். அவருடைய பெருமைக்கு இது தான் ரகசியம். தலைவன் என்ற தோரணையில் பின்பற்றும் கோஷ்டியில்லாமைக்கும் இதுதான் காரணம்.

அவருக்குப் பயப்படுவதைக் காட்டிலும் அவரை நேசிப்பதுவே அதிகமாக இருப்பதும், திரைமறைவு முயற்சிகள் இன்றிச் செல்வாக்கு அதிகமாக இருப்பதும், கட்சியின்றித் தலைவனுக இருப்பதும் அவருடைய சிறப்பி யல்பின் கவர்ச்சிக்கும் வலிமைக்கும் பெருமையளிக்கின் றன. ஒழுக்கத்தைக் கண்டு ஜனங்கள் அவரைப் போற்றுகி ருர்கள். அவருடைய செல்வாக்குக்கு வேறு அடிப்படை இல்லை. விவேகமற்ற காரியத்தை அவர் செய்து விடலாம். ஆனுல் கீழ்த்தரமான காரியங்கள் செய்ய இயலாதவர். மனம் தடுமாறலாம்; தயங்கலாம்; ஆனுல் அது துணிவுக் குறைவினுல் அல்ல. பிறரை அதிகாரத்துக்கு உயர்த்த லாம். ஆனுல் தாமே அதைக் கைப்பற்றுவதில்லை. காட்டிக் கொடுக்கப்படலாம், ஆனுல் அவர் காட்டிக் கொடுக்கமாட் டார். ஒரு அரசியல்வாதியிடம் இக் குணங்கள் இருந்தால் அவை அவரைச் சங்கடத்தில் மாட்டிவிடும். ஆனுல் நல்ல வேளை, கடவுள் செயலாக இக்குணங்களை மதிக்காத அளவுக்கு இங்கு நாகரிகம் பரவி விடவில்லை. இந்தியா வில் கடவுளிடத்தும் கோயிலிடத்தும் நம்பிக்கையில்லாமல் மதச்சார்புள்ளவனுக இருக்கலாம்; புராதன வழிகளை மீறியும் அறநெறியைச் சார்ந்தவனுக இருக்கலாம். தன் நாட்டைத் தவிர பிறநாடுகளைப் பற்றிப் பேசியும் தேச பக்தனுக இருக்கலாம்.

அவரிடத்தில் காந்தியைப் போன்ற ஒரு அறநெறி மேதையெதுவும் இல்லை. மனித சமுதாயத்துக்குப் புறம்பி லும், வெறும் சமூகக் காரியங்களிலும் மனிதனுடைய

நன்னெறியின் தன்மையைக் காணவேண்டுமென்று அதைப பற்றிய ஆழப்பதிந்த உள்ளுணர்வு ஏதும் அவரைத் தூண்டித் துருவுவதில்லை. சுவர்க்கத்தைப் பற்றிய எண்ணம் ஏதும் அவரைத் துரத்திக் கொண்டிருக்கவில்லை. ஆனால் வீரமும் பராக்கிரமுமான நோக்கங்களால் தூண்டப் பெற்றவர். உண்மையும், தைரியமும் வாய்ந்தவர். ஓய்வு இல்லாதவர். ஆக்கந்தரும் நற்குணங்களைக் கடைப்பிடிப் பதில் ஈடுபாடும் முரட்டுத்தனமும் இருக்கும்போது கூடவே தீயகுணங்களும் முளைத்துவிடக் கூடும். ஆனால் நல்லவேளை யாக, பிறவியிலேயே அமைந்த உள்ளத்தூய்மை அத்தகைய ஆபத்து ஏற்படாதவாறு காத்துக் கொள்கிறது. தன்னையே ஆராய்ந்து கொள்ளும் அறிவுத் திறமையோடு தன்னையே பரிகாசம் செய்து கொள்ளும் உணர்ச்சியும் கலந்திருப்ப தால், புரட்சி மனப்பான்மையோடு கூடவே வருகின்ற வெறியை அறவே ஒழிக்காவிட்டாலும் அதை மழுங்க வைக்கிறது. அவருடைய பார்வைக்கு நியாய புத்தியைக் கொடுக்கிறது.

அவருடைய கடுமையான எதிரிகள் கூட அவருடைய தீரத்தில் சந்தேகம் கொள்ளுவதில்லை. ஒருகால் அவ ருடைய துணிவே அவர்களை எதிரிகளாக ஆக்கியிருக்கலாம். இப்பொழுது அவருக்குக் கோபமூட்டுவது எளிது. என்று லும் அவருக்கு அதிகாரமும் செல்வாக்கும் வளரவளர அவ ருடைய போராடும் சுபாவமும் துடுக்கும் குறைந்திருக்கின் றன என்று அவரை நெடுநாளாகத் தெரிந்தவர்கள் கூறு கிறார்கள். பிரபுக்களிடம் காணப்படும் துணிவும் தன்னுறு தியும் அவரிடம் இன்னமும் உள்ளன. அதிகாரம் பண்ணு வதற்குப் பிறந்தவர்களுடைய மூக்கு நுனி துடிப்பதைப் போல அவருடைய மூக்கு நுனி கோபத்தால் அடிக்கடி துடிப்பதுண்டு. ஆனால் கஷ்டங்கள், தோல்விகள், சக்தி வாய்ந்த தோழர்களுடன் பழகுதல், இவைகளுக்கெல்லாம் மேலாக, மென்மையாக மேம்படுத்தும் காந்தியின் பழக்கம்

ஆகியவை அவரை லட்சியத்துக்காக நிதானமாகவும் அழகாகவும் பாடுபடச் செய்திருக்கின்றன. ஒருவர் தம்மைப் பற்றித் திருப்திப் பட்டுக்கொண் டிருக்கையில், ஜவாஹர் பட்டவர்த்தனமாகப் பேசுவது அவரைப் புண்படுத்தலாம். அதனால் ஜவாஹரை யாரும் கர்வி என்று கூற முடியாது. அவரிடத்தில் எளிமையும் புத்துயிரூட்டும் தன்மையும் வாய்ந்த பண்பு இருக்கிறது. பிறருக்கு ஆதரவாளராக, வழி காட்டியாக இருக்க வேண்டுமென்ற கீழ்த்தர ஆசையினின்றும் சுத்தமாக விடுபட்டவர். பெரிய மனிதர்களுக்கு அவர்களை அறியாமல் இவ்வித ஆசைகள் ஏற்பட்டு விடுவதுண்டு.

தமது நாட்டின் விதியை நிர்ணயிப்பதில் தமக்குள்ள உயர்ந்த பாகத்தை நன்குணர்ந்திருக்கிறார் அவர். தலைமையான வீரனென்று தம்மை ஆயிரக்கணக்கானவர்கள் மதித்து வணங்குவதையும் நன்கு அறிவார். ஜனத்திரளின் புகழ்ச் சொற்கள் அவருக்குத் தலைக்கனத்தை ஏற்படுத்தாமல் இருப்பதற்குக் காரணம், தம் மனத்தை அலசிப் பார்க்கும் வழக்கமும், அப் புகழ்ச்சியில் பிடிப்பு இல்லாமல் இருக்கக்கூடிய அறிவுத்திறமையும் அவரிடம் இருப்பதே. 'என்னை வீரனென்று புகழ்வது வெறும் போலித்தனமான புகழ். நான் பெருவீரன் அல்ல. பொதுவாக வீரத்தனமான போக்கு முட்டாள்தனமானதென்றே எனக்குத் தோன்றுகிறது' என்றார். மேலும் 'அளவுக்கு மிஞ்சின புகழ் சிறிது தலைக்கனத்தை ஏற்படுத்தத்தான் செய்கிறது. ஏனென்றால் ஒரு சாதுவோ அல்லது மனித இதயமற்ற பூதமோதான் இதனாலெல்லாம் பாதிக்கப்படாமல் இருக்க முடியும்' என்றும் கூறுகிறார்.

ஜவாஹர்லால் பக்தர் போர்வையிலுள்ள அரசியல் வாதி அல்லர்; காந்தியைப் போல பக்தர் அல்லர். அவர் கடவுளுடைய மனிதன். ஆகவே அவர் காந்தியைப் போல மனிதருடைய ஊழியர் அல்லர். துறவு அவருடைய வாழ்க்கை

விதியில்லை. வாழ்க்கையின் நல்ல பொருள்களை அவர் துறந்துவிட்டாரென்றால் அந்த இன்பங்களை அனுபவிப்பதற்குள்ள மானக்கேடான நிபந்தனைகளை வெறுத்துத் தான். அடிமையாக இருக்கமுடியாதபடி அவ்வளவு கர்வி யாக இருப்பதனால் அவர் கலகக்காரராக இருக்கிறார்.

கர்வத்தை வெளிப்படுத்துகின்ற ஒரு வழியாகவே அவர் தம் தியாகத்தை மதிப்பிடுவார். அவருடைய தேசபக்தியின் ஆணிவேரே கர்வம்தான்—சுதந்திர உணர்ச்சியின் கர்வம். தம்முடைய உரிமைகளில் தலையிடும் எதையும் வெறுக்கும் கர்வம். பயிற்சியுள்ள லட்சிய மனப்போக்கு, துணிகரமான இச்சை, நுட்பமாக இருப்பதைக் காட்டிலும் பகுத்தறிகின்ற அறிவு, தாராள மனப்பான்மை, ஆர்வம் ஆகிய தன்மைகளே அவரைச் சோஷலிஸத்தில் திருப்பி யிருக்க வேண்டும். 'உண்மையாக மதிக்கின்ற எதையும் நான் துறந்துவிடவில்லை. ஆனால் மதிப்புக்கள் மாறுகின்றன !' என்று கூறுகிறார்.

வாழ்வை எதற்காக மதிக்கிறார்? தேக, மனோசக்திகளை அறிவோடு பயன்படுத்துவது, நாம் பெறும் ஒவ்வொரு நன்மைக்கும் பாடுபடுவது, சகோதர மனிதர்களோடு வாழ்க்கையின் நல்ல விஷயங்களைப் பங்கிட்டுக்கொள்வது ஆகிய காரியங்களே அவருக்கு வாழ்வில் மதிப்பிடத்தக்கவை. அதாவது பண்பாடுள்ள இகவாழ்வை மதிக்கிறார். நாகரிகத்துக்காக நாகரிகம், பொது மக்களைக் காட்டிலும் உயர்ந்தவர்கள் என்னும் தரத்தைக் காட்டும் நாகரிகம், செல்வச் செழிப்பான அறையில் ஓய்வாக ஆவி மயங்கிக் கிடப்பதைப் போலச் சுகத்தில் ஈடுபட்டிருக்கும் நாகரிகம், அவருக்கு உகந்தவை யல்ல. அவர் மேன்மையான பண்பாட்டில் அமைந்தவர். அவரால் மூர்க்கனாக முடியாது. மதம், தத்துவம், கலை ஆகியவைகளை, அக்கறையற்ற சரித்திரக்காரனைப் போலப் பார்க்கிறார். அறிவுக்குப் பொருந்தாத தெய்விகச் சூழ்நிலை அவருக்கு ஒத்துக்கொள்வதில்லை.

உலகத்தைத் தாண்டி மேலே கிளம்புகிறதற்கு ஏற்றவாறு இலேசான பொருளால் ஆக்கப்பட்டவர் இல்லை. உறுதியான உலோகத்தால் ஆக்கப்பட்டவர். அவர் போதுமான அளவு இந்தியனாக இல்லையென்று குற்றம் சாட்டப்படுகிறார் என்றால் அதில் ஆச்சரியப்படுவதற்கில்லை. உண்மையான இந்தியனாக இருக்கவேண்டி அவருடைய கேள்விகள் போதுமான அளவில் தத்துவ ரீதியில் இல்லை என்கிறார்கள். அவரது பதில்கள் போதுமான அளவில் தேவரகசியமாக இல்லை என்கிறார்கள்.—அதாவது அவருடைய நடத்தை போதுமான அளவில் விளங்காத நிலையாக, பிடிபடாத வகையில் இல்லை என்கிறார்கள். இருக்கலாம். அப்படியிருப்பதாகத்தான் அவரும் நினைக்கிறார். மனச் சூழ்நிலையிலே தாம் ஒரு அன்னியனாக இருப்பதாக அவர் ஒப்புக்கொள்கிறார். 'யுத்தத்துக்கு முந்திய ஹாரோ நகரத்தாலும், யுத்தத்துக்குப் பிந்திய மாஸ்கோ நகரத்தாலும் உண்டாக்கப்பட்ட நபர்' என்று 'லண்டன் டைம்ஸ்' அவரை ஒரு முறை கேலி செய்தது. பார்க்கப்போனால் இந்தியர்களாகிய நாமெல்லாம் என்ன அவ்வளவு தத்துவத் தோரணையிலா இருக்கிறோம்? நம்முடைய காரியங்களெல்லாம் ஆன்ம ஞானத்தை அடிப்படையாகக் கொண்டனவாகவா இருக்கின்றன, அவருடைய பகுத்தறியும் மனத்தையும் தீரமுள்ள இதயத்தையும் பார்த்து இந்தியத் தன்மையற்றவரென்று கருதுவதற்கு? அல்லது வெளிநாட்டார்தான், நமது இகலோக நல்வாழ்வை அவர்களிடம் நாம் ஒப்படைக்கும் பொருட்டுக்கு நமது ஆன்ம விசாரணையை மிகைப்படுத்திக் கூறுகிறார்களா?

'ஒரே ஒரு அர்த்தத்தில் நேரு இந்தியத் தன்மையற்றவர்—எந்த அர்த்தத்தில் காந்தி மிக அதிகமாக இந்தியராக இருக்கிறாரோ அதே அர்த்தத்தில். எல்லாத் தேச நாகரிகங்களுக்கும் பொதுவான நல்லியல்புகளின் பிரதிநிதியாகக் காந்தி இருக்கிறார். ஆனால் காந்தி முழுக்க முழுக்க ஒரு

இந்தியன். ஐயாயிர வருஷ இந்திய தியானத்தையும் காந்தி தன்பால் கொண்டிருக்கிறார். அவர் இந்தியனிலும் அதிகம். அவரே இந்தியா. அவதாரம் என்று இந்து அழைப்பானே அதுதான் அவர். அவர் இந்தியாவை ஆக்குகிறார். நேரு இந்தியாவைக் கண்டுபிடிக்கிறார். கண்டுபிடித்த முறையி யில்கூட வேகமும் புதுமையும் இருக்கின்றன. காந்தியும் நேருவும் ஒருவர்க்கொருவர் மாறுபட்டவர்கள். அதே சமயத்தில் ஒருவரை யொருவர் பூர்த்திசெய்ய வந்தவர்கள். காந்தியில்லாத நேரு பலனற்றவர். நேரு இல்லாத காந்தி அரை குறையானவர். ஒரு வகையில் காந்தியின் வெற்றியே நேரு.

காந்திக்கு அவர் உண்மையான பிள்ளை; வாரிசு. உண்மையான பிள்ளையைப்போல அவரை அப்படியே பிச காமல் பின்பற்றுவதோடே திருப்தி அடைவதில்லை. குருட்டுத்தனமாகப் போன பாதையிலேயே போகாமல் புதுப் பாதைகளில் சென்று, ஆக்கங்காணும் காந்தியின் உணர்ச்சி யைத் தாங்கிப் பின்னும் புதுத் துறைகளிலும் சோதனை களிலும் முன்னேறுவதில் ஆர்வங் கொண்டவர். ஆகவே மகாத்மாவின் ஆசிகளால் அவர் முடிசூட்டப் பெற்றிருப் பது முற்றிலுஞ் சரியே. காந்தி பக்தர்கள் அவரைச் சந்தே கப் பார்வையோடு பார்த்தாலுங்கூட எங்கே சென்றாலும் அவர் காந்திஜியின் நம்பிக்கையைப் பெற்றிருக்கிறார். காந்திஜியின் அஹிம்சைத் தத்துவத்தை மதஉணர்ச்சியோடு ஏற்றுக்கொள்ளவில்லை. அதிலும் அறிவை ஏற்றுக்கொள் கிறார். நல்ல லட்சியங்களை அடைவதற்கு நல்ல வழிகள் வேண்டுமென்ற பெரிய அடிப்படையான உண்மையை ஒப் புக்கொண்டு அதன்படி நடந்து வந்திருக்கிறார். காந்தீ யத்தை இவர் அனுசரிக்கவில்லையே யென்று காந்தீயபக்தர் கள் திகிலடையும்படியும், காந்தீயத்தையல்லவா பின்பற்று கிறாரென்று சோஷலிஸ்டுகள் கையைப் பிசையும்படி யும் அவ்வளவு நன்றாகக் காந்தீயத்தைத் தம்முடைய

சுபாவத்துக்கும் பயிற்சிக்கும் இசைந்த அளவில் தமதாக்கிக் கொண்டிருக்கிருர். வேறு எந்த மனிதரைக் காட்டிலும் சோஷலிசத்தை அதிகமாகப் பொது மக்களிடையே பரப்பியவர் ஜவாஹர்லால்தான். எனினும் அவர் காங்கிரஸ் சோஷலிஸ்டுக் கட்சி அங்கத்தினராகக்கூட இல்லாமலிருப்பது கவனிக்கத்தக்கது. தீரமும் நேர்மையுமுள்ள எல்லோரையும் போல அவரும் ஒரே சமயத்தில், பண்டைக் கொள்கைகளுக்கு மாறுபட்டவர் ; தம் கட்சியைக் கைவிட்டவர் ; கலகக்காரர் ; தனக்கு மாத்திரம் உண்மையாக இருந்து கொண்டு பிறர் யாவருக்கும் அனுஷ்டான விரோதியாகத் தென்படுகிறவர்.

காந்தீயத்துக்கும் சோஷலிசத்துக்கும் இடை நிற்கும் பாலம் அவர். அறத்தின் வேண்டுகோளுக்கும் பொருளின் அழைப்புக்கும் இடை நிற்கும் பாலம். தெய்விகப் புனிதத்துக்கும் வீரத்துக்கும் இடை நிற்கும் பாலம். தன்னுடைய லெனினிஸத்தால் காந்தீய பக்தர்களைப் பயமுறுத்தித் தன்னுடைய காந்தீயத்தால் லெனினிஸ்டுகளைத் திகைக்கவைக்கிருர். அவ் விருசாராரையும் தன் அறிவுத்திறத்தால் இணைப்பதில் அவர் வெற்றிபெறவில்லை. இவ்விருவகைச் சித்தாந்தங்களின் சன்மார்க்க போதனையில் இவருக்கொன்றும் பிடிக்காது. ஆனாலும் எப்படியாவது, எந்த இடத்திலாவது, இவைகளை இணைத்து மாற்றி அமைத்துவிட்டால்தான் அறிவுள்ள உலகத்தை உண்டாக்குவது சாத்தியமாகும் என்று எண்ணுபவர். அப்பொழுதுதான் மனிதர்கள் சுதந்தரத்துடனும் மகிழ்ச்சியோடுமுள்ள உலகத்தை—அரசாங்கத்தின் நன்மைக்காக மனிதனை இயந்திரமாக்காமல், மனிதனுடைய நன்மைக்காக இயந்திரத்தை அடிமைப்படுத்திய உலகத்தை—தனிநபரின் பேராசையானது பொது நலத்தைக் கெடுக்காததும், பொது நன்மையானது தனிநபரின் உயர் தன்மையையும், குணத்தையும் கேலிக் கூத்து ஆகாததுமான அறிவுடைய உலகத்தை—சாத்திய

மாக்க முடியும். இது ஒரு லட்சியம். பிடிபடாது. வாழ்வை எப்படி வரையறுக்கமுடியாதோ அதைப்போலவே இதுவும், சிந்தனையாளனின் கூர் அறிவையும், புரட்சியாளனின் வீரத்தையும் "வந்து பார்" என்று திகைக்க வைத்துக்கொண்டிருக்கிறது. பின்னும் திகைக்க வைத்துக் கொண்டேயிருக்கும்.

இன்றைய இந்தியாவில் சுதந்திரத்துக்காகவும் கௌரவத்துக்காகவும் நடத்தப்படும் போராட்டத்தில் ஒடுக்கப்பட்ட ஜனங்களின் கொடியை ஜவாஹர் தாங்கிச் செல்கிறார். உறக்கத்தினின்று எழுந்த விழிப்பின் ஆர்வம் அவர். புதிய ஒருமைப்பாட்டின் அறைகூவல் அவர். ரவீந்திரநாத தாகூர் ஒரு சமயம் அவரை வஸந்தத்தின் ஜீவனுக்கு, நித்திய இளமையின் ஜீவனுக்கு ஒப்பிட்டார். வஸந்தத்தைப்போல உறங்கிக்கொண்டிருக்கிற நாகரிகத்தின் மேற்பரப்பிலிருக்கும் உறைபனியை அவருடைய ஜீவன் உடைத்தெறிந்து விட்டது. இந்த உன்னத ஆர்வத்தைக் கடைசிவரை கொண்டு செலுத்துவாரா, அவருடைய உற்சாக மலர்கள் வெற்றிக்கனி நல்குமா என்பது அவருடைய பெருமையின் பலத்தையும் நம்முடைய விதியின் அளவையும் பொறுத்திருக்கும்.

# பழக்கமும் பாராட்டும்

ஸ்ரீ பிரகாசா

சென்ற நூற்றுண்டின் இறுதியிலேயே என்னுடைய தந்தையும் பண்டித மோதிலால் நேருவும் பழக்க முள்ளவர்கள். பண்டித மோதிலால் நேரு அப்பொழுதே நல்ல வரும்படியுள்ள வக்கீல். 1906-ல் தான் நான் அவரைப் பற்றிக் கேள்விப்பட்டேன், 1906 ஜனவரியில் அலஹாபாத்தில் பெரிய 'கும்ப விழா' நடைபெற்றது. எத்தனையோ நூற்றுண்டுகளாக இவ்விழா இந்த ஊரில் பன்னிரண்டாண்டுகட்கு ஒரு முறை நடந்து வருகிறது. அப்பொழுது எனக்கு வயது பதினைந்து. அன்னிபெஸன்ட் அம்மையாரோடு மிஸ் வில்ஸன், மிஸ் டேவிஸ் (மிஸஸ் ரான்ஸம்) என்ற இரண்டு ஆங்கில மாதர்கள் இருந்தனர். புராதன உலகப் புகழ்பெற்ற இந்த விழாக்கூட்டத்தைப் பார்க்க இவர்களும் ஆசைப்பட்டார்கள். இதை நாங்கள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அவர்களோடு என்னையும் அலஹாபாத்துக்குப் போய்வரச் சொன்னுர் எந்தை. அன்னிபெஸன்ட் மோதிலாலுக்குப் பெரிய நண்பர்; தான் வரப்போவதாக மோதிலாலுக்குத் தந்தி கொடுத்தார். மோதிலாலுடைய ஆட்கள் எங்களை ஸ்டேஷனில் சந்தித்தார்கள். நாங்கள் மோதிலாலுடைய விருந்தினர்களானேம். அன்று மாலைதான் நான் முதன்முதலாகப் பண்டித மோதிலால் நேருவை ஆனந்த பவனில் கண்டேன். அவர்

மனைவி சொரூப ராணியும், மகள் சொரூப குமாரியும் (விஜயலட்சுமி பண்டிட்) இருந்தனர். பண்டித மோதி லால் ஐரோப்பிய வழக்கப்படி ஆடை யணிந்திருந்தார். அந்த அறையிலுள்ள மேஜை, நாற்காலி முதலிய சாமான் களும் ஐரோப்பிய முறையில் அமைக்கப்பட்டிருந்தன. அவர் மகளுக்கு ஐந்து அல்லது ஆறு வயதிருக்கும். அவ ளுக்கு ஒரு ஆங்கிலமாது செவிலித்தாயாக இருந்தாள். கடைசிவரை தனது இனிய சுபாவத்தைக் கைவிடாத சொரூபராணி என்னைத் தன் மகளிடம் காட்டி, 'இவன் உன் சகோதரனின் நண்பன்; உனக்கு மூத்த சகோதரன்' என்று இனிமையாக அறிமுகப்படுத்தி வைத்தாள். அவர் களுக்கு ஒரு மகன் எங்கேயோ இருக்கிறுர் என்று அப் போது அறிந்துகொண்டேன். 'உனக்கு ஜவாஹர்லாலைத் தெரியும். அவன் ஹாரோவுக்குப் போயிருக்கிறுன்' என்று பண்டித மோதிலால் நேரு என்னிடம் சொன்னுர். இதற் குக் கொஞ்ச நாளைக்கு முன்புதான் பண்டித மோதிலால், ஜவாஹர்லாலை இங்கிலாந்தில் ஹாரோவில் சேர்த்துவிட்டு வந்திருக்கிறுர்.

இதற்கு ஒரு மாதத்திற்கு முன்பு காசியில் காங்கிரஸ் மகாநாடு கூடிற்று. அப்பொழுதே தீவிரவாதிகள் தலை தூக்க ஆரம்பித்துவிட்டார்கள். இங்கிலாந்திலிருந்து சற்று முன்பு திரும்பி வந்திருந்த லாலா லஜபதிராய் மகா நாட்டில் கடுமையாகப் பேசினுர். செல்வாக்கு மிகுந்த லோகமான்ய திலகரும் அதற்கு வந்திருந்தார். மிஸ் வில்சனையும் மிஸ் டேவிஸையும் பார்த்து, 'நீங்கள் காங்கிரசுக்கு வந் திருக்கவேண்டும்' என்றுர் மோதிலால் நேரு. தான் வந்திருந்ததாக மிஸ் டேவிஸ் கூறியதும், 'லாலா லஜ பதிராயின் சுத்தமுட்டாள்தனமான பேச்சைக் கேட் டீர்களா?' என்று மோதிலால் சொன்ன வார்த்தைகள் எனக்கு இன்றும் நன்றுக நினைவிருக்கின்றன. எனக்கு அப்பொழுது வயது பதினைந்து என்றுலும், அப்

பொழுதே என்னை ஒரு தீவிரவாதியென்று நான் கருதிக் கொண்டேன். காங்கிரஸ் நடவடிக்கைகளைக் காலையிலிருந்து மாலைவரையில் கவனிப்பேன். ஆங்கிலத்தைக் கூடுமானவரை நன்ருகப் புரிந்துக் கொள்வேன். லாலா லஜபதிராயின் பேச்சுக்களைப் பெரிதும் வியந்து கைதட்டி யிருக்கிறேன். பண்டித மோதிலால் கூறிய வார்த்தைகளுக்காக அப் போது அவரோடு சண்டை போட ஆரம்பித்துவிட்டேன். நிரம்பக் கஷ்டப்பட்டு மிஸ் வில்சன் என்னைச் சமாதானப் படுத்திஞர். பண்டித மோதிலால் நேரு எப்பொழுதுமே பிடிவாதமான மனிதர். அந்தந்த நேரத்திலே அவருடைய அபிப்பிராயம் எதுவோ அதை எதிர்ப்பவர்களிடம் அவ ருக்குச் சிறிதும் பொறுமை இராது. ஆதியிலிருந்து கடைசி வரை இதுவே அவருடைய போக்கு. பண்டிதர் சொன்ன தெல்லாம் சரி என்பது தான் மிஸ் டேவிஸின் அபிப்பிரா யமும். புகழ் பெற்ற இக் குடும்பத்துடன் நான் இவ்வித மாகத்தான் அறிமுகமானேன். பண்டித ஜவாஹர்லாலின் இளமைப் பருவச் சூழ்நிலையைக் கவனித்தால் இன்றுள்ள நிலைமைக்கு அவர் வருவார் என்று அப்பொழுது சொல்ல முடியாது என்பதை வாசகர்கள் உணர்ந்திருப்பார்கள். முழுமையும் ஆங்கில முறைப்படியே வளர்க்கப்பட்டார். வீட்டு நடப்புகளைப் பார்த்தால் நாமெல்லோரும் ஆங்கி லேயரைப்போல் ஆகவேண்டுமென்பதே குறிக்கோளாகத் தோன்றியது. அந்த வீட்டாரின் அரசியல் அபிப்பிராயங் களும் மிதவாதத் தன்மையில் இருந்தன. சமூக விஷயங் களிலோ அதற்கு நேர் எதிர். அந்தக் காலத்து அதிசயங் களில் இதுவும் ஒன்று. அரசியலில் வெகு தீவிரவாதிகள் சமூக விஷயங்களில் பழமையைப் பின்பற்றுபவர்களா யிருப்பார்கள். சமூகச் சீர்திருத்தத்திலே தீவிரவாதிகள் அரசியலில் மிதவாதிகளாக இருப்பார்கள்.

1905-லிருந்து ஜவாஹர்லால் இங்கிலாந்தில் இருந்தார். ஹாரோவில் படிப்பு முடிந்தவுடன் கேம்பிரிட்ஜ்

டிரினிடி கல்லூரியில் படித்தார். நான் அங்கே சென்றேன். ஆனால் ஒரு வருஷத்துக்கு முன்பே அவர் சர்வகலா சாலையை விட்டு லண்டனில் பாரிஸ்டர் வேலைக்குப் படிக்கப் போய்விட்டார். 1911-12-ல் கிறிஸ்மஸ் விடுமுறைக்கு நான் லண்டனுக்குப் போனேன். அலஹாபாத்தைச் சேர்ந்த டாக்டர் பகவான் தின் துபே லண்டனில் பாரிஸ்டர் தொழில் நடத்தி வந்தார். அவருடைய மனைவி ஸ்ரீமதி ராம் துலாரி துபே, ஒரு நாள் என்னைத் தெருவில் சந்தித்த போது, நான் அந்த நாட்டுக்குப் புதியவன் என்பதை அறிந்து என்னை அவர்கள் வீட்டுக்கு வரச் சொல்லியிருந்தார்கள். நான் அவ்வாறே அவர்கள் வீட்டுக்குப் போயிருந்த போது, ஜவாஹர்லாலும் தற்செயலாக அங்கு வந்து சேர்ந்தார். இங்கே தான் நாங்கள் முதன் முதலில் சந்தித்தோம். அப்போது ஜவாஹர்லால், 'எனக்குப் பசிக்கிறது' என்று ஹிந்தியில் சொன்னதாக எனக்கு நினைவு. உடனே கொஞ்சம் சிற்றுண்டி கொண்டு வந்தார்கள். துபே வீட்டிலிருந்து இராத்திரி வெகு நேரம் கழித்து வெளியேறினோம். அந்த வீடு ஹாம்ப்ஸ்டெட்டில் இருந்தது; என்னுடைய ஜாகை தொலைவில் இல்லை. நடுச்சாமம் தாண்டி விட்டது. வண்டி வாகனங்கள் எல்லாம் நின்றுவிட்டன. டாக்ஸிகள் ஒன்றையும் காணோம். ஜவாஹர்லாலின் ஜாகை தொலைவில் இருந்தது. கொஞ்சதூரம் நடந்து போய்க்கொண்டிருந்தோம். 'எப்படி வீட்டிற்குப் போகிறீர்கள்?' என்று அவரைக் கேட்டேன். 'என்னைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். நான் போய்ப் படுப்பதற்குமுன் ஏதாவது சாப்பிட்டாக வேண்டும்' என்றார். அவருடைய சுய சரித்திரத்தில் கூறியிருப்பதைப் போல, மிகுந்த பணக்கார ஆங்கில மாணுக்கனைப் போலவே தனது படிப்பு நாட்களை அவர் கழித்தாரென்பது தெளிவாகிறது. அவருடன் கல்லூரியில் கூடப்படித்த இரண்டு ஆங்கிலேயரைச் சந்தித்திருக்கிறேன். அவர்களில்

ஒருவர் அவருடனேயே தங்கியிருந்தவர். பிற்காலத்தில் நேரு இப்படி வரக் கூடுமென்பதற்கான அறிகுறிகளில் ஒன்றும் அக்காலத்தில் காணப்படவில்லை என்று அவர்கள் என்னிடம் கூறியிருக்கிறார்கள்.

ஜவாஹர்லால் 1912-ல் இந்தியாவுக்குத் திரும்பினர். நான் 1914-ல் வந்தேன். ஐக்கிய மாகாணத்துக்கு ஒரு எக்ஸிகியூடிவ் கௌன்சில் (நிர்வாகசபை) வேண்டியதில்லை என்று அரசாங்கம் செய்த முடிவை எதிர்ப்பதற்காக 1914 கோடையில் ஒரு விசேஷ மகாநாடு கூட்டப்பட்டது. எக்ஸ்யூடிவ் கௌன்சில் (நிர்வாகசபை) ஏற்படுத்தப் போவதாகவும் அதற்குக் காலம் சென்ற பிரபல வக்கீலான 'சர் சுந்தரலாலை' முதல் அங்கத்தினராக ஏற்படுத்தப் போவதாகவும் எங்கும் வதந்தியாக இருந்தது. இது நிகழாமல் போகவே அரசியல்வாதிகள் பெரிதும் ஏமாற்றமடைந்தார்கள். ஆகையால் காலஞ் சென்ற முகமதாபாது மகாராஜா தலைமையில் அலஹாபாத்தில் ஒரு மகாநாடு கூட்டப்பட்டது. காசியைச் சேர்ந்த இதரப் பிரதிநிதிகளுடன் நானும் போயிருந்தேன். அங்கு ஜவாஹர்லாலும், என்னுடைய கேம்ப்ரிட்ஜ் சகபாடிகளான சிலரும் யாவரும்பாரிஸ்டர்கள்-தொண்டர்களாக நின்றுமகாநாட்டு மண்டபத்திலே பிரதிநிதிகளுக்கு, குளிர்ந்த நீர், ஷர்பத் கொடுத்து சேவைசெய்துவந்தார்கள். ஜவாஹர்லாலை இங்கு இரண்டாம் தடவையாகச் சந்தித்தேன். அப்பொழுதே அரசியல் அவரைக் கவர ஆரம்பித்துவிட்டது. தொழிலில் தன் தந்தையைப் பின்பற்றவேண்டுமென்ற நோக்கத்தோடு தான் அவருடைய வளர்ப்பு, படிப்பு, பயிற்சி எல்லாம் அமைக்கப்பட்டிருந்தன. 'தன்னைப் போலத் தன் மகனும் வக்கீல்களுக்குள்ளே முதன்மை பெற்று நல்ல புகழும் பொருளும் சம்பாதிக்கவேண்டு' மென்று மோதிலால் ஆசைப்பட்டார் என்று அவருடைய நண்பர்கள் பேசிக்கொண்டார்கள்' 1926 வரையும் பண்டித மோதிலால்

நேருவுக்கு ஜவாஹருடைய தீவிர அரசியல் போக்குகள் பிடிக்கவில்லையென்றே நினைக்கிறேன். லாகூரில் நடைபெற்ற அந்தப் பெரிய காங்கிரஸ் மகாநாட்டிற்கு ஜவாஹர் தலைவராக, உள் நாட்டிலும் 'இந்தியத் தலைவராக' ப் புகழ் பெற்ற பின்புதான் தந்தை மனம் மகிழ்ச்சியடைந்தது. அவரும் சமாதானமானார்.

லீடர் பத்திரிகைக் காரியாலத்தில் காலஞ் சென்ற சர் ஸி. ஒய். சிந்தாமணியின் கீழ் பத்திரிகைத் தொழிலைக் கற்றுக் கொள்வதற்காக 1917-ல் அலஹாபாது சென்றேன். சர் டி. பி. சப்ரு, டாக்டர் கட்ஜு, ஸ்ரீ. புருஷோத்தமதாஸ் தாண்டன் ஆகிய பிரபலஸ்தர்களைப் போல, பண்டித மோதிலால் நேருவும் பண்டித ஜவாஹர்லால் நேருவும் நீதி மன்றத்தில் வேலைகள் முடிந்தவுடன் அன்றையச் செய்திகளைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கப் பத்திரிகாலயத்திற்கு வருவதுண்டு. பண்டித ஜவாஹர்லால் தனியாக வருவார். சில சமயம் சாயந்திரம் வெகு நேரம் கழித்து வருவார். அப்போது ஹோம்ரூல் கிளர்ச்சிக் காலம். அன்னி பெஸன்டும் அவருடைய இதர கூட்டாளிகளும் கைது செய்யப்பட்டார்கள். நாடு எங்கிலும் பரபரப்பாயிருந்தது. ஜவாஹர்லால் அரசியலில் தீவிரப் பக்கத்திற்கு இழுக்கப்பட்டு விட்டாரென்பது நிச்சயம். அவர் ஹோம்ரூல் லீகின் காரியதரிசிகளில் ஒருவர். அன்னி பெஸன்டைச் சிறை செய்ததைக் கண்டிப்பதற்காக அலஹாபாத்தில் ஒரு பொதுக்கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. பண்டித மோதிலால் அந்தக் கூட்டத்துக்குத் தலைவர். அச்சமயம் அலஹார்பாத்தில் ஒரு வாலிபர் மாஜிஸ்டிரேட்டாக இருந்தார். தீவிரப் பேச்சுக்களால் ஏற்படக் கூடிய அபாயங்களைக் குறிப்பிட்டு எச்சரிக்கை செய்து அவர் பண்டித மோதிலால் நேருவுக்கு ஒரு கடிதம் எழுதினார். இதன் மீது அரசியல் வட்டாரங்களில் பெருங்கோபம் மூண்டது. அனுபவமில்லாத இளைஞன் ஒருவன் யாவராலும் கௌரவமாக மதிக்

கப்படுபவரும், வயதானவரும், அரசியலறிஞரும், உயர்ந்த அந்தஸ்துள்ளவருமான பண்டித மோதிலால் நேருவுக்கு இம்மாதிரி கடிதம் எழுதுவதென்றால், அது மரியாதைக் குறைவான காரியமென்று கருதினார்கள். திரு. சிந்தாமணிக்கு நிரம்பக் கோபம். லக்ஷ்மணபுரியிலிருந்த லெப்டினண்ட் கவர்னருக்கு, மாஜிஸ்டிரேட்டின் செய்கையைக் கண்டித்துப் பண்டித மோதிலால் நேரு ஒரு ஆள் மூலமாக ஒரு கடிதம் எழுதி அனுப்பினார். "கூட்டம் நடத்த அனுமதி கிடைக்காதென்று நினைக்கிறேன். அதிகாரிகள் தடைவிதிப்பார்கள். ஆனால் என்ன வந்தாலும் சரி, கூட்டம் நடத்தியே தீரவேண்டும்" என்று சிந்தாமணி என்னிடம் கூறினார். இதிலிருந்து திரு சிந்தாமணி மிகவும் பிடிவாதமானவர் என்பது தெரிய வரும். ஒழுங்கற்ற உத்தரவுகளுக்கு எதிராகக் காரியங்கள் செய்ய ஆரம்பித்து விடுவார்.

மகன்தான், தந்தையை அரசியலில் தீவிரப் பக்கத்துக்கு இழுத்துச் சென்றார் என்பது அலஹாபாத்தில் பொதுவான அபிப்பிராயமாக இருந்தது. தான், தன் மகனோடு சேர்ந்திருந்தால் தன்னுடைய உயர்ந்த அந்தஸ்துக் காரணமாக மகனுக்கும் இயல்பான பாதுகாப்பாயிருக்குமென்று மோதிலால் நினைத்தாரென்று பொது மக்கள் வெளிப்படையாகப் பேசிக் கொண்டார்கள். தந்தையின் பாதுகாப்பு இல்லாவிட்டால் ஜவாஹருக்கு என்ன நடக்குமென்று சொல்ல முடியாது. கூட்டம் நடைபெற்றது; பேச்சுக்கள் கடுமையாக இருந்தன, ஆனால் அரசாங்கம் ஒன்றும் தடை செய்யவில்லை. அப்போது பஞ்சாபில் லெப்டினன்ட் கவர்னராக விருந்த 'சர் மைக்கேல் ஓ'டையருடைய பிற்போக்கான நடத்தையையும் காரியங்களையும் கடுமையாகத் தாக்கினார்கள். மகா நாட்டுத் தீர்மானங்களை இந்திய, இங்கிலாந்து அரசாங்கங்களுக்கும் அனுப்புவதென்று தீர்மானிக்கப்பட்டது. தீர்மானங்களை சர் மைக்கேல் ஓ'டையருக்குத் தந்தி மூலம் அனுப்புவதென்ற தீர்மா

னம் எனக்கு ரொம்பப் பிடித்திருந்தது. வீட்டுக்குத் திரும்பும் சமயத்தில் சிந்தாமணியிடம் பத்து ரூபாய் நோட்டைக் கொடுத்து, தந்திச் செலவுக்கு வைத்துக் கொள்ளச் சொன்னேன். ஜவாஹர்லால்தான் செயலாளர். தந்தி அனுப்புகிற காரியம் அவரைச் சேர்ந்தது. எனக்குத் தெரியாமல் திரு. சிந்தாமணி பணத்தை ஜவாஹர்லாலிடம் அனுப்பிவிட்டார். மறு நாள் ஜவாஹர்லாலிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அவர் எப்போதுமே உடனுக்குடன் பதில் அனுப்பிவிடுவார். பணத்திற்காக வந்தனம் அளித்தும், இப்படி எல்லோருமே தாராளமாக இருந்துவிட்டால் இந்தக் காரியத்தை மேற்கொண்டு நடத்துவதில் கஷ்டமேயிராது என்றும் எழுதியிருந்தார். இதுதான் ஜவாஹர்லாலிடமிருந்து எனக்கு வந்த முதற் கடிதம். 'லீடர்' காரியாலயத்தில் நான் அடிக்கடி அவரைச் சந்தித்து அநேக விஷயங்கள் பற்றிப் பேசியிருக்கிறேன். ஒன்று அல்லது இரண்டு முறை அவர் வீட்டிற்கும் போயிருக்கிறேன். அது முதல் நான் அவரை எத்தனையோ இடங்களிலும் நிலைமைகளிலும் சந்தித்திருக்கிறேன். நூற்றுக் கணக்கான கடிதங்கள் எழுதியிருக்கிறேன். ஆனல் முதற் சம்பவங்களே நினைவில் தெளிவாக இருக்கின்றன. நான் மேற்கூறிய சிறு சம்பங்கள் ஜவாஹரின் மன வளர்ச்சியை அறிய உதவுமென்று நம்புகிறேன்.

ஜவாஹரின் அறிவுத்திறம் உண்மையாகப் போற்றத் தக்கது. தன்னுடைய நெருங்கிய நண்பர்களுக்கும் சகாக்களுக்கும் எதிராகத் தனது அபிப்பிராயங்களைத் தாராளமாகக் கூறுகிறார். காங்கிரஸ் காரியக் கமிட்டியின் நடவடிக்கைகளை அறிந்தவர்கள் இவருடைய ஒளிவு மறைவற்ற பேச்சுக்களால் ஏற்படும் சங்கடங்களை நன்கறிவர். ஆனல் இவர் எதற்கும் பின்னடையாதவர். 1928-ல் நடந்த கல்கத்தா காங்கிரஸில் தகப்பனையும் எதிர்த்துநின்றார். அவருடைய நெஞ்சின் உரத்தை எவ்வளவு பாராட்டினலும்

போதாது. எதிர்ப்பாளர் கூட்டங்களுக்குள்ளே சிறிதும் தயங்காமல் குதித்துவிடுவார். என்னவாகும் என்பதைப் பற்றி யோசிக்கிறதே இல்லை. 'ரெ பரேலி' நகரத்தில் துப்பாக்கிப்பிரயோகம் நடக்கும்பொழுது அசையாமல் நின்ருர். லட்சுமணபுரியில்தடியடி வாங்கினுர். அலஹாபாத்தில் சங்கமத்தில்குளிக்கக் கூடாதென்று போலீஸ் சூழ்ந்து நின்ற வளையத்தை மீறிச் சென்று குதித்தார். ஸ்பெயினிலும் சுங்கிங்கிலும் விமானத் தாக்குதலின் அனுபவங் கண்டிருக்கிருர். இந்த மனிதனுக்குப் பயமென்பதே தெரியாதோ என்று நான் அடிக்கடி நினைப்பதுண்டு.விரும்பத்தகுந்த இவ் உயர்ந்த நற்குணம் என்னிடத்தில் இல்லாததால் நான் இவரை மிகவும் வியக்கிறேன். பொதுவாக நம் தேசத்தவரிடம் இந்தக் குணம் குறைவென்றே நினைக்கிறேன். புத்தனும் காந்தியும் கற்பித்த அஞ்சாமைக் குணத்தை மாத்திரம் நம்மிடம் வளர்த்துக்கொண்டோமானுல் நாம் பெரிய காரியங்களைச் சாதிக்கலாம். இதிலே ஒரு பெரிய விஷயம் என்னவென்ருல் தாம் ஏதோ அசாதாரணமான காரியம் செய்துவிட்டதான நினைப்பே ஜவாஹருக்குத் தோன்றுவதில்லை. யாராவது அவரைப் புகழ்ந்தால் அவர் ஆச்சரியப்படுபவராய்த் தென்படுகிருர். வீரமான காரியம் செய்த பின்புங்கூட எல்லாவற்றையும் மறந்தவர்போல நிம்மதியாக இருக்கிருர்; அல்லது சிரித்து விளையாடுகிருர். மற்றவர்கள் அதிசயப்படலாம். அவர் மட்டும் அதிசயப்படுவது இல்லை. எல்லா நிலைமைகளிலும் மன அமைதியை விடாதிருக்கிருர்.

ஜவாஹர்லாலின் குணுதிசயங்களில் என்னைப் பெதும் கவர்வது அவரிடம் நிரந்தரமாகக் காணப்படும் குழந்தைத்தனம். அதிக நேரம் கோபமாக இருக்கமாட்டார், கொஞ்சநேரம் கொதித்துப் பின் ஆறிவிடுவார். அவருடைய சுபாவத்திலே மனக்கசப்பென்பதே கிடையாது. அவருக்கு வயது ஐம்பத்தைந்து ஆகிறது; இன்னும் குழந்தைதான்

சுபாவத்திலே பையன்போல; அவருடன் பேசும்போது உலகத்தில் உள்ள பெரிய மனிதர்களில் ஒருவரோடு பேசுகிறேமென்ற எண்ணமே ஏற்படாது. விளையாட்டுக்காவது தேகப் பயிற்சிக்காவது எல்லோர் முன்னிலையிலும் தலைகீழாக உருள ஆரம்பித்துவிடுவார்; அல்லது சின்னப் பிள்ளைகளோடு கண்ணாமூச்சி விளையாட ஆரம்பித்துவிடுவார். எல்லோரையும் சம நிலையில் சந்திப்பார். ஆடம்பரக் காட்சிகளில் முதலில் இருக்கவேண்டுமென்ற ஆசை கிடையாது. கீழே எங்கேயும் உட்கார்ந்து கொள்வார். உண்மையான நண்பர் அவர். தன்னுடைய நண்பர்களை அவர் நன்கறிவார். ஜனத்திரளுக்கு மத்தியிலேயே தன் வாழ்நாளைக் கழிக்கவேண்டியிருந்தாலும் உண்மையில் அவர் தனிமையான மனிதர்தான். தலைவனுக்குரிய பல குணங்களிருந்தும், தன்னுடைய காரியத்தைப் பிறரைக்கொண்டு முடித்துக் கொள்ளும் முக்கியமான தன்மை அவரிடமில்லை. தன் காரியங்களையெல்லாம் தானே பார்த்துக்கொள்கிருர். மகாத்மா காந்தியைத் தவிர்த்து இதர மனிதர்களில் சர்தார் வல்லபாய் படேல் அல்லது ஸ்ரீ ராஜேந்திரபிரசாதைப் போல்கூட, தன்னேடு சிலரை இணைத்துக்கொள்ள இவரால் முடியவில்லை. பிறர் புண்படும்படி யோசிக்காமல் ஏதாவது சொல்லிவிடுகிருர், அல்லது செய்துவிடுகிருர். அவருடைய சுபாவத்தைத் தெரிந்தவர்கள் அவரை உணர்ந்துகொள்கிருர்கள்; மனம் புண்படுவதில்லை. ஆனால் எல்லோரும் அப்படி இருக்கமாட்டார்கள். தன்னுடைய குறைபாடுகள் அவருக்கும் தெரியும். ஆனால் தன்னையும் மீறி நிற்கும் தன் அந்தரங்க சுபாவத்தை அவரால் வெல்ல முடியவில்லை. தன்னைத் திருத்தப் பலகாலும் விரும்புகிருர். வெற்றி பெறுகிருரில்லை. ஒரு சமயம் அவருடைய நடத்தையை மிகவும் எதிர்த்தேன். 'நீங்களாவது என்னை அறிந்திருக்கிறீர்கள். உங்களுக்கேன் கோபம்? என்னைப்போன்ற துரதிருஷ்டசாலியை மன்னித்துவிடுங்கள்' என்று வருத்தத்

தோடு சொன்னார். அதிலிருந்து அவர்மேல் குறை சொல்லுவதற்கு மனம் வருவதில்லை. இதற்கப்புறம் கடுமையாகக் குறை கூறவேண்டிய சந்தர்ப்பமும் வந்ததாக நினைவில்லை. என்பால் அதற்கு இடமில்லாதபடி கவனித்துக்கொள்கிறாரென்று நான் சிலசமயம் நினைத்துக்கொள்வதும் உண்டு.

ஜவாஹர்லால் மிகவும் உண்மையாளர். ஒப்புக்கொண்ட காரியங்களையும் தன் வாக்கையும் நிரம்பக் கவனமாக நிறைவேற்றுவார். சின்னக் காரியத்திலோ, பெரிய காரியத்திலோ அவர் நம்மை ஏமாற்றிவிட்டார் என்று எந்த மனிதனும் எப்பொழுதும் நினைக்க முடியாது. உலகத்திலே காண்கிறோமே! அந்தச் சாதாரண 'தந்திரங்களுக்கும் சாமர்த்தியங்களுக்கும் அப்பாற்பட்டவர். எதிலும் யாரிடத்திலும் நேர்மையாக நடந்துகொள்வார். நல்ல மனிதர்கள் என்று நாம் பொதுவாகக் கருதுகிற மனிதர்கள், அற்பமான விஷயங்களில் 'பொய்'யைப் பொய்யாகவும் 'தவறை'த் தவருகவும் நினைக்காதபோது ஜவாஹர்லாலின் நடத்தை எப்பொழுதும் ஒழுங்காகவும், நேர்மையாகவும், அப்பழுக்கற்றதாகவும், பெரும்பாலும் நண்பர்களுக்குச் சங்கடம் தருவதாகவும் கூட இருக்கும். துடுக்காக இருக்கிறாரென்றால் மன்னிக்கக்கூடியவராகவும் இருக்கிறார். பொறுமையோடு தன் ஆத்திரத்தை அடக்கிக்கொள்கிறார். எவ்வளவோ விஷய அறிவோடு சகிப்பும் உடையவராக இருக்கிறார். அவர் மிகச் சிறந்த தலைவராக இல்லாதிருக்கலாம். ஆனால் அவர் ஒரு பிரமாதமான, திறமையான, காரியக்காரர். மதச்சார்பான மனிதராக அவர் இல்லாதிருக்கலாம். ஆனால் உண்மையில் கடமையில் பற்றுள்ளவர். சமஸ்கிருதத்தில் கடமையையும் மதத்தையும் ஒரு சொல்லே குறிக்கிறது. அவர் ஒரு மகாத்மாவாக இல்லாதிருக்கலாம். ஆனால் பெரிய மனிதன் என்ற வார்த்தைக்குள்ள உண்மையான அர்த்தத்தின்படி அவர் ஒரு பெரிய மனிதர். அவருடைய நட்புக்கும் நம்பிக்கைக்கும் உரியவர்கள் அவர்மீது நிறைந்த பிரியமும் மிகுந்த

வியப்பும் கொண்டிருப்பார்கள். அவருடன் நெருங்கிப் பழகி யவர்கள் 'நாம் உண்மையாகக் கொடுத்துவைத்தவர்கள் தாம்' என்று கருதிக்கொள்வார்கள். இங்கிலாந்தையும் ஆங் கிலப் பண்பையும் ஜவாஹர் விரும்புகிறார். அவரை இன்று ஜெயிலில் வைத்திருக்கிறார்களென்றால், ஆங்கிலேயர் தங்க ளுடைய பெரிய நண்பனைத்தான் அடைத்துவைத்திருக் கிறார்கள். இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் இடையில் நல்லெண்ணத்தை ஏற்படுத்தக்கூடிய சிறந்த சாதனத்தை இழக்கிறார்கள். இப்பொழுதுள்ள சர்வ தேசீயச் சிக்க லான நிலைமையில் ஆங்கிலேயர் தங்களுடைய அறிவற்ற செய்கையால் மனிதவர்க்கத்துக்கே பெரிய தீங்கைச் செய் கிறார்கள்.

# பற்றற்ற நேரு

பாரதி சாராபாய்

வாழ்வு என்ற ஓடையில் நாம் இருக்கிறோம். நாம் நகர்ந்து கொண்டிருக்கிறோம்; நாம் நகரவேண்டி யிருக்கின்றது; இந்த வாழ்வாகிய ஓடத்தில் நாம் எங்காவது போய் ஓரிடத்தில் நின்றுவிடலாமா என்றால் அதற்கிடம் இல்லை. ஆனால் இந்த ஓடைகளில் ஆங்காங்கே என்ன மாயமாகவோ மண் திட்டுக்கள் தோன்றுகின்றன; பார்வைக்குச் சிறு சிறு தீவுகளாக வந்து சேருகின்றன.

வாழ்வாகிய ஓடை பாயும்போது இடையிடையே தடைப்பட்டு நிற்பதை நாம் யாவரும் அறிந்திருக்கின்றோம். ஒரு மலைப்பாதையின்மீது செல்லும்பொழுது ஆங்காங்கே எப்படி நேருகிறது என்பதை அறிந்திருக்கிறோம். போய்க் கொண்டே இருக்கிறோம்; பாதை ஒருபக்கம் திரும்புகிறது; அங்கு வந்துவிட்டோம்; இதோ திரும்புகிறோம், திரும்பவும் அங்கு ஏதோ ஒன்று இருக்கின்றது. சில சமயங்களில் நாம் அதை நெருங்கிச் செல்லும்போது அது நம்மை நெருங்கி வருகிறது. அது என்ன பொருள் என்று நாம் வரையறுத்துக் கூறுகிறோம் இல்லை; அப்படிச் சொல்லவும் வேண்டுவதில்லை. மண்ணுலகம் மலர்ந்திருக்கிறது என்பதற்கு அடையாளமாக ஏதோ ஒரு மலர் அல்லது எத்தனையோ பழங்களில் யாரும் கவனிக்காத ஒரு பழம் தென்படுகின்றது. மரத்தின் கிளைகளில் ஆங்காங்கே வெண்மை

யான மலர்கள் கொத்துக் கொத்தாகப் பூத்துக் குலுங்க லாம். மலைப் பாம்புகள் பின்னிக் கிடப்பதுபோல் முள் இதழ்கள் பின்னிச் சுருண்டு கிடக்கலாம். நாம் நிற்கிறோம், அல்லது நிற்காமல் செல்கிறோம். ஆனால் நமக்குள்ளே ஏதோ ஒன்று அல்லது எல்லாமும் நின்றுவிடுகின்றன. இதற்குள் நாம் அதைத் தாண்டிச் சென்று விடுகிறோம்.

இந்தச் சம்பவங்கள், இவ்வற்ப விஷயங்கள், காலத்தின் ஓட்டத்தில் இல்லை. கால ஓட்டத்திலிருந்து நாம் இவைகளைப் பிரித்து அப்பால் எடுக்கிறோம். நாம் இடங் கொடுத்தால் இவைகளும் நம்மைக் காலப்போக்கிலிருந்து பிரித்து எடுத்து நமக்கு மன உயர்வு அளிக்கின்றன. இச் சம்பவங்கள் காலங்கடந்த பொருளிலிருந்து ஒளிபெற்று வந்துள்ளன. அவை நம்மை முன்னுக்கும் பின்னுக்கும் தளைப்படுத்துவதில்லை. அகங்காரச் சுழலும் அங்கு இல்லை. அப் பொருள்களைக் கண்டதும் அவைகளால் நமக்கு என்ன உபயோகம் என்று லாபநஷ்டக் கணக்குப் பார்க்கும் புத்தியும் ஏற்படுவதில்லை. நாம் ஏற்கனவே தாங்கமுடியாதபடி பந்தப்பட்டிருப்பதால் அங்கு நிற்கிறோம். எங்கிருந்து வந்தாய், எங்கே போகின்றாய் என்று கேள்விகள் ஒன்றையும் கேட்காமலே அங்கு நின்றோம். ஏன் என்றும் கேட்பதில்லை. போய்க்கொண்டே இருக்கிறோம். என்ன நடந்தது என்று கேட்டால் ஒன்றுமில்லையே என்று சொல்லுகின்றோம். ஒன்றும் நிகழ வில்லைதான்.

நமது வாழ்க்கை என்னும் இந்த ஓடம் ஓடிக்கொண்டிருக்கும்பொழுது ஒருவிதமான அசைவோ குலுக்கலோ இல்லாமல் நம்மை இவ்வாறு நிறுத்தி வைக்கின்ற கள்ளமற்ற இந்தத் தன்மை நம் எல்லோருக்கும் தெரிந்துதான் இருக்கிறது. நம்மிடம் விகாரம் ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. நமது தூய்மையைக் கெடுக்கவில்லை. அழிவுக்கு அடிகோலவில்லை. ஆனால் அது பின் என்னவிதமான மாறுதலை உண்டாக்கி யிருக்கின்றது. நிமிஷத்துக்கு நிமிஷம்,

நாளுக்கு நாள், வருஷத்துக்கு வருஷம், ஓய்வொழிவில்லாமல் செக்குமாடுகள் போலச் சுற்றிச் சுற்றி வரும் வாழ்வுப் பிணைப்பில் இருந்து நம்மை நழுவிச் செல்ல வைக்கும் ஆழ்ந்த தூக்கம் போன்ற அற்புத உணர்ச்சியை உண்டாக்குகிறது.

மலர்களையும் கனிகளையும் பார்க்கும்போது நமக்கு ஏற்படும் இத்தகைய உணர்ச்சி, நம்மைச் சுற்றிலும் வாழும் ஆடவர் பெண்டிரைப் பார்ப்பதால் ஏற்படுமா? மனிதவர்க்கத்தின் உயர்ந்த மேம்பாடு உடையவர்களுக்கே இவ்வுணர்ச்சி ஏற்படும். அவர்கள் வாழ்க்கையைப்பற்றிக் கவலைகொள்ளாதவர்கள். ஆகவே அவர்கள் வாழ்க்கையின் இயற்கையான கலைஞர். ஜவாஹர்லால் நேரு அத்தகையவர்களில் ஒருவர்.

பாதையோரத்தில் மலர்ந்திருக்கின்ற மலரின் மீதோ அல்லது ஒரு கலைச்செல்வத்தின் மீதோ அல்லது தன்னந்தனிமைமீதோ ஏற்படும் அந்த உணர்ச்சியை, பற்றற்ற தன்மையை, மனிதவர்க்கத்தின்மீது கொள்ளுவது மிகவும் உயர்ந்த குணமாகும். அவ்வுணர்ச்சி, கலைஞனோ அல்லது விஞ்ஞானியோ காட்டும் அக்கறையைப் போன்றதன்று. யுத்தகளத்தில் மனிதர்களைக் காயாக வைத்துச் சொக்கட்டான் ஆடும் தளபதியின் சிரத்தையைப் போன்றதும் அல்ல. சமுதாயத்தை மேம்படுத்துவதற்காகத் திட்டமிட்டுக்கொண்டிருக்கின்ற தேசத் தலைவர்களின் சிரத்தையைப் போன்றதும் அன்று. அத்தகைய தேசத்தலைவன், தனி மனிதனை, மனிதனுகக் கருதாமல் அவனைச் சமுதாய அங்கமாகவே கருதுவான். சரி, இத்தனையும் இல்லாவிட்டால் பற்றற்றவனுடைய உணர்ச்சி எவ்வகைப்பட்டது. இதுவே பரிசுத்தமான அக்கறை.

இது தான் ஜவாஹர். தேசத்தலைவராக இருக்கின்ற ஜவாஹரை யாவரும் நன்கறிவர். அவரும் தேசத்தலைவராக இருப்பதுபற்றித் தான் பெருமையடைகிறார். உன்னதமான லட்சியங்களுக்காகப் பொதுமக்களை நடத்திக் கொண்டு

போவதில் பெருமிதம் கொள்கிருர். தனிநபருக்கு உண்மை யான மதிப்புக் கொடுக்கின்ற இவரைப் போன்ற தலைவர் கள் இன்னும் சிலர் இருப்பார்களாளுல் நமது நாட்டு மக் களின் கூட்டுவாழ்க்கை வேறுவிதமாக அமைந்திருக்கும்.

அதனுல் தான் ஜன சமுதாயம் முழுமைக்கும் பாடு படுகின்ற ஜவாஹர், மானிட ஜாதி முழுமையையும் தன் கருத்தில் வைத்துக்கொண்டிருக்கும் மனிதர், தனிநபர் சித்தாந்தியான ஜவாஹர் ஆக ஒன்றி விளங்குகிருர். நுட்ப மும் மென்மையும் வாய்ந்த மனிதருக்கு இது இயல்பான குணமாகும். பொதுக்காரியங்களில் மனமும் உடலும் ஆழ்ந்திராத சமயத்தில் நாம் அவரைத் திடீரென்று சந்திக்க வேண்டும். அப்பொழுது திடுக்குறுபவர் அவரல்ல ; நாமே. பொதுவாழ்வுக்கும் பொருத்தம் உள்ளவராக இருக்கின்ருர்; சொந்த வாழ்விலும் பொருந்தியிருக்கின்ருர்; அவ்விரு வாழ்க் கைகளையும் பிரிக்கின்ற மெல்லிய அடுக்குகளிலும் பொருந்தி யிருக்கின்ருர். இதை அப்போது நாம் காண முடிகிறது.

இப்பொழுது ஜவாஹர்லால் ஒரு ரயில்வே ஸ்டேஷ னில் இருக்கின்ருர். ஊர்வலம் தாறுமாருக நின்று விடுகிறது. தொண்டர்களுக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. கூட்டம் இடித்துத்தள்ளிக் கொண்டிருக்கின்றது. வரவேற் புக்காக எழுப்பப்பட்டவரிசையான 'ஆர்ச்'சுகளுக்கிடையே திடீரென்று ஊர்வலங்கள் நின்றுவிடக் கூடும். அதற்குப் பின் கூட்டங்கள், பேச்சுக்கள், பேட்டிகள், விவாதங்கள், தீர்மானங்கள், மாலைகள் ஆகியவை காத்துக்கொண்டிருக்க லாம்; அல்லது போலீஸ் தடியடிகள்எதிர்நோக்கிக் காத்துக் கொண்டிருக்கக் கூடும். அப்படித் திடீரென்று எல்லாம் நின்றுவிடும் பொழுது எதிரே என்ன இருக்கின்றது, இனி மேல் என்ன நடக்கப்போகின்றது என்பதைஜவாஹர்லால் உணர்ந்துவிடுவார். அவருக்கு மிக அருகில் உயிர்த்துடிப் புள்ள மனிதர்கள் சூழ்ந்து அவரை வளைத்துக் கொண் டிருக்கின்ருர்கள். கூட்டத்திலிருந்து அவரைப் பிரித்து

அவர் மீதே பார்வையைச் செலுத்திக் கொண்டிருக்கின்ருர்கள். அருகில் இருப்பவர் இளம் ஊழியர்களாக இருக்கலாம்; ஆர்வமுள்ள மாணவனுக இருக்கலாம்; அல்லது பழக்கமுள்ள முகமாக இருக்கலாம். ஓர் அடி தள்ளி அப்பால் இருந்தாலும் ஜனங்களோடு ஜவாஹரும் காத்துக் கொண்டிருக்கிருர். பற்றற்ற அன்போடு தன்னைச் சுற்றிலும் பார்க்கிருர். அவ்வன்பு அவருடைய கண்களில் தென்படுகிறது; ஜனத்திரளின் மீதும் வீசுகிறது. "ஹலோ!" என்று அவருடைய கண்கள் சொல்வது போல இருக்கின்றது. "நீங்கள் யார்?" என்று அவைகள் கேட்பது போல் தோன்றுகிறது. அந்த நிமிஷத்தையும் அப்போதையச் சூழ்நிலையையும் நோக்கி எழுந்த கேள்விகள் அல்ல அவை. மேகம் கவிந்த வானத்திலிருந்து தோன்றும் மின்ஞெளி போல, எத்தனையோ எண்ணங்களில் ஈடுபட்டிருக்கும் அவர் உள்ளத்திலிருந்து, காலவரையற்ற பழக்கமுள்ள முகங்களை நினைவு கூரும் ஒளிக்கதிர்கள் வீசுகின்றன.

அதோ அந்த முகங்களைப் பாருங்கள்! கிடைத்தற்கரிய வரத்தை அவர்கள் பெற்று விட்டார்கள்.

குருதேவ் ரவீந்திர நாதர் ஒரு சமயம் ஒரு நங்கையைப் பார்த்து, 'நான் மாத்திரம் இளமையோடிருந்தால் மாப்பிள்ளை தேடவேண்டிய கஷ்டமே உனக்கு இருக்காது' என்று கேலி பண்ணிச் சிரித்தார். சிருஷ்டியின்மீது கள்ளமின்றி அன்பு செலுத்தவும், தனது வேலையை ஒதுக்கி வைத்துவிட்டு, உலகத்தைக் கணந்தோறும் புதிது புதிதாகக் காணுகின்ற குழந்தை போல மாறவும், அவர் திறமை பெற்றிருந்தார். சமூக அந்தஸ்திலுள்ள உயர்வு தாழ்வுகளால் மனக் கோட்டம் சிறிதும் ஏற்படாமல் எல்லா ஆண் பெண்களிடத்திலும் ஒன்றுபோல அன்பு செலுத்துகின்ற சரோஜினி நாயுடுவைக் காணும்போது யாவருக்கும் வியப்பு ஏற்படுகிறது. சாதாரணமாகக் காணப்படும் நேசப் பான்மை அல்ல அது. அதுதான் உண்மையான அன்பு.

நாம் மனிதர்களாக இருக்கின்ற அந்த அளவு ஒன்றுக்கே நாம் மதிக்கப்படுகிறோமே அன்றி, பணம், பட்டம், பதவிக்காக அல்ல என்ற ஆனந்தமான உணர்ச்சியை நாம் அடையும் நிலையை ஜவாஹர்லால் அளிக்கிறார். தன்னை அரசியல்வாதி என்று அவர் சொல்லிக் கொள்ளும்போதும், ஒரு அரசியல்வாதி என்ற முறையில் நம்மை அவர் பயன்படுத்திக் கொள்ளப் பொருட்படுத்துவதில்லை. ஆசைப்பட்டு நாம் விரும்பினாலும், அவரால் நம்மை உபயோகப் படுத்திக் கொள்வது எளிதாக இருந்தாலும், அவர் அவ்வாறு செய்வதில்லை. தனி மனிதன் மீது அப்பேர்ப்பட்ட உயர்ந்த மேன்மையான உறவை அவர் இதயம் கொண்டிருக்கின்றது. தாராள மனப்பான்மை பரவியுள்ள இக்காலத்தில் தோன்றியதால் அவர் மனம் ஒருகால் அவ்வாறிருக்கக் கூடும். மனிதர்களை மந்தையாகப் பாவிக்கும் மனப்போக்கு படை எடுத்து வந்தபோதும் அவருடைய மேன்மையான சுபாவம் ஆழமாக வேரூன்றியிருக்கின்றது.

அவருடைய குணம் மனிதத் தொடர்பின் உயர்வைக் காட்டுகிறது. மனித இயற்கையில் அவர் கொண்டுள்ள நம்பிக்கைக்குக் காரணத்தைக் காட்டுகிறது. வரும்போதும் போகும் போதும் வாழ்த்துக்கூறி ஆதர்ச நிலைக்கு உயர்த்துகிறது. மனிதர்களை லட்சியங்களாக மதிக்க வேண்டுமே தவிர,சாதனங்களாக உபயோகிக்கக் கூடாதென்று கேன்ட் கூறிய உன்னத அற வொழுக்கம் வாழ்க்கையில் அனுஷ்டிக்கப்படுகிறது.

இதை யார் அறிந்திருக்கின்றார்களோ, யார் இதை வாழ்க்கையில் கடைப்பிடித்து வாழ்கிறார்களோ, அவர்களே வாழ்க்கையில் பற்றற்றவர்கள். ஜவாஹர்லால் அவ்விதம் பற்றற்றவர்களில் ஒருவர்.

அது எவ்வாறு என்பதை எளிதில் உணரலாம். ஜவாஹர் ஆத்மிகம் பெற்றவர்; ஏறுபோல் பீடு நடை உள்ளவர்; துள்ளி விளையாடும் மனம் உடையவர்; இளமையின் வீறு

கொண்டவர்; மலையின் உயர்ந்த சிகரத்துக்கும் விரைந்து செல்லும்படியான இறுமாப்பு உடையவர்; அவர் சிரிக்கின்ற சமயங்களும் உண்டு. பொறுமையிழக்கும் சமயங்களும், தொந்தரவுப்படும் நேரங்களும், மௌனமாக இருக்கும் சமயங்களும் உண்டு. மேல் நாட்டோடு உறவு கொண்டிருக்கின்றார். விஞ்ஞானரீதியில் ஆராய்ச்சி செய்வது அவருக்குத் தண்ணீர் பட்டபாடு. பழங்காலக் கருத்துக்களின் மீது அவருக்குச் சிறிதும் நம்பிக்கை இல்லை. இப்படித்தான் அவரைப்பற்றி நாம் நினைத்துக்கொண்டிருக்கின்றோம். 'நாம் தனிமையாகத் தானே இருக்கிறோம்' என்று அவர் நினைத்துக் கொண்டிருக்கும் பொழுது யாரேனும் வந்து விடுகிறார்கள். அப்பொழுது பிராமண ஜவாஹர்லால் கால்களை மடக்கிச் சப்பணம்கூட்டி உட்கார்ந்து கொண்டு, நிமிர்ந்து, அசையாமல், யோகத்தில் இருப்பது போல் அமர்ந்திருக்கிறார். குளிரான ஒரு நாளில் கல் பாவியுள்ள தனது அறையில் அந்த நிலையில் தன்னை மறந்து அவர் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தால் ஒரு கௌரங்க சைதன்யரைப் போலவே அவர் காட்சியளிக்கிறார்.

> " தீர்க்கதரிசனம் வாய்ந்த ஆன்மா
> இப்பரந்த உலகத்தின் வருங்காலத்தைக்
> கனவு கண்டுகொண் டிருக்கிறது."

# நேருவும் ஹெரால்டும்

கே. ராமராவ்

(நேஷனல் ஹெரால்டு ஆசிரியர்)

விதியை நிர்ணயித்துப் பிரசித்திபெற்ற அந்த நாளான 1942 ஆகஸ்டு 8-ந் தேதி பிர்லா மாளிகையின் தாழ்வாரத்தில், இந்திய தேசியக் காங்கிரஸ் காரியக்கமிட்டியின் முக்கிய விவாதங்களைப்பற்றிய செய்திகளுக்காக நான் சுற்றியலைந்துகொண்டிருந்தபொழுது, கஸ்தூரிபா காந்தியிடம் என்னை அறிமுகம் செய்துவைக்கவேண்டுமென்ற யோசனை என் நண்பர் ஒருவர் மனத்தில் புகுந்தது. நல்ல மனிதர். அந்தமாதிரி அவர் செய்தது நல்லதாயிற்று. ஏனென்றால் அடுத்த சில மணி நேரத்தில் காந்தி கோஷ்டியோடு கஸ்தூரிபாவும் கைது செய்யப்பட்டு ரகசியமாக ஆகாகான் அரண்மனைக்குக் கொண்டு செல்லப்பட்டார். அதிலிருந்து அவர் திரும்பி வரவேயில்லை.

'இவர் தான் நேஷனல் ஹெரால்டு பத்திரிகையின் ஆசிரியர்' என்றார் என் நண்பர்.

'என்ன?' என்று கஸ்தூரிபா கேட்டார்.

தான் சொன்னதை அவர் புரிந்துகொள்ளவில்லை என்பதை என் நண்பர் தெரிந்துகொண்டு, 'நேஷனல் ஹெரால்டு, ஜவாஹர்லால் நேருவின் பத்திரிகை' என்றார் மேலும்.

'ஓ, ஜவாஹர்லால் நேருவின் பத்திரிகையைச் சொல்கிருயா? அதைப்பற்றி எல்லோரும் அவ்வளவு நன்ருகப் பேசிக்கொள்கிருர்களே.'

நான் இந்தக் கதையை ஒரு உத்தேசத்தோடுதான் சொல்கிறேன். சில ஸ்தாபனங்களுக்கு உண்மையான மதிப்பு என்னவாக இருந்தாலும் அதனேடு தொடர்புள்ளவர்களால் அவை புகழ்பெறுவதுடன் அவர்களுடைய பெயரைக்கொண்டே அந்த ஸ்தாபனங்கள் விளங்குகின்றன. 1938 செப்டம்பரிலிருந்து 1942 ஆகஸ்டுவரை நான்கு ஆண்டுகட்குள் லட்சுமணபுரி 'நேஷனல் ஹெரால்டு' அபரிமிதமான வெற்றியடைந்தது; இந்திய தேசியக் காங்கிரஸின் அதிகாரம்பெற்ற பத்திரிகையாகவும், இந்திய தேசியத்தைத் தெளிவாகவும் பயப்படாமலும் எடுத்துக் கூறும் உண்மையான வக்கீலாகவும், சர்வதேசியத்திலுள்ள நன்மையை நல்லவிதமாகவும் நம்பிக்கைக்குகந்த முறையிலும் எடுத்துக்கூறும் பத்திரிகையாகவும் இருந்து வந்தது. ஜவாஹர்லால் அதன் ஞானசிரியர்; எஜமானர்; அது செல்லவேண்டிய பாதை, முறை, ஆரோக்கிய நிலை, அமைப்பு, யாவும் வகுத்துக்கொடுத்தவர். இளம் பத்திரிகையாக இருந்தும் ஹெரால்டு, காங்கிரசோடும் நேருவோடும் கொண்ட தொடர்பினுல் ஒப்பற்ற உயர்நிலையிலிருந்தது. இவ்வாருக அதற்குப் பின்பலமாக ஒரு உயர் ஸ்தாபனம் இருந்தது; உயர் மனிதரும் இருந்தார். இந்திய சுதந்தரத்துக்காக ஆர்வத்தோடு போராடுகின்ற பத்திரிகைகளாகவும், சர்வதேசிய நியாயத்தை எடுத்துக்கூறக் கூடிய பத்திரிகைகளாகவும், வெளிநாட்டுப் பத்திரிகையாளராலும், அரசியல் மேதாவிகளாலும், விரும்பிப் படிக்கப்பட்டனவாகவும் அமைந்த இந்தியப் பத்திரிகைகள் சிலவற்றில் ஹெரால்டும் ஒன்று என வெளிநாடுகள் கருதுவதாக நான் கேள்விப்பட்டேன். ஜவாஹர்லாலின் சொல்லமுதம் நிறைந்திருந்ததால் அவர்கள் இதை

மேலும் மதித்தார்கள். அவர் போதித்த குறிக்கோள் களின்படி வாழ்வதே—அவர் வகுத்த உயர்நிலையை யடைவதற்கு உழைப்பதே—எங்கள் ஆசையாகும். ஆகவே அதன் சொந்தப்பெயரைக் குறிக்காமல் ஜவாஹர்லாலின் பத்திரிகை என்று கஸ்தூரிபா சொன்னது சரி என்பதை நீங்களே அறிந்துகொள்ளலாம். கஸ்தூரிபா சொன்னதும் லக்ஷக்கணக்கான மக்களின் மனத்திலுள்ளதையேதான்.

ஹெரால்டு பத்திரிகையோடு ஜவாஹர்லால் ஆரம்பத்தில் கொண்ட தொடர்பு பரிட்சார்த்தமானது; அரைமனத்தோடு கூடியது. அனேக வருஷங்களுக்கு முன் அலஹாபாத் இன்டிபென்டென்டு பத்திரிகையோடு அவர் சம்பந்தப்பட்டிருந்தார். அந்தப் பத்திரிகைக்கு அவருடைய தகப்பனுர் ஏராளமாகச் செலவழித்திருந்தார். ஸ்தாபகர்களுடைய கனவை அரசியலில் பூர்த்தி செய்தது அப்பத்திரிகை. ஆனல் பொருளாதாரவகையில் பெருந்தோல்வி யடைந்தது. ஆகவே புகழ்வாய்ந்த சொற்ப ஆயுளோடு அது நின்று விட்டது. அந்தப் பத்திரிகையில் ஜவாஹர் அடைந்த அனுபவமும், அது நடந்த விதமும், அதை நடத்திய மனிதர்களைப்பற்றிய அனுபவமும் அவருக்குப் போதும் போதுமென்ருகிவிட்டது. இனிமேல் பத்திரிகை நிர்வாகத்திலே மாட்டிக்கொள்வதில்லையென்று அவர் கடும் விரதம் எடுத்துக்கொண்டார் என்றும் தெரிகிறது.

நாம் விரதம் எடுத்துக்கொள்வதெல்லாம், சிறிது காலத்திலோ அல்லது கொஞ்சம் பிந்தியோ அதைக் கைவிடுவதாகத்தான் முடிகிறது. இந்தப் பொது அனுபவ விதியிலிருந்து ஜவாஹர்லால் மாத்திரம் விலக்காக இருக்க முடியாது. 1937-ல் காங்கிரஸ் கட்சி இந்தியாவில் ஏழு மாகாணங்களில் பதவியேற்றது. அவருடைய ஐக்கிய மாகாணத்தில், தன்னுடைய குணப்பொலிவினுலும், எதிர்ப்பறியாச் சொல்வன்மையினுலும், தேர்தல் வெற்றிக்கு அவர் பெரிதும் உதவினுர். இதற்கு முன் வேறு யாரும்

இவ்வளவு வேகத்தில் அனேநூராகச் சென்று தேர்தல் பிர சாரம் செய்தது இல்லை. நாளொன்றுக்கு நூற்றுக்கணக் கான மைல்கள் வீதம் மாகாண முழுதும் சூருவளிப் பிர யாணம் செய்து, காலை முதல் மாலைவரை ஏராளமான கூட்டங்களில் அருள்பெற்ற தீர்க்கதரிசிபோலத் தேர்தல் முழக்கம் செய்தார். இரண்டு வாரகாலம் இவ்வாறு நடந்தது. ஏறக்குறைய தனது நிபந்தனைகளுக்கு ஏற்ப, மகாத்மா காந்தியின் ஆதரவின்பேரில், வெற்றிவீரனைப் போல் காங்கிரஸ் பதவியேற்றது. ஆயிரக்கணக்கான மக்களைக்கொண்ட ஜனநாயக அரசியலிலே, காங்கிரஸ் கொள்கைகளைத் தெளிவுபடுத்தவும், காங்கிரஸ் அரசாங் கத்தைப் பலப்படுத்தவும் ஆங்கிலத்திலே ஒரு தினசரிப் பத்திரிகையை வைத்துக்கொண்டால் நன்ருக இருக்கு மென்று புலப்பட்டது. ஐக்கிய மாகாணத்தில் ஜவாஹரின் ஆதரவில்லாத காங்கிரஸ் பத்திரிகை நடக்காது; தொழி லுக்கும் நஷ்டம் ஏற்படும். அவரோ இதற்கு முந்திய தனது மோசமான அனுபவத்தை நினைவில் வைத்துக்கொண்டு இதில் சேருவதற்கு ஆசைப்படவில்லை. டைரக்டர் களின் போர்டுக்கு அவரைத் தலைவராகப் போடுவதற்குள் எவ்வளவோ சிபார்சு செய்ய வேண்டியதாயிற்று.

1937 இறுதியில் ஜவாஹர் பத்திரிகைக் கட்டிடத்தைத் திறந்துவைத்து அதன்மீது காங்கிரஸ் கொடியைப் பறக்க விட்டார். 1942 ஆகஸ்டில் சட்டத்தின் கொடுங்கையினுல் வீழ்த்தப்படும்வரை, சம்பவங்கள் நிறைந்த அந்த நான்கு வருஷகாலம் புயலிலும் வெயிலிலும் கம்பீரமாகப் பறந்தது அக்கொடி. கொடியேற்றியபின் ஜவாஹர்லால் தனது ஐரோப்பியப் பிரயாணத்தை மேற்கொண்டார். பிரேகு நகரிலிருந்து தனது முதல் தலையங்கத்தை எழுதினுர். பத் திரிகையும் 1938 செப்டம்பர் 9-ல் வெளிவரத் தொடங் கியது. பத்திரிகையின் அன்ருட அலுவல்களைக் கவனிப் போர்க்கு அந்தக் கட்டுரை சட்டமாகவும் வேதமாகவும்

அமைந்திருந்தது. அவர் அதை எழுதிய சமயம் ஐரோப்பிய அரசியல் நிலைமை மோசமாகவும், வெட்கக்கேடாகவும், பயங்கரமாகவும் இருந்தது. மூனிச் சரணாகதி நெருங்கிக் கொண்டிருந்தது. வெகுசீக்கிரம் ஹிட்லரின் படைகள் செக்கோஸ்லவாகியாவில் நுழைய இருந்தன. நிலைமையானது முற்றி 1939 செப்டம்பர் 5-ந் தேதி நெருக்கடியில் முடிய இருந்தது. ஒரு பக்கம் பாஸிஸ்டுக் கொடுமையினால் ஏற்பட்ட இருளும் இன்னல்; இன்னொரு பக்கம் மெதுவாகத் தேய்ந்துகொண்டுவரும் உலக சமாதானம்; இவைகளுக்கிடையில் உயர்வும் மேன்மையும் பொருந்திய இவருடைய இதய எழுச்சிகள்—இவைகளை அவருடைய கட்டுரை தெளிவாகப் படம் பிடித்துக் காட்டியது. தங்களுடைய சுதந்தர உரிமைக்காகப் போராடவேண்டிய கடமையை நிறைவேற்றவும், சர்வதேச அரங்கத்தில் ஒழுங்குக்கும் நேர்மைக்கும் பாடுபடுகிற சக்திகளோடு ஒன்று சேரவும் அக்கட்டுரை இந்திய மக்களைப் பறைசாற்றி அழைத்தது.

என்ன நேர்ந்தாலும் சுதந்தர தாகம்கொண்ட நம்மவர்களின் அந்தரங்க எண்ணங்களைக் கூறுவதாக இருக்க வேண்டும் அப்பத்திரிகை. கீழேவிழுவதாக இருந்தாலும் கையிலிறுகப் பிடித்த கொடியோடு சாயும் போர்வீரனைப் போலத்தான் விழுவதாக இருக்கவேண்டும். பத்திரிகையை எங்கே புரட்டினாலும் ஜவாஹராகவே இருந்தது. நாங்களோ, பத்திரிகைச் சுதந்தரத்துக்கு எவ்வளவோ தடைகளுள்ள இந்த அடிமை நாட்டில், அதிலும், ஹிட்லரை, ஐரோப்பிய நாகரிகத்தைக் காக்கவந்தவன் என்று ஆளும் வர்க்கத்தினர் நினைக்கத்தொடங்கிய காலத்தில், பத்திரிகையை நடத்துகின்றவர்கள்; பத்திரிகையை நடத்தும் ஒவ்வொரு நாளும் எங்கே திரும்பினாலும் கஷ்டங்களிருப்பதைக் காண்பவர்கள்; ஜவாஹருக்கு எவ்வளவோ தாழ்ந்தவர்கள்; அரசியலிலும் உணர்ச்சிவேகத்திலும் குறைபாடுள்ளவர்கள்; பத்திரிகையின் லட்சியத்தை நிறைவேற்றுவதில் எங்க

ளுடைய கஷ்டங்களையும் அவர் சிறிது பொருட்படுத்தினால் தேவலையே என்றுதான் நினைத்தோம்.

1938 நவம்பர் இறுதியில் ஜவாஹர் ஐரோப்பாவி லிருந்து கங்கோ, கனலோவென நெருப்பைக் கக்கிக் கொண்டு திரும்பினார். அவர் ஐரோப்பாவிலிருக்கையில், பத்திரிகை பெருத்த ஏமாற்றமாகிவிட்ட தென்றும், பத்திரி கையின் முன்னேற்றத்தைப்பற்றி இந்தியாவிலிருந்து தனக்கு வந்த செய்திகள் தம்மை மனங்குன்றச் செய்தன வென்றும், தான் திரும்பியதும் ஒன்று பத்திரிகை நின்று விடவேண்டும் அல்லது தான் அதைவிட்டு விலகவேண்டு மென்றும் எழுதிக்கொண்டிருந்தார். தன் விருப்பத்துக்கு மாறாக இந்த முயற்சியில் சேருவதற்கு ஒப்புக்கொண்ட அந்நாளை நொந்துகொண்டார். ஆனால் இந்தியா திரும்பி யதும் நிலைமையை நேரில் உணர்ந்துகொண்டார். அவர் எப்போதும் தோல்விமனப்பான்மை இல்லாதவர். ஒரு வருஷத்திற்குள் நிலைமையைச் சீர்திருத்தினார். ஒவ்வொரு பத்திரிகையையும் போல நாங்களும் ஆரம்ப நஷ்டத்துக்குத் தயாராக இருந்தோம். கப்பல் சில சமயம் தரைதட்டினாலும் அடுத்த அலை வந்து கப்பலை மிதக்கவிடும் என்று எங்களுக் குத் தெரியும். ஆனால் ஜவாஹர்லாலாக இருந்தாலும் ஒரு பெரிய ரோட்டரி இயந்திரத்தை உடனே சிருஷ்டித்துவிட முடியாதே. ஆகவே நாங்கள் பழைய இயந்திரத்தையே ஒக் கிட்டும், புதுப்பித்தும் வேலை பார்த்து வந்தோம். கடைசி யாக ஒரு நாள், (ஹிட்லரின் யுத்தப் பிரகடனத்துக்குமுன்) ஜர்மனியிலிருந்து பெரிய ஆல்பெர்ட் இயந்திரம் வந்தது. புதிய ரோட்டரி அற்புதமாக இருந்தது. நல்ல அச்சு என்றால் பத்திரிகை அதிகம் பரவும்; விளம்பரம் அதிகம் கிடைக்கும்; பொருள் நிலை நன்றாகும்; பத்திரிகை மேலும் திடம்பெறும்.

இதனால் எங்களுடைய பணக்கஷ்டங்கள் உடனே தீர்ந்து விட்டதென்பதில்லை. அவை மெதுவாக மறைந்தன.

முதல் மூன்று வருஷங்களில், டைரக்டர்கள் கூட்டம் என்றால் மனத்துக்குச் சங்கடமாக இருக்கும். நஷ்ட தரிசனம் எப்பொழுதுமே சந்தோஷமளிக்காத விஷயம். "பத்திரிகையை நிறுத்தாமல் தொடர்ந்து நடத்த, ஆனந்த பவனத்தை விற்பதாயினும் சம்மதம்" என்பார் ஜவாஹர்லால். அவ்வளவு தூரம் போகாமலே நாங்கள் சமாளித்தோம். அவர் எங்களுடன் இருந்தார் என்பதிலேயே திருப்தி. விளம்பர சம்பந்தமாக என்னைவிடாமல் கேள்வி கேட்டு வந்த ஒருவருக்கு (அவர் இந்தியரில்லை) நான் அளித்த சூடான பதில் சரியென்பதை நேருவின் ஆதரவு நிரூபித்தது. தொழில் சம்பந்தமாக நான் மேலே குறிப்பிட்டவரைப் பார்க்கப் போயிருந்தபோது, தான் ஆதரவளிக்க இஷ்டப்படுவதாகவும் ஆனால் அதற்கு முன்பாக எங்களுடைய மூலதனம் எவ்வளவென்பதையும் பாங்கிக் கணக்கையும் சரியாக அறிந்துகொள்ள வேண்டுமென்றும் கூறினர். தொழிலை விருத்தி செய்ய வேண்டுமென்ற விருப்பத்தோடு காங்கிரஸ் பிரசாரமும் செய்ய விரும்பிய நான், 'எங்களுடைய மூலதனம் ஜவாஹர்லால் நேரு; நாங்கள் சந்திக்கும் முதல் ஏழையின் சட்டைப்பையே எங்களது பாங்கி' என்றேன்.

அரசியல் காரியங்கள் மும்முரமாயின. நாங்களும் ஒவ்வொரு தினத்தையும் கடைசி நாளாகக் கருதி வந்தோம். அடி எப்பொழுது விழும் என்பது எங்களுக்குத் தெரியாது. மிதவாதமே கூடாது, ஜாக்கிரதையாக இருந்து கொள்வது என்பதே நிச்சயமாய்க் கெட்ட காரியமென்று நினைப்பவர்களுக்கு மத்தியிலகப்பட்ட பத்திரிகையாளர்கள் நாங்கள். அரசியல்வாதியல்லாத எங்களில் சிலருக்கோ எல்லாம் நூதன அனுபவமாக இருந்தது. 'என்ன எழுதினாலும் சரி, பயந்துகொண்டு எழுதாதீர்கள். தேசிய அபிப்பிராயத்தை உருவாக்குவதில் ஹெரால்டுக்குத் தனிப்பொறுப்பு இருக்கிறது. அதன் வேலையே தனி. கோழைத்தனம் தொற்று

நோய் போன்றது. முன்னேறுகிறதுண்டானால் துணிந்து போங்கள். மற்றவர்கள் பின்தொடருவார்கள். நீங்கள் தயங்கினால் மற்றவர்கள் நடுங்குவார்கள். மற்றுஞ் சிலர் அதோகதியாய்விடுவார்கள்' என்று ஜவாஹர் அடிக்கடி எங்களுக்குச் சொல்லுவார். இவ்விதமாக இந்தியப் பத்திரிகைகளின் தலைமை ஸ்தானம் மெல்ல மெல்ல வந்து எங்களைச் சார்ந்துநின்றது. 1942 ஆகஸ்டில் எங்கள் பத்திரிகை நின்றபோது—அரசாங்கத்தின் முதல் அம்பு எங்களுக்குத்தான் என்ற கௌரவம் கிடைத்தபோது—எங்களுக்கிருந்த மன ஆறுதல் கொஞ்சமல்ல.

ஹெரால்டு பத்திரிகைக்கு, ஜவாஹர்லாலும் அவருடைய சகோதர டைரக்டர்களும் வகுத்த பாதை, பத்திரிகையை நடத்தி வந்த எங்களுக்கு அற்புதமாக உதவியது. சர்வதேசியப் பிரசினைகளிலே நாங்கள் சிறிதும் விட்டுக் கொடுக்காமல் பாஸிஸத்தை எதிர்க்கவேண்டும். ஹிட்லர், முசோலினி, பிராங்கோ ஆகிய சதிகாரக் கும்பலின் ஆன்மிகச் சகோதரர்களான இங்கிலாந்து, பிரான்ஸ் ஆகியவர்களின்மீது பொழிந்தது போக மீதமிருக்கும் குண்டுகளை அந்தக் கும்பலின்மீது பொழியவேண்டியது. ரிபப்ளிக் ஸ்பெயின், சுங்கிங் சைனு, ஸ்டாலின் ரஷியா ஆகியவைகளை, நற்கதி நாடிச் செல்லும் சகோதரப் பிரயாணிகளைப்போல விசேஷ அன்புடனும் ஆதரவுடனும் நடத்தவேண்டியது. சண்டை மூண்டு, சண்டையின் நோக்கங்களைப்பற்றிய தகராறும் மூண்டபோது, நாங்கள் காங்கிரஸ் கட்சியைப் பலமாக ஆதரித்தோம். இந்தியாவில் ஜவாஹர்லால் நேருவைப்போல், அவ்வளவு சரமாரியாகப் பேசினவர்கள் யாரும் இல்லை; ஹெரால்டு பத்திரிகையில் அவ்வளவு ஆணித்தரமாக எழுதினவர்களும் இல்லை. வாஸ்தவம். ஜனநாயகங்கள் ஜயிக்க வேண்டுமென்று நாம் விரும்புகிறோம். ஆனால், அவர்கள் எதற்காகச் சண்டைபோடுகிறார்கள் என்பதை அந்த ஜனநாயகங்கள் சொல்லியே தீரவேண்டும். பொது

வாக எத்தகைய புதிய உலகத்தைக் கருதி, இந்தியாவுக்கு என்ன கதி கிடைப்பதற்காக, போரில் இந்தியா கலந்து கொள்ளச் சொல்லப்படுகிறதென்பது தெரிந்தாகவேண்டும். முக்கியமான இந்தியப் பிரசினைகளின் சம்பந்தமாக இப் பத்திரிகை சிறிதும் விட்டுக் கொடுப்பதில்லை. ஆகவே இந்திய சுதந்தர எதிரிகளுடனும், நாட்டிலுள்ள சட்டங் களுடனும், தற்காப்பு பாதுகாப்பு என்பவைகளின் பேரால் பரவி நின்ற யுத்தகாலச் சட்டங்களுடனும், ஒழுங்கு முறை களுடனும், நிதமும் சர்வாயுதபாணியாகச் சரியான யுத்தமே நடத்தவேண்டியதாக இருந்தது.

அச்சமற்ற பத்திரிகை என்ற காரணத்தினால் அதற்கு ஏராளமான சிறந்த எழுத்தாளர்களின் சேவை கிடைத் தது. இப்பத்திரிகையின் போக்கைக் கண்டு இதற்கு எழுதினார்களே தவிர, மற்றப்படி அவர்கள் எழுத முன் வந்திருக்கமாட்டார்கள். சட்டங்களையும் அதன் பயங்கரங் களையும் பொருட்படுத்தாமல் இந்திய ஜனங்களுடைய இதயத்தில் ஊறும் எண்ணங்களை எடுத்துக் கூறுவது எதையும் இப்பத்திரிகை வெளியிடுமென்பது அவர்களுக்குத் தெரியும். நாளடைவில் எழுத்தாளர்களின் தொகை பெரு கிற்று. அவர்கள் அனுப்புவது அனைத்தையும் வெளியிடு வது எப்படி என்ற பிரசினை எழுந்தது. நாங்கள் அவர்களுக் குப் பணம் கொடுக்கவில்லை. அவர்களில் யாரும் பணத்துக் காக எழுதவுமில்லை. தாங்கள் சொல்ல விரும்பியதை இப் பத்திரிகையின் மூலம் சொல்ல முடிந்தால் போதும்; அவர் கள் கூறிய விஷயம் நாட்டின் நாலு மூலையிலும் எதிரொலிக் கப்பட்டால் அதுவே அவர்களுக்குப் போதும்.

அதிகமாக எழுதி வந்தவர் ஜவாஹர்லால் நேரு. சர்வ தேச சம்பந்தமாக அனேக முக்கிய விஷயங்களைப்பற்றி அவர் அடிக்கடி எழுதினார். பெயர் தெரிவிக்காமலே தலையங்கங்கள் எழுதினார். பெயர் இல்லாமல் எழுதினாலும் அவர்தான் எழுதுகிறார் என்பது தெரியாதபடி அவர்

ஒளிந்துகொள்ள முடியாது. அவருடைய எழுத்துக்கள் அவரைக் காட்டிவிடும். அவருடைய எழுத்துக்களை நாங்கள் அதிகமாக வரவேற்றோம். பத்திரிகையின் புகழ் பரவிற்று. எங்களுடைய கட்டுரைகள் சிலவற்றையும் அவருடையதாக நினைத்தார்கள். ஆகையால் எங்களுக்கு வந்த புகழைக் கண்டு எங்களுக்கும் சந்தோஷம். ஜவாஹர் பணங்கருதிப் பத்திரிகைக்கு எழுதமாட்டார். அதை அவர் நியதியாகக் கொண்டிருந்தார். பெயர் வாங்கின ஓர் ஆங்கில இந்தியப் பத்திரிகை வாரமொன்றுக்கு ஒரு பத்தி எழுதுவதற்கு ரூ 150 கொடுப்பதாக முன் வந்தது. எந்த விஷயம் பற்றியும் எப்படி வேண்டுமானாலும் அவர் எழுதலாம். ஆனால் அவர் அதை வந்தனம் தெரிவித்து மறுத்துவிட்டார். தன்னுடைய துணிகரமான எழுத்துக்களால் இந்தியப் பத்திரிகைகளின் தன்மையையும் தரத்தையும் உயர்த்திய பெருமை அவரைச் சேர்ந்தது. அவர் சாதித்த முக்கியமான காரியங்களுள் அதையும் ஒன்றாகவே நாம் கொள்ளவேண்டும். எங்கள் பத்திரிகையில் அவர் கொண்டிருந்த சிரத்தையே அவரை அடிக்கடி எழுதத் தூண்டியதென்பதை நினைக்கும்போது ஹெரால்டைச் சேர்ந்த எங்களுக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது.

இருந்தாலும், வேறொரு விதமான ஜவாஹர்லால் நேருவோடும் நாங்கள் காரியங்கள் நடத்தவேண்டியிருந்தது. இது, அவ்வப்போதைய செய்திகள் சம்பந்தமானது. ஏதோ பெரிய காரியங்கள் நிகழப் போகின்றன என்னும் சமயத்தில், எல்லாச் செய்திகளும் முதலில் தன் பத்திரிகையிலேயே வெளிவர வேண்டுமென்று எந்தப் பத்திரிகையாளனும் ஆசைப்பட்டு முயல்வது இயல்பு. ஹெரால்டுக்கு ஜவாஹர்லாலோடு தொடர்பிருப்பதால் ஒவ்வொரு நாளும் ஹெரால்டுக்கு முக்கியமான செய்திகள் நிறையக் கிடைக்குமென்று நம்பித் தொடங்கினோம். ஆனால் அந்த வகையில் வெகு சீக்கிரம் பெரும் ஏமாற்றம் அடைந்தோம்.

ஜவாஹர்லால் போன்ற கடுமையான எஜமானர்கள்

வகுத்த உயர்நிலையை யடைவதில் எவ்வளவு தூரம் அவர்களைத் திருப்தி செய்தோம், நோக்கங்களை நிறைவேற்றுவதில் எவ்வளவு வெற்றி பெற்றோம் என்பன போன்றவைகளை யெல்லாம் பத்திரிகையின் அன்றாட நிர்வாகத்திலிருந்த நாங்கள் சொல்லிக்கொள்வது சரியல்ல. ஆனால் ஒரு விஷயம் நிச்சயம். பொதுமக்கள் பத்திரிகையை எவ்வாறு வரவேற்றார்கள் என்பதைக் காணும்போது அவருக்குத் திருப்தி ஏற்பட்டது. பத்திரிகைக்கு அடி மேல் அடி விழுந்தது. அரசாங்கம் பத்திரிகையை ஜாமீன் தொகை கட்டச் சொல்லிற்று. கட்டிய தொகையைப் பறிமுதல் செய்து இரண்டாம்முறையும் ஜாமீன் கட்டச்சொல்லிற்று. இதற்குமேல் எவ்வளவோ பயமுறுத்தல்களையும் எச்சரிக்கைகளையும் செய்தது. பத்திரிகை ஆலோசனைக் கமிட்டியின் விவாதம் வேறே. இப்படியெல்லாம் மேலும் மேலும் பத்திரிகையைத் துன்புறுத்தியபோது நாங்கள் பொதுஜன உதவியை நாடினோம். அப்போது கிடைத்த பொதுஜன ஆதரவைக் கண்டு நேரு வியப்படைந்தார். பத்திரிகையை நடத்தி வந்தவர்களிடையே ஒழுங்கும் கட்டுப்பாடும் அமைந்திருந்தன. அவர்கள் சகோதரர்கள்போல ஒத்துழைத்தார்கள். தாக்குதல் அதிகமானபோது பின்னும் கடுமையாக உழைத்து, அதிகமாகத் திருப்பித் தாக்குவதற்கு எழுந்தார்கள். இதைக் கண்டு அவர் திருப்திகொண்டார். 1942-ல் அரசாங்கம் இப்பத்திரிகையை இரண்டாவது தடவை ஜாமீன் தொகை கட்டச் சொன்னபோது, அந்தப் பத்திரிகைக்குப் பொது மக்கள் ஆதரவு அளிக்க வேண்டுமென்று கோரி ஜவாஹர் ஒரு வேண்டுகோள் விடுத்தார். அதில் பொதுவாக, பத்திரிகையைப்பற்றியும், அதை நடத்தி வந்தவர்களைப்பற்றியும் அவர் கூறிய பகுதியை இங்கே கொடுக்கிறேன்:

"ஹெரால்டு என்னோடு தொடர்பு கொண்டிருக்கிறது. அதனால் அது என்னுடைய கருத்துக்களைத் தெரிவிக்கிற

தென்று அனேகர் நினைக்கின்றனர். உண்மையில் நான் அதனோடு பெரும்பாலும் மாறுபடுகிறேன். நான் வாழ்ந்து கொண்டும் உழைத்துக்கொண்டும் வருகிற முறையில் அதனோடு தொடர்பு வைத்துக்கொண்டேயிருக்க முடியாது. ஆனால் பொதுவாகக் கூறுமிடத்து அது காங்கிரஸ் கொள்கையைச் சரியானபடி விளக்கி வந்திருக்கிறது. நமது நாட்டின் கஷ்டமான காலத்தில் நமது மக்களுக்கு அது உதவ முயன்றிருக்கிறது. இந்த நெருக்கடியான நாட்களில் தன்னுடைய பாதையை உருப்படுத்திக்கொண்டு செல்வதும், தன்னுடைய லட்சியத்துக்கு உண்மையாக இருப்பதும், அனுவசியமான ஆபத்துக்களை விலக்குவதும் பத்திரிகை ஆசிரியருக்கு எளிதான காரியங்கள் அல்ல. என்ன நேர்ந்தாலும் அவர் தனது கடமையில் வழுவாத உண்மையுள்ளவராக இருக்கவேண்டும். எமது ஆசிரியரும் அவருடைய சகாக்களும் செய்த வேலையைப் பாராட்டுகிறோம். கம்பெனியின் டைரக்டர்கள் சார்பிலும் என்னுடைய தனிப்பட்ட ஹோதாவிலும் இதை நான் எடுத்துக்கூறுவது அவசியம். அரசியலில் அவர்கள் மேற்கொண்ட போக்கினால் ஹெரால்டுக்குப் புதுத் தொந்தரவு ஏற்பட்டிருக்கிறது. அதன் முழுப் பொறுப்பை நாங்கள் ஏற்றுக்கொள்கிறோம். எங்களோடு கருத்து மாறுபட்டிருந்தாலும், ஐக்கிய மாகாண அரசாங்கத்தின் செயலைக் கண்டித்த இதரப் பத்திரிகையாளர்களுக்கும் எமது வந்தனம்."

அரசாங்கத்தார் எங்களைக் கட்டச் சொன்ன ஜாமீன் தொகை ரூ. 12000. பொதுமக்கள் எங்களுக்கு அளித்தது ரூ. 42000. லட்சுமணபுரி சர்வகலாசாலைப் பேராசிரியர் ஒருவர் கூறியதைப்போலப் பொதுமக்கள் தங்களுடைய 'திக் கக்கி விமானத்துக்கு' ஏராளமாகவும் தாராளமாகவும் கொடுத்தார்கள்.

அந்திமகாலச் சொற்பொழிவுகளில் உண்மையிருக்குமென்று நம்ப முடியாது. இறந்தவர்களைப் புகழும் சொல்

வன்மையினாலே ஏமாற்றம் அடையக்கூடும். ஆனால் அத்தகைய பேச்சுக்கு இடம் ஏற்படவில்லை. 1942 ஆகஸ்டில் ஹெரால்டு தானாக நின்றுவிட்டது. அடுத்தாற்போல அரசாங்கம் கட்டடத்தைக் கைப்பற்றி 18 மாத காலம் தன்னிடம் வைத்திருந்தது. பத்திரிகை காலமாகிவிட்டதென்று யாரும் நினைக்கவில்லை. கொஞ்ச காலத்திலோ அல்லது பிந்தியோ அது மீண்டும் தோன்றும் என்றே எதிர்பார்க்கிறார்கள். வருங்காலம் எப்படி யிருந்தாலும் இந்தப் பத்திரிகை ஒரு வீரனைப்போலத் தனது கடமையைச்செய்து வீரனைப்போலவே போர்க்களத்தில் விழுந்தது. அது போராடியதோ காங்கிரஸின் மூவர்ணக் கொடியின்கீழ். அதை நடத்திச் சென்றவரோ நம் காலத்திய சேனாதிபதிகளில் தலைசிறந்தவர்.

# இளமைப் பருவம்

**மோகன்லால் நேரு**

அலஹாபாத்தில் ஜன நெருக்கமுள்ள பகுதியில் எட்டடி அகலம் உள்ள சந்திலிருந்த ஒரு வீட்டில் ஜவாஹர் பிறந்தார். அந்தச் சந்துத் தொடக்கத்தில் பிசாசு ஓட்ட முண்டு என்று சொல்லிக்கொண்டார்கள். ஜவாஹர் மூன்று வயதுவரை அந்த வீட்டில் வாழ்ந்துவந்தார்.

அவருடைய தகப்பனார் வக்கீல்களுக்குள்ளே இளைய வராக இருந்தும் தன்னுடைய சுதந்தரத் தன்மையினாலும் திறமையினாலும் நல்ல புகழ் பெற்றிருந்தார். ஆரம்பத் திலேயே தொழில் பெருகிற்று. அதிகாரிகளும் இதரரும் மிகுந்த மரியாதை செய்தார்கள்.

ஜவாஹர் பிறந்தபோது அந்தக் குடும்பத்தில் நிறையப் பையன்கள் இருந்தனர். மோதிலாலின் சகோதரிகளின் பிள்ளைகள், அவருடைய காலமான சகோதரருடைய பிள்ளைகள் யாவரும் அங்கேயிருந்தார்கள். தம்பி, தொழி லில் இறங்கும் சமயத்தில்தான் பிரபல வக்கீல்களில் ஒருவ ராக விளங்கிய தமையனார் காலமானார். ஒரே குடும்பம். ஜவாஹர், குடும்பத் தலைவரின் ஒரே பிள்ளையாக இருந்த தால் எல்லோருக்கும் செல்லப் பிள்ளையாக இருந்தார்.

மூன்று வருஷங்களுக்குப் பின் இந்தக் குடும்பம் சிவில் ஸ்டேஷனில் ஒரு வாடகைப் பங்களாவுக்குச் சென்றது. அதைச் சுற்றிலும் ஐரோப்பியர்கள் வசித்து வந்தார்கள். அந்தக் காலத்தில் சிவில் ஸ்டேஷனில் இந்தியர்களே மிக வும் குறைவு. பிறகு, ஆனந்தபவனம் என்ற வீட்டை ஜவா ஹரின் தந்தை வாங்குகிறவரை, அவர்கள் குடும்பம் அங்கே வசித்துவந்தது. ஆனந்தபவனை வாங்குமுன்பே, பெருமை யென்பதற்கு என்ன அர்த்தம் அந்தக் காலத்தில் கொண்

டிருந்தார்களோ அந்த அர்த்தத்தின்படி மோதிலால் பெருமை வாய்ந்திருந்தார். வக்கீல்களுக்குள் முதன்மை யானவரென்று அவரை யாவரும் ஒப்புக்கொண்டார்கள். ஏராளமாகச் சம்பாதித்தார். செலவு செய்தார். தன் குடும்பத்துக்கும் தர்மங்களுக்கும் செலவு செய்தார். அது மாத்திரமில்லை. அலஹாபாத்திலுள்ள ஐரோப்பியர்கள், தாழ்ந்தவர் உயர்ந்தவர் யாவருக்கும் விருந்துகள் நடத்தினர். சிவில், ராணுவ அதிகாரிகளேயும் இதரரையும் வரவழைத்து ஏராளமான செலவில் விருந்துகள் நடத்திவந்தார். இந்தியர் களுக்கும் சாப்பாடுண்டு. வைதிக முறையை விரும்புகிறவர் களுக்கு அந்த முறையிலும் ஏற்பாடுகள் இருந்தன.

சுதந்தரத் தன்மையும் தொழிலில் திறமையும் கூடிய வக்கீலாக இருக்கவேண்டும்; அவசியம் நேர்ந்தபோது தைரியமாக அரசாங்கத்தைக் கண்டிப்பதற்குத் துணிச்சல் வேண்டும். இதுவே அக்காலத்தில் பெருமைக்குக் காரண மாக இருந்தது. இந்த முறைப்படி பார்த்தால் மோதிலால் பெருமை வாய்ந்தவரே. தன் மகனும் தன்னைப்போல் வக்கீ லாகிப் பெருமையடையவேண்டும் என்றும் தனக்குப் பின் தொழிலில் முதன்மையடையவேண்டும் என்றும் அவர் எண்ணினர். இந்த எண்ணம் ஏமாற்றமாக முடிந்தது. இருந் தாலும் தந்தையின் நம்பிக்கைகள் நிறைவேரு என்று சொல்லக் கூடியமாதிரி பையன் ஜவாஹர்லாலிடம் ஏதும் காணப்படவும் இல்லை. ஜவாஹர்லால் அமைதியான பைய ஞக இருந்தார். மகனை ஆடம்பர முள்ளவனுக ஆக்குவதற் குத் தகப்பன் முயன்றும் மகன் எளிமையுள்ளவனுக மாறிக் கொண்டே வந்தான். அப்பொழுதும் அதற்குப்பின் நெடு நாட்கள் வரையும், மோதிலால் பிரிட்டிஷார் குணுதிசயங் களைப் பெரிதும் வியப்பவர். ஆகவே ஒரு ஐரோப்பியரைத் தன் மகனுக்கு ஆசிரியராக அமர்த்தினர். அந்த ஆசிரியர் ஒரு 'தியாசாபிஸ்டு'. பையனுடைய எளிய பழக்கங்களுக்கு ஆசிரியர்தான் காரணமென்று குற்றம் சாட்டப்பட்டார்.

ஆகவே பையனுக்கு வயது பன்னிரண்டு ஆகாவிட்டாலும் அவனை இங்கிலாந்துக்குப் படிக்க அனுப்புவதென்று தீர்மானிக்கப்பட்டது. அதற்குப்பின் குடும்பத்துக்கும் ஜவாஹருக்கும் அநேக வருஷங்கள் தொடர்பில்லாமல் போய்விட்டது. உண்மையில், பின்னால் எப்போதுமே தொடர்பு இல்லாமல் போய்விட்டது எனலாம். அவர் திரும்பி வருவதற்குள் அவருடைய அத்தைப் பிள்ளைகளும் பெரியப்பா பிள்ளைகளும் பெரியவர்களாகித் தனியாகப் போய்விட்டார்கள். பள்ளிக்கூடப் படிப்பு முடிந்து கேம்பரிட்ஜுக்குப் போகுமுன் ஒருதடவை ஜவாஹர் கோடை விடுமுறைக்கு இந்தியாவுக்கு அழைக்கப்பட்டிருந்தார், அவர் நேரே முஸோரிக்கு வந்தார். அவரோடு சந்தோஷமாய்க் காலம் கழிக்க முடிந்த உறவினர் சில வாரகாலம் அங்கே போயிருந்தார்கள். உலகப் பெரியமனிதர்களில் ஒருவராக அவர் திகழப் போகிறாரென்று அப்பொழுது யார்தான் நினைத்திருக்க முடியும்?

அடுத்த தடவையாக அவர் பாரிஸ்டர் படிப்பு முடிந்த பின்னரே இந்தியாவுக்கு வந்தார். மனம் வைத்திருந்தாரானால் அவர் வக்கீல் தொழிலில் புகழும் பொருளும் சம்பாதித்திருக்கலாம். ஆனால் இந்த இளைஞருக்குச் சட்டத் தொழில் பிடிக்கவில்லை. கொஞ்சகாலம் பாரிஸ்டராகத் தொழில் நடத்தினார். ஆனால் வெகு சீக்கிரம் காந்திஜியின் சக்தியால் கவரப்பட்டு அரசியலை மேற்கொண்டார். அரசாங்கத்தினிடமும் அதிகாரிகளினிடமும் குறைகளை நீக்க வேண்டி மனுச் செய்துகொள்ளும் முறைகளைக் கைவிட்டதனால் அக்காலத்திய அரசியல் தீவிர மென்று கருதப்பட்டது. மகனுடைய பாதுகாப்பைக் கருதிய தந்தை தன் மகன் செல்வது சரியான பாதையல்ல என்று காட்ட முயன்றார்; கண்டித்தார். அவர்களுக்கிடையே அடிக்கடி சுடு சொற்கள் கிளம்பின. கடைசியாகத் தந்தையைத் தன் பக்கம் திருப்புவதில் மகன் வெற்றியடைந்தார்.

# பறக்கும் சுதந்தரத் தூதன்

**எஸ். முகம்மது ஜாபர் கான்**

வேகமாகப் பிரயாணம் செய்வதில் நம் இந்திய தேசியக் காங்கிரஸ்த் தலைவர் அபாரத் திறமைசாலியென்பதை நாம் யாவரும் நன்கறிவோம். மெதுவாக ஊர்ந்து செல்லும் இந்நாட்டிலே ஒரு மூலையிலிருந்து இன்னொரு மூலைக்கு வேக மாகப் பறந்து பாய்வதென்பது அசாதாரணமான காரியம். அவருடைய பிரயாணத்தைக் கேட்டால் கதைபோல இருக் கும். வெகு தூரத்தில் காடுகளிலுள்ள ஜனங்கள் அவ ரைப் பார்ப்பதற்காக, அல்லது அவருடைய சொற்கள் ஆகாயத்திலிருந்து (ஒலிபெருக்கியின் உதவியால்) ஒலிப்ப தைக் கேட்பதற்காகக் காத்துக்கொண்டிருப்பார்கள். அவர் இந்திய மக்களின் கற்பனையைக் கிளறித் தூண்டி விட்டார் என்பதில் சந்தேகமே இல்லை; ஆம், அவர் பறந்து சென்று இந்திய சுதந்தரத்தைப் பற்றித் தெரிவிக்கும் தூத னாகிவிட்டார். அருஞ்செயல்களைப்பற்றிக் கேள்விப்படும் இக்காலத்தில், சென்ற பத்து மாதங்களாக அவர் செய்த சுற்றுப் பிரயாணம் நிகரற்ற அருஞ் செயலே. தலைவரது துணிவு, லட்சியத்தின்மீது தளராத விசுவாசம், அசாதா ரணமான உடல்பலம் ஆகியவற்றை அவருடைய அருஞ் செயல் காட்டுகிறதென்றாலும் இந்திய தேசியக் காங்கிர ஸின் செல்வாக்கு எவ்வளவு தூரம் பரவியிருக்கிறதென்ப தையும் தெரிவிக்கிறது; இன்னும் அதன் காரியத் திறமை யையும் நிர்வாக அமைப்பு வலிமையையும் வெளிப்படுத்துவ தோடு இந்தப் பெரிய ஸ்தாபனம் இந்திய மக்களுடைய முழு விசுவாசத்தையும் பெற்றிருக்கிறதென்பதை நன்கு எடுத்துக் காட்டுகிறது.

காங்கிரஸானது இந்திய மக்களின் பிரதிநிதி யல்ல என்று யார் கூற முடியும்? எந்தக் கவர்னரும், வைசிராயும், அரசனும்கூட, ஜவாஹர்லால் சுற்றிப்பார்த்ததுபோல இந்த நாட்டைச்சுற்றிப் பார்க்கமுடியாது. இதுமாத்திரம் நிச்சயம்.

சுமார் பத்து மாத காலம் சுற்றுப் பிரயாணம் செய்தோம். 1937 பிப்ரவரியில் முடிந்தது, இந்தப் பத்து மாதமும் சேர்ந்தவாக்கில் பிரயாணம் நடைபெறவில்லை. கடைசி மூன்று மாதம் எந்த நேரமும் பிரயாணம்தான். கணக்காகப் பிரயாணம் செய்த நாட்கள் 130. மொத்தத் தூரம் சுமாராகவே கணக்கிடப்பட்டது. ஆயினும் சிறிது குறைவாகவே கணக்கிடப்பட்டுள்ளது. 25000 மைல் ரயிலிலே; 22000 மைல் சாலைகளில் (முக்கியமாய் மோட்டாரில்); 16000 மைல் ஆகாயத்தில். வாகனங்களில் எல்லாவகையும் உண்டு: விமானம், ரயில் (இரண்டு தடவைகள் சிறிது தூரத்துக்குத் தனியாக விடப்பட்ட விசேஷ ரயில்; சில சமயங்களில் இரண்டாவது வகுப்பில், ஆனால் மூன்றும் வகுப்புதான் வழக்கமானது), மோட்டார்கார், மோட்டார் லாரி, குதிரை, பைசிக்கிள், கால்நடை, கப்பல், படகு, கானோ படகு என்பன போன்ற பலவகைகளும் உண்டு.

பிரயாணத்தின் பெரும்பகுதி ரயிலிலும் மோட்டாரிலும் நடைபெற்றது. சில சமயம் தொடர்ந்தாற்போல 18 மணி நேரம் காரில் போயிருப்போம். அதற்குள் பெரிதும் சிறிதுமான 12 கூட்டங்களில் பேசியிருப்போம். ஒரு சமயம், பிப்ரவரி 13௳ காலை 7 மணிக்குப் புறப்பட்டு 24 மணி நேரமும் பிரயாணம் செய்து ஒரேயடியாக 420 மைல் தூரம் கடந்தோம். மறுநாட் காலையில் 8 மணிக்குப் புறப்பட்ட பிரயாணம் இரவு 12—30 க்குத்தான் முடிந்தது.

• பம்பாய், பஞ்சாப், சிந்து, டெல்லி, ஐக்கிய மாகாணம், நாகபுரி, மஹாகோசலம், மகாராஷ்டிரம் முதலிய காங்கிரஸ் மாகாணங்களுக்குப் போனோம். கல்கத்தாவுக்குப் போயிருந்தோம். ஆனால் வங்காளத்திலே வேறு இடங்களுக்குச்

செல்லவில்லை. கேரளத்தில், கண்ணனூருக்கு மட்டுமே சென்றோம். குஜராத், வடமேற்கு எல்லை மாகாணம், அஸ்ஸாம், மத்திய இந்தியாவின் சில பாகங்கள், ராஜபுதனம் இவைகளே போகாத பிரதேசங்கள்.

பொதுக் கூட்டங்களிலும் நூற்றுக் கணக்கான சாலையோரங்களிலும், ஒதுக்குப்புற ஸ்டேஷன்களிலுமாக தலைவரைப் பார்க்கவந்த மொத்த ஜனங்களைக் கணக்கிடுவது கஷ்டமான காரியம். ஜனத்திரளை நேரில் பார்த்தவர்கள் ஒருகாலும் மறக்க முடியாதபடி அது நெஞ்சில் பதிந்திருக்கிறது. கிராமங்களிலும் நகரங்களிலும் கூட்டங்களுக்கு வந்திருந்தவர்களின் எண்ணிக்கை பிரமாதம் (50000-மும் அல்லது அதற்கு மேல்). சில பெருங் கூட்டங்களில் லக்ஷம் பேர் கூடியிருப்பார்கள். ஐயாயிரம் அல்லது பதினாயிரம் பேருள்ள கூட்டம் சிறிதென்று கருதப்பட்டது. நாளொன்றுக்குச் சுமார் லட்சம் பேரைப் பார்க்க நேர்ந்தது சகஜம். சில சமயங்களில் 2 லட்சம் பேர் கூடுவார்கள். 1936 டிசம்பரில் பெய்ஸ்பூரில் கூடிய கூட்டத்தைச் சேர்க்காமல் கணக்கிட்டுக் கவனித்தால் நாளொன்றுக்கு லட்சம் பேர் வீதம் 130 லட்சம் மக்கள் தலைவரைப் பார்த்து அவர் பேச்சை நேரில் கேட்டிருக்கக்கூடும். மிகவும் குறைவாக மதிப்பிட்டாலும், ஏற்பாடு செய்யப் பெற்ற கூட்டங்களுக்கு வந்திருந்து தலைவருடைய பேச்சை 100 லட்சம் பேர்களாவது கேட்டிருப்பார்கள். மற்றொரு 100 லட்சம் பேர்களாவது அவரைத் தரிசித்திருப்பார்கள்.

கூட்டங்களில் எல்லாவகை மக்களும் கூடியிருந்தார்கள். விவசாயிகளே அதிகம். ஆலைத் தொழிலாளி, கைத்தொழிலாளி, பெரும் வர்த்தகர், வியாபாரி, படித்த வேலைக்காரர் ஆகியோர் ஏராளமாகக் கூடினார்கள். ஏகதேசம் ஒரு ஐரோப்பியன் வருவான். பெரிய கூட்டங்களை, கூட்டங்களென்று கூற முடியாது. ஒரு பெரிய நகரத்தையோ, கிராம வட்டாரத்தையோ குலுக்கிய மனிதப் பூகம்பமென்றே கூற

வேண்டும். ஊர்வலத்துக்கு ஏற்பாடாகியிருக்கும். காரில் செல்பவரை யாவரும் பார்க்க வேண்டுமென்பதற்காகக் காரின் மேற்பாகத்தை மடக்கிவிட்டுத் திறந்துவைக்கப்பட்டிருக்கும். ஊர்வலம் புறப்பட்டால் தெருவில் ஒரு ஆளைக் கூடக் காண முடியாது. எல்லோரும் கூட்டத்துக்குப் போயிருப்பார்கள். இது சாதாரண அனுபவம். மகாராஷ்டிரத்திலும் தென்னிந்தியாவிலும் கூட்டங்களுக்குப் பெண்கள் ஏராளமாக வந்திருந்தனர். முப்பதாயிரம் பேர் கொண்ட கூட்டத்தில் கால்வாசி அவர்கள். ஏராளமான குழந்தை குட்டிகளைப் பார்த்தால் நமது நாட்டின் தரித்திரத்தையும் சராசரி வயதுக் குறைவையும் நன்கு காணலாம். ஆனாலும் இந்தக் குழந்தைகளின் உற்சாகத்தையும், கோஷங்களைச் சொல்லும் ஆர்வத்தையும் கண்டால் வருங் காலத்தில் சுதந்தர வீரர்கள் தோன்றுவார்கள் என்ற நம்பிக்கை உதித்தது.

முனிஸிபாலிடிகள், ஜில்லா போர்டுகள், காங்கிரஸ்க் கமிட்டிகள், பெருவர்த்தகர் சங்கம், வியாபாரிகள் சங்கம், மாணுக்கர் சங்கம், மாதர் சங்கம், விவசாயிகள் சங்கம், தொழிலாளிகள் சங்கம் ஆகிய வெவ்வேறு சங்கங்கள் வரவேற்பு அளித்ததையும், பணமுடிப்பு அளித்ததையும் கவனித்தால் காங்கிரஸை எல்லா மக்களும் வரவேற்று ஆதரிக்கிறார்களென்பது தெரியவரும். எங்கே போனாலும் கட்டுப்பாடாக வராதிருந்தவர்கள் அரசாங்க உத்தியோகஸ்தர்களே.

ஒவ்வொரு மாகாணமும் பிரம்மாண்டமான கூட்டங்களுக்கும் சுற்றுப்பிரயாணத்துக்கும் வேண்டிய ஏற்பாடுகளை விரிவாகவும், பலமாகவும், திறமையாகவும் செய்திருந்தது. பெரும்பாலும் அந்த ஏற்பாடுகளைப் பின்பற்றியே காரியங்கள் நடந்தன. எனினும் ஏற்பாடுகள் குலைந்து போன சமயங்களில் தலைவரின் அசாதாரணமான சக்திகள் அவைகளைச் சரிப்படுத்திவிடும்.

இந்தச் சுற்றுப்பிரயாணத்தில் ஒலிபெருக்கி வசதிகள் நிலைத்துவிட்டன. பெரிய கூட்டங்களை எதிர்பார்த்த எல்லா இடங்களிலும் ஒலிபெருக்கி வண்டிகளும் இதர ஏற்பாடுகளும் அமைக்கப்பட்டிருந்தன. போலீஸ்காரர்கள் தான் தலைவரை விடாது எங்கும் பின்தொடருவார்கள். இப்பொழுது ஒலிபெருக்கி ஆசாமிகள், போலீஸ்காரர்களையும் தோற்கடிக்கிறார்கள்.

ஏராளமான மக்கள் பொதுக்கூட்டங்களுக்கு வந்திருந்து காங்கிரஸின் செய்தியை அங்கே பேசிய தலைவரிடம் நேரில் கேட்டு அறிந்தார்கள். இவர்கள் நாலுமூலைகளிலும் சென்று கோடிக்கணக்கான இதர மக்களையும் தங்களையும் ஊக்குவித்த புதுவாழ்வைப்பற்றி மற்றவர்களிடம் தெரிவித்தார்கள். கடல் அலைகள்போல இந்த உணர்ச்சியும் பரபரப்பும் இந்தியாவின் கோடிக்கணக்கான மக்களிடையே பரவின.

இவ்வாறு பரவிய செய்திதான் என்ன? "தரித்திரத்தையும் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் ஒழிக்கும் பொருட்டும், சமூக, கலாசார, அரசியல் தாழ்மைகளை நீக்குவதன் பொருட்டும், இந்திய சுதந்தரத்துக்காகப் போராடுங்கள்! இந்திய மக்கள் வாழ வேண்டுமானால், நம் கலாசாரம் காப்பாற்றப்பட வேண்டுமானால், நாட்டில் பஞ்சாயத்து அரசாங்கத்தை ஏற்படுத்த வேண்டுமானால், ஏகாதிபத்தியத்தோடு போராட வேண்டும். அப்படிப் போராடுகின்ற சேனையாகக் காங்கிரஸைப் பலப்படுத்துங்கள்" என்பதே அச்செய்தி.

# ஜவாஹரின் இணைப்பு

**அசோக் மேத்தா**

**ஸ்**தாபன அமைப்பிலும் பெருந் திறமையுள்ளவர்களே தற்கால இந்தியாவில் பெருந்தலைவர்களாக அமைந்திருக்கிறார்கள். ஸ்தாபன அமைப்புத்திறன் இல்லாத தலைவர்களில்லையென்றே கூறிவிடலாம். தன்னுடைய கருத்துக்களைப் பரப்புவதற்குத் தாதாபாய் நௌரோஜி முப்பது சங்கங்களை ஏற்படுத்தினார். திலகர், அன்னி பெஸன்ட், காந்திஜி ஆகியோர் தங்களுடைய பிரம்மாண்ட சக்தியினால் செல்வாக்கு அடைந்ததைப்போலத் தாங்கள் ஏற்படுத்திய ஸ்தாபனங்களினாலும் செல்வாக்கு அடைந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் தங்களுடைய செல்வாக்கு ஓங்கியிருந்த காலத்தில் காங்கிரஸ் ஸ்தாபனத்தை ஆண்டு வந்தார்கள். ஜவாஹர்லாலோ ஸ்தாபனம் அமைப்பதில் அசிரத்தையாக இருந்துகொண்டே தான் ஒப்பற்ற ஒரு தலைவன் என்பதை நிரூபிக்கிறார்.

பெருஞ்செல்வக் குடும்பத்தில் பிறந்ததனால் அவருக்கு இந்த அசிரத்தை இருக்கிறதென்று சொல்கிறார்கள். அவர் ஒதுங்கியிருப்பதற்கு இது ஓரளவு காரணமே. இயற்கையே அவருக்கு ராஜலக்ஷணத்தைக் கொடுத்திருக்கிறது. எந்தக் கூட்டத்திலும் அவர் அரசனாக விளங்குகிறார். கும்பலைச் சேர்ந்த மனிதராக அவர் ஒருபோதும் இருந்ததில்லை. இருக்கிற இடம் தெரியாதபடி கிடக்கும் அநாமதேயப் பேர்வழிகளுக்குத்தான் பகட்டாகக் காட்சியளிக்க வேண்டும், அதிகாரம் பண்ண வேண்டும் என்ற ஆசையேற்படும். புகழ், பக்தி, விசுவாசங்களின் மத்தியில் உள்ள ஒரு மனித

ருக்கு இத்தகைய ஆசைத் தூண்டுதல் உதிப்பதற்குச் சந்தர்ப்பமில்லை.

ஜவாஹருக்கு ஸ்தாபன அமைப்புத் திறன் போதாது என்று வாதிக்கிறார்கள் சிலர். சுபாஷ் போஸ் ஸ்தாபன ஆட்சியில் ஒரு மேதை. அவரோடு ஜவாஹரை ஒப்பிட்டுக் குறை சொல்லுகிறார்கள். வரலாறு, இக்கூற்றைப் பொய்ப் படுத்துகிறது. ஜவாஹர்லால் தேசியக் காங்கிரஸின் காரிய தரிசியாக இருந்த போது அந்த ஸ்தாபனத்தை அவர் போராட்டப் போக்கில் திருப்பினார். முரண்பட்ட பல்வேறு கூட்டங்களைச் சேர்ந்த மக்களிடத்தில் ஸ்தாபன விசுவா சத்தையும் ஒத்துழைப்பு மனப்பான்மையையும் அவரால் தூண்டமுடியும். ஜவாஹரின் தலைமையில் மாத்திரமே தங் களால் அருஞ் செயல்களைச் செய்ய முடியுமென்று திறமை சாலிகள் சிலர் சொல்லியிருக்கிறார்கள். தேசியத் திட்டக் கமிட்டியின் தலைவராக இருந்து அவர் செய்த அற்புதமான வேலை அவருடைய தலைமைத் திறமையை நன்கு எடுத்துக் காட்டுகிறது. ஆகவே ஸ்தாபன ஆட்சியில் அவர் அக்கறை காட்டவில்லை யென்றால், வேண்டுமென்றே அவர் அப்படிச் செய்கிறாரே யொழியத் திறமைக்குறைவால் அல்ல.

இதற்குக் காரணங்கள் இருக்கின்றன. ஓரளவு அவ ருடைய சுபாவத்தைச் சேர்ந்ததாயினும், அவை முக்கியமா கக் கொள்கையைப் பற்றியவை என்றே கூறலாம். அவர் அனேக வருஷங்களாகச் சோஷலிஸ்டாக இருந்திருக்கிறார். கூட்டமாக முயன்றாலொழிய இந்திய வறுமையைச் சரி யானபடி போக்க முடியாதெனை அவர் நிச்சயமாக நினைக்கி றார். ஆயினும் அதனால் ஏற்படும் அபாயங்களையும் அவர் எப்போதுமே உணர்ந்திருக்கிறார். சமீபத்தில் பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சிக் கூட்டத்தில் லியான் புளும் பேசிய பொழுது, 'புதுச் சோஷலிஸத்தின் சாரம் என்ன?' என்பது பற்றிப் பின்வருமாறு கூறினார்:

"பொருளாதாரத் துறையில் இஷ்டப்படி நடத்தல்

என்ற கொள்கை இறந்துவிட்டது. அதை இப்பொழுது ஆதரிக்க யார் முன் வருவார்கள்? செல்வத்தை உற்பத்தி செய்வதற்கும் அதைப் பங்கிடுவதற்கும் தொகுப்பு ஸ்தாபனம் வேண்டுமென்று யாவரும் உணர்கிறார்கள். யுத்த காலங்களில் இத் தொகுப்பு ஸ்தாபனங்களை ஏற்படுத்துவது அவசியமாக இருந்தது. ஒவ்வொரு தேசத்திலும் அவைகளை இன்னும் பலப்படுத்தி நிலைக்கச் செய்வது அவசியம். அவைகளில்லாமல் எந்த நாடும் வாழ முடியாது.

"அதேசமயம், பொருளாதார வாழ்வு சம்பந்தப்பட்ட இந்தத் தொகுப்பு முறையிலும், தனி மனிதனுடைய உரிமைகளைக் காப்பாற்றி, மதித்து, அபிவிருத்தி செய்ய வேண்டுமென்பதையும் சோஷலிஸம் மறக்கவில்லை என்பதை மற்றச் சமயங்களைக் காட்டிலும் முக்கியமாக இப்போது நன்கு உணர்கிறோம்.

"தொகுப்பு நன்மைக்காகவென்றே முற்றிலும் திட்டமிட்டு அமைக்கப்பட்ட சமுதாயத்தின் மையத்தில் அகப்பட்ட தனி மனிதனுடைய உரிமைகளைக் காத்து அபிவிருத்தி செய்ய வேண்டுமென்பதே சோஷலிஸக் கோட்பாடு......

"சோஷலிஸ நீதி என்பதென்ன? முதலாளித்துவத்தினால் சிருஷ்டிக்கப்பட்ட பரம்பரைச் சலுகைகளை நீக்குவது தவிர வேறெதுவுமாக இருக்கமுடியாது. இயற்கையில் ஏற்பட்டுள்ள ஏற்றத் தாழ்வுகள் போதாவென்று, செயற்கை ஏற்றத் தாழ்வுகளாகிய சுமைகளையும் பெற்றிராத சமுதாயத்தைப் படைக்கவேண்டும். சமுதாயத்தில் ஒவ்வொரு தனிநபரும் தன்னுடைய இடத்தை, தன் திறமைக்கு ஏற்றதும் பொருத்தமும் உள்ள இடத்தை, பெறவேண்டும். தொகுப்பு வாழ்வுக்கு அதிகச்சேவை செய்யவேண்டும். அதே சமயத்தில் தனக்கும் அதிக நன்மையும் சந்தோஷமும் கிடைப்பது உறுதி என்ற நிச்சயம் அந்தத் தனிநபருக்கு இருக்கவேண்டும்.

"இதை எல்லோரும் சொல்கிறார்கள். அவ்வளவு சாதாரணமாகி விட்டது. இதுவே சோஷலிஸத்தின் சாரமல்லவா? சமுதாயத் தொகுப்பு நன்மையும் தனிநபரின் நன்மையும் ஓர் உருவாகி இணைந்திருப்பதே நமது கட்சி."

ஜவாஹர்லாலுக்குச் சோஷலிஸ்டுக் கோட்பாடு நன்றாகத் தெரியும். சமுதாய நன்மையையும் தனிமனித நன்மையையும் இணைப்பதற்காகப் பலவருஷங்கள் முயன்றிருக்கிறார். ஆனால் புளூம் கூறுகிறபடி ஏதாவது ஒரு கட்சிதான் அந்த இணைப்புக்கு உருவாக இருக்கமுடியுமென்பதை அவர் ஒப்புக்கொள்ள முடியாது. கட்சியென்று கூறுவதும், அக்கட்சி ஒரு கோட்பாட்டின் உருவமாக இருப்பதென்பதும் சிந்தனைக் குழப்பத்தைக் காட்டுகின்றன. அவை முரண்பட்ட சொற்கள். ஸ்தாபன அமைப்புக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதை ஜவாஹர் உறுதியாக மறுத்து வந்திருக்கிறார்.

தொகுப்பு வாழ்வு ஐரோப்பாவில் தனிநபரை அமுக்கி விட்டது. இருபது வருஷங்களுக்கு முன்பு, மனித சுபாவ ஆராய்ச்சியாளரும் நுட்பமதியுடையவருமான எர்னெஸ்டு டோல்லர் என்பவர் 'கும்பல் ஆசாமி' என்ற நாடகத்தை எழுதினார். தற்காலத் தொகுப்பு முறையினால் உண்டாக்கப்பட்டவன் 'கும்பல் ஆசாமி'; தனி நபருக்கு எதிரான சுபாவமுள்ளவன். கும்பல் ஆசாமியால் ஏற்படக்கூடிய ஆபத்துக்களை ஜவாஹர் நன்றாக அறிவார். உன்னதமான வளர்ச்சி பெற்ற தனி மனிதர் அவர். குணாதிசயங்களுள்ள மனிதன் வெறும் இயந்திரமாக ஆக்கப்படுவதைக் காண அவருக்கு அடங்காத வெறுப்பு ஏற்படுகிறது.

தொகுப்பு முறை ராக்ஷஸத்தனமாகப் பரவி வருவதைக் கண்ட தனிநபர்வாதிகள் சிலர் நேர் எதிர்முனையில் நின்று ஒரேயடியாக அதை எதிர்க்கிறார்கள். முப்பது வருஷங்களுக்கு முன்பு ஹிலேர் பெல்லாக் அடிமைத்தன ஆசாரங்களை எதிர்த்து முழக்கம் செய்தார். சமீபத்தில்

எழுதிய ஒரு புத்தகத்தில் ஹேயெக் என்பார் தொகுப்பு முறையை, 'அடிமைத்தனத்துக்குக் கொண்டு போய்விடும் பாதை' என்று இகழ்ந்திருக்கிறார். இணைப்பு என்ற சிந்தனையே இவ்வெழுத்தாளர்களுக்குத் தோன்றுவதில்லை. எந்தவிதமான தொகுப்பு முறையையும் இவர்கள் எதிர்க்கிறார்கள்.

ஆல்டஸ் ஹக்ஸ்லி போன்ற நுட்பமான லட்சியவாதிகள் வேறு இருக்கிறார்கள். இவர்களுக்கும் தொகுப்பு முறையைக் கண்டால் ஒரே பயம். ஒதுங்கி வாழ்தலின் சிறப்பைக் காண ஆரம்பித்துவிடுகிறார்கள். மனித விவகாரக் கடல்களிலிருந்து விலகிச் சென்று ஒதுங்கி இருந்து பாதுகாப்புடன் வாழும் சிப்பியிலே நமது ஆன்மாவாகிய முத்தினை விளைய வைப்போம் என்கிறார்கள். இவர்களுடைய பற்றற்ற மனப்போக்கை ஜவாஹர் மதிக்கிறார் என்றாலும், ஒதுங்கி அமைதியாக வாழ விரும்புவதை அவர் ஒருபோதும் ஏற்றுக் கொள்ளமாட்டார். எப்போதும் காரியாவாதி அவர். அவரே ஒரு சமயம் கூறியிருப்பது போல, வாழ்க்கைப்புயலின் மத்தியில் இருப்பதே அவருக்கு மகிழ்ச்சி தருவது.

சோஷலிஸத்துக்கு ஜனநாயகத் தன்மை கொடுக்கிற 'கில்டு சோஷலிஸ்டுகள்' கூறுவதை அவர் வெகுவாக ஒப்புக் கொள்வார். இந்தியாவில் சோஷலிஸத்தைப் புகுத்துவதற்குச் சந்தர்ப்பம் கிடைக்குமானால் ஜனநாயகக் கட்டுப்பாடுகளைக் கொணர்ந்து சோஷலிஸக் கடுமையை அவர் தளர்த்துவாரென நம்புகிறேன்.

இந்தத் தடைகளாலும் கட்டுப்பாடுகளாலும் பிரசினை தீர்ந்து விடவில்லையென்பது ஜவாஹரின் அபிப்பிராயம். பற்றற்றதும் அதிகாரத்தில் ஈடுபடாததுமான தலைமைப் பதவியின் மூலம் நன்மையைச் சாதிக்க முடியுமென்று அவர் நம்புகிறார். ஆகவே தனக்கும் தன்னைப் பின்பற்றுவோருக்கும் இடையில் ஸ்தாபன ரீதியான பிணைப்பை

ஏற்படுத்திக்கொள்ள அவர் மறுக்கிறார்; தோழமைப்படியி லிருந்துகொண்டே அவர்களோடு உறவுகொள்ள முயல் கிறார். மந்திர சக்தியால் கட்டுப்பட்டவர்கள் போல அவ ரிடம் மக்கள் அன்பு செலுத்துகிறார்கள். ஆனால் ஸ்தாபன அமைப்புக்கள் எதுவுமின்றியே இக் கவர்ச்சியை அவர் உண்டாக்கியிருக்கிறார்.

எதையும் நேருக்கு நேர் சொல்லுகிற ஆசாமியான யூசுப் மேஹரலி ஒருசமயம் ஜவாஹரைப் பார்த்து, 'நீங்கள் யாருடனும் ஒட்டாமல் தனியாக இருக்கிறீர்கள். உங்க ளுக்கு உண்மையான நண்பன் ஒருவன் கூட இல்லை. வேண்டுமென்றால் பந்தயங் கட்டுகிறேன்'என்றார்.ஜவாஹர் நெடுந் தூரத்திலே எதையோ பார்ப்பவர் போலக் கொஞ்ச நேரம் இருந்துவிட்டு, 'கூட்டங்களிலே மனம் விட்டுப் பேசப் பிரியப்படுகிறேன்' என்று மெதுவாக நிறுத்திச் சொன்னார். ஜவாஹர் பெருங் கூட்டங்களை அப்படியே சந்திக்கிறார், நண்பன் நண்பனைச் சந்திப்பதுபோல. சொல் ஜாலங்களை அவர் கையாளுவதில்லை. கூட்டங்களில் உள்ள வர்களிடம் கள்ளங் கபடமின்றிப் பேசுகிறார். பெரும்பா லான அரசியல் வாதிகளுக்கு இப்படிப் பேசத் தெரியாது. ஜவாஹர் சபையோர்களின் உன்னத சுபாவங்களைத் தட்டி யெழுப்புவார்; வேறுபாடு இல்லாத ஒரே கும்பலாக அக் கூட்டத்தை மாற்ற முயலமாட்டார். கூட்டத்தில் உள்ள ஆயிரக்கணக்கானவரில் ஒவ்வொரு மனிதனையும் அவர் தன் பேச்சின் மூலம் அணுகி அவனது அந்தரங்க பலத்தைப்'பெருக்குவார்.

அதிகாரப் பதவிகளை அவர் நம்புகிறதில்லை. பதவி களுக்குப் புதுப் புது மனிதர்கள் வரவேண்டு மென்று'வற் புறுத்துவார். ஒருவரே மீண்டும் மீண்டும் பதவிக்கு வருவ தைத் தன் சொந்த மாகாணத்தில் அவர் தடுத்தார். தனக்கே பதவி மீண்டும் வந்தால், தன்மீதும் சந்தேகம் கொள்வார். புனே பெயரில் 'மாடர்ன் ரிவ்யூ' பத்திரிகைக்கு அவர்

1936-ல் எழுதிய கீர்த்தி பெற்ற கட்டுரை அவருடைய ஹாஸ்யச் சுவையையும் ஆழ்ந்த நல்லறிவையும் எடுத்துக் காட்டுகிறது.

தேர்தல்களில் காங்கிரஸ்க் கட்சிக்கு வெற்றி வாங்கித் தருவதில் அவருக்கு ரொம்ப மகிழ்ச்சி. ஆனால் அபேட்சகர்களைத் தேர்ந்தெடுப்பதையோ, மந்திரிப் பதவியை அடக்கியாளுவதையோ அவர் விரும்புவதே இல்லை. தன்னுடைய குணதிசயத்தைப் பாதுகாப்பதற்கும், பிறருடைய தனிக் குணதிசயங்களை வளர்ப்பதற்கும், ஒரு மனிதனிடத்தில் தன்னல மறுப்பு இருக்கவேண்டும். ஒரு சமயம் யாரோ ஒருவர் டிராட்ஸ்கிக்கு வந்த முடிவே ஜவாஹருக்கும் கிடைக்குமென்று அவரைப் பரிகாசம் பண்ணினார். ஜவாஹர் சிரித்தார், அவ்வளவுதான். தன் கருத்தினாலும் கற்பனையினாலும் மக்களைத் தன் வசப்படுத்தியது போக அவர்களை ஸ்தாபனக் கட்டுப்பாட்டின் மூலமாகவும் அடக்கியாள முற்பட்டதால் டிராட்ஸ்கிக்கு அந்த முடிவு கிடைத்தது என்று எண்ணினார்போலும். டிராட்ஸ்கியின் பேராசை ஒரு ஸ்டாலினின் உதயத்தை அவசியமாக்கிற்று. ஸ்தாபனக் கட்டுப்பாட்டைக் கையாளாததால் டிராட்ஸ்கியின் விதி தனக்கு ஏற்படாதபடி அவர் தப்பித்துக்கொள்வார் என்பதோடல்லாமல், இந்தியாவில் ஒரு ஸ்டாலின் கிளம்புவதையும் சிரமமாக்கிவிடுகிறார்.

ஒரு மனிதன், பிறமனிதர்களை, தலைவனாக இல்லாமல் சகோதர மனிதன்போல அணுகுகின்ற முறையில் ஜவாஹரின் தலைமைப் பதவி அமைந்திருக்கிறது. ஸ்தாபன நோக்கில் அவர் மக்களை அணுகுவதில்லை. ஒவ்வொரு இதயத்திலும் உணர்ச்சி யொளியை ஏற்றிவிடுகிறார். ஸ்தாபன ரீதியில் உண்டாகும் விசுவாசத்தைக் காட்டிலும் இதுவே உறுதியான விசுவாசத்தை உண்டாக்கிவிடுகிறது. தொகுப்பு முறையின் ஆபத்துக்கள் எல்லாம் இத்தகைய தலைமையின் கீழ்க் குறைந்துவிடும். ஆகவேதான், நம் முன்னோர்கள்

ஆத்மிக, அரசியல், பொருளாதார அதிகாரப் பீடங்களைத் தனித்தனியாக வைத்துவிட்டார்கள். நம்முடைய புராதன அறிவுக் களஞ்சியத்தை இயல்பாகவே ஜவாஹர் அடைந்திருக்கிறார். கட்டுப்பாடுகளையும் சமநிலைகளையும் கொண்ட அமைப்பு எதையும் அவர் ஏற்படுத்தவில்லை. அதிகாரத்தில் பற்றில்லாத குணத்தினால் தலைமைத் தன்மையை அடைந்திருக்கிறார். சர்வாதிகாரத் தன்மையின்றியே அவருடைய தலைமைத் தன்மை பெருஞ் சக்தி வாய்ந்ததாக இருக்கிறது. தன்னுடைய நிகரற்ற தியாகங்களினாலும் திறமைகளினாலும் தன் சகோதர மக்களின் மனத்தில் அன்புண்டாகும்படி செய்திருக்கிறார். அறிவுடைமையை நாடுகிறார். அறிவும் அன்புமே அவருக்குச் செல்வாக்கு அளிக்கின்றன.

ஜவாஹர் ஜனநாயகவாதிகளில் சிறந்தவர். யோகியும் அரசியல் தலைவனும் எதிரிடையானவர்கள் என்று ஆர்தர் கேயஸ்லர் கூறியிருக்கிறார். அப்படியிருக்கவேண்டுமென்பது அவசியமில்லை. அப்படியிருப்பது இயற்கைக்கு மாறுபட்டதென்பதை ஜவாஹர் வெற்றிகரமாக நிரூபிக்கிறார். ஆகையால் அவர் ஒரு சிறந்த ஜனநாயகவாதி.

# ஜவாஹர்லால் நேரு

பூர்ணிமா பானர்ஜி

மகாத்மா காந்தி, ஜவாஹர்லால் நேரு போன்றவர்கள் முதுமையடைவதில்லை. தேகத்தில் சுருக்கங்கள் விழலாம். அது ஒன்றும் முக்கியமில்லை. உணர்ச்சி நுட்பம் படைத்த இவர்கள் தங்களைத் தூண்டிக் கொண்டிருக்கிற கருத்துக்களுக்கும் எண்ணங்களுக்கும் உள்ள தன்மைகளைத் தமதாக்கிக் கொள்கிறார்கள். சுறுசுறுப்பான வாழ்க்கை நடத்தும் எல்லோருமே இந்தக் குணத்தை அடைவார்கள்.

இந்தியா ஒரு நாளும் மகாத்மாஜிக்கு விடை கொடுத்தனுப்பாதிருக்கலாம். வழியனுப்பும் நாள் வந்தாலும் அவர் இந்நாட்டிற்கு அளித்துள்ளதில் பெரும் பாகத்தை இந்தியா மறக்காது. இந்தியா தன் அரசியலபிவிருத்தியில் புதுக் கட்டத்தில் இறங்கலாம். மனிதவர்க்கம் செல்லுகிற பொதுவழியிலே இந்தியாவும் செல்லக்கூடும். இந்தியாவின் விதியை, அது அடையவேண்டிய நிலையை, சுட்டிக் காட்டிக் கொண்டிருப்பாரேயன்றி ஜவாஹர்லால் வழிகாட்டி நடத்திக் கொண்டிருக்க மாட்டார். அதைக் காட்டிலும் அவர் நாட்டின் விதியை உருவாக்குவார் என்றே கூறவேண்டும். மார்டின் லூதரின் வாழ்வைப் போல இவருடைய வாழ்வும் இருக்குமென்று கற்பனையிலும் நினைக்க முடியாது. விவசாயிகளை மதவிஷயங்களில் அதிருப்தி கொள்ளும்படி மார்டின் லூதர் செய்தார். அந்த விவசாயிகள், நிலச்சுவான்தார்களுக்கு எதிராகக் கிளம்பியபோது மார்டின் லூதர் விவசாயிகளை எதிர்த்தார். சுதந்தரப் போராட்டத்தின் லட்சியம், விவசாயிக்கும் சாதாரண மனிதனுக்கும் நன்மை

யளிப்பதாயிருக்க வேண்டும். ஜனநாயக முறையினால் பிரசினைகள் தீர்க்கப்பட வேண்டும். சுரண்டப்படும் நாடுகளும் அடிமை நாடுகளும் தனக்கு உதவ வேண்டுமென்று இந்தியா கோரும். தானும் அவைகட்கு உதவும். இதன் பலன் என்ன என்பது யாருக்கும் தெரியாது. அரசியல் பிரசாரகராகவும், திறமையும் அறிவொளியும் வாய்ந்த ஒரு சிறு கூட்டத்தைச் சேர்ந்தவராகவும் ஜவாஹர் இன்று திகழ்கிறார். பெரிய முடிவுகளைச் செய்யும் பொறுப்பை ஏற்கவேண்டிய அரசியல்வாதியாக அவர் இனிமேல்தான் காட்சியளிப்பார்.

ஒற்றுமை வேற்றுமை காண்பது அறிவைப் பெறுவதற்கு ஒருவகை வழி. இருவர்க்கிடையே நிலவும் ஒற்றுமை வேற்றுமைகளைக் காண்பதன் மூலம் ஒருவரைக் குறைவு படுத்தி மற்றவரைப் பெருமைப் படுத்துகிறோமென்பது உண்மையல்ல; அதைக் காட்டிலும் இருவரும் சேர்ந்து ஒருவர்க்கொருவர் எவ்வளவு சிறப்புச் செய்கின்றனர் என்பதே தெரியவரும். நிறைவிலே செறிந்திருக்கும் வளமையும் விளங்கும். பெரிய காரியங்களைச் சாதிக்க வந்தவர்களிடையிலும் உன்னதமான கருத்தைப் போதிக்கவந்தவர்களிடையிலும் இம்முறையைக் கையாளுவதால் அவர்களை நாம் நன்குணர முடியும். ஜவாஹரைப் பற்றிய புத்தகத்திலும் ஒற்றுமை வேற்றுமை காணும் முறை இருக்கும்.

இந்நாட்டு மக்கள் மனத்தில் மகாத்மா காந்தி, ஜவாஹர்லால் என்ற இரு சொற்களும் ஒரு அர்த்தத்தையே குறிப்பிடுகின்றன. நிபுணர்களும் அரசியல்வாதிகளும் அவர்கள் வெவ்வேறானவர்கள் என்று பிரித்துக்கூற முயலுகிறார்கள். இதற்குக் காரணம் மனமயக்கம். மனமயக்கம் முற்றி அதனால் கஷ்டப்படுகின்ற சில மேனாட்டுக் கெட்டிக்காரர்கள் காந்திக்குப் பதில் ஜவாஹர் தலைவராக வேண்டுமென்றும், தலைமைப்பதவி காந்தியிடமிருந்து ஜவாஹரிடம் மாறவேண்டுமென்றும் யோசனை கூறி, அதனால் மேனாட்டு

நல்லறிஞர்களின் நகைப்புக்கு ஆளாகிறார்கள். தலைமைப் பதவி அள்ளித் தரப்படும் பொருள் அல்ல. வெறும் பதவியும் அல்ல. அதில் அதற்குமேலும் எவ்வளவோ அடங்கியிருக்கிறது.

பொதுமக்கள் மகாத்மா காந்தியை வணங்கி மகிழ்ந்து ஆரவாரம் செய்கிறார்கள். ஜவாஹர்லாலைக் கண்டு கைதட்டி ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள். இன்னும் கைதானவர்கள்மீதும், அரசாங்கத்தாரால் வேட்டையாடப்பட்டுத் துன்புறுத்தப் படுகிறவர்கள்மீதும் விசுவாசமாக இருக்கிறார்கள். நாட்டுக்காக உயிரிழந்தவர்களுக்கு மரியாதை செய்கிறார்கள். சுபாஷையும், இ. தே. ராணுவத்தினரையும் வரவேற்கிறார்கள். இவ்வளவும் ஒரே மூச்சில்! மின்னல் வேகத்தில்,ஒருகணத்தில் உயிரைப் பணயம் வைக்கிறார்கள்; அல்லது பார்ப்பதற்குப் புரியாத்தனமான காரியங்களில் ஈடுபட்டு எங்கெங்கோ மூலை முடுக்குகளில் உள்ள கிராமங்களில் பொறுமையோடு வருஷக்கணக்காக உழைக்கிறார்கள். இவ்வளவும் சுயராஜ்யத்தின் பேரால். இரகசியமாகச் சேவா கிராமத்துக்குப் போவதைக் கொண்டாடுகிறார்கள். சிம்லாவுக்குப் பிரயாணமென்றால் ஆரவாரம் செய்கிறார்கள். இவ்வளவும் இந்திய சுதந்தரத்துக்காக. இதுதான் ஜனங்களின் தேசிய உணர்ச்சி; மக்கள் மனஎழுச்சியின் போக்கு. இந்த உணர்ச்சியையும் போக்கையும் பிரதானமாகக் கொண்டே தேச சேவைக்கு முறைகள் வகுக்கப்படுகின்றன. திறமைகள் யாவை என்பதும் கணிக்கப்படுகின்றன. நூற்றுக்கணக்கான வீர ஆண்களும் பெண்களும் தலைமுறை தலைமுறையாகத் தங்கள் உயிரை அர்ப்பணம் செய்கிறார்கள். சக்திகளை ஒன்று திரட்டுகிறார்கள். தூண்டுதல்களை அளித்து ஊக்குகிறார்கள். ஸ்தாபனங்கள் அமைக்கப்படுகின்றன. தீர்மானங்கள் போடப் படுகின்றன. இவ்வாறாகப் பலமும் உறுதியும் வளர்கின்றன.

இந்திய தேசியக் காங்கிரஸ் லக்ஷ்மணபுரியில் கூடிய

போது ஜவாஹர்லால் முதன் முதலாகச் சோஷலிஸத்தைப் பற்றிப் பேசினார். அதன்மூலம் இந்தியாவுக்கு முக்கியமான வழியைக் காட்டினார். அவர் காட்டிய வழி இந்தியாவுக்கு உயிரூட்டியது. ஒரு மகத்தான ஸ்தாபனத்தை அமைக்கக் கூடிய வீறும், சுறுசுறுப்பும், ஆர்வமும் நாடெங்கும் படையெடுத்தன. சோஷலிஸ்டுக் கருத்துக்களை ஆதரித்து நுட்பமான வாதங்கள், கட்டுரைகள், விஷயங்கள், புள்ளி விவரங்கள், சித்தாந்தங்கள் எல்லாம் இந்தியாவில் வெள்ளப் பெருக்கெடுத்து வெளியாயின. இச்செய்திகள் வெளிநாட்டிற்கும் பரவின. காங்கிரஸ் ஸ்தாபனங்கள் புத்துயிர் பெற்றுத் துடிப்பெய்தின. காங்கிரஸ், வெளிநாட்டு விஷயங்களைப் பற்றியும், பொருளாதார, அரசியல் விஷயங்களைப் பற்றியும் நம் நாட்டினர்க்கும் வெளிநாட்டினர்க்கும் அறிவித்து வந்தது. இந்திய சுதந்தர கோரிக்கை ஒரு தெளிவற்ற வேண்டுகோளாக இருக்கவில்லை; அறிவை ஆதாரமாகக் கொண்டிருந்தது. சுதந்தரம் தேவை என்ற உறுதி பலமாயிற்று; நியாயமான வாக்குவாதத்தாலும், தேவையால் நிரூபித்துக் காட்டக்கூடிய விதத்தாலும் நிலைபெற்ற கொள்கையாயிற்று. சிறு பட்டி தொட்டிகள் கூடக் காங்கிரஸ் கமிட்டிகளை அமைத்துக்கொண்டு காங்கிரஸ் செய்தியையும் விடுதலை வேட்கையையும் பரப்பி வந்தன. உழுவனுக்கு நிலமும், பசித்தவனுக்கு உணவும், உடையற்றவனுக்கு உடையும், எழுத்தறியாதவனுக்குப் படிப்பும் உண்டென்றும், அரசாங்கத்தில் பங்கு கொள்ள ஒவ்வொருவனுக்கும் உரிமை உண்டென்றும் காங்கிரஸ் கூறிற்று. சுயராஜ்யம் அவசியமான தேவை; அதை நிரூபிக்கப் புத்தகங்கள் தேவையில்லை. இவ்விஷயங்களை உழுவன் கேள்விப்பட்டான்; காங்கிரஸைப் பின் தொடர்ந்தான்.

'நோயை ஒழி, அதன் அறிகுறிகளை யல்ல!' என்பதே ஜவாஹர்லால் அடிக்கடி கூறுகின்ற அறிவுரை. முறையைத்தான் குறைகூறவேண்டும், அதில் சிக்கிய தனி மனிதனை

அல்ல. என்னுடன் ஜெயிலில் இருந்த ஒருத்தி ஜவாஹரின் உலக சரித்திரத்தைச் சமீபத்தில் படித்தாள். அவள் கல்லூரியில் சரித்திரத்தைத் தனிப்பாடமாக எடுத்துக் கற்றவள். 'மனிதர்கள், அடுத்த நாட்டின்மீது படையெடுத்துச் செல்லும்போது நாட்டைக் கொள்ளையடித்து மக்களைக் கொல்லுகிறார்களே, அது ஏதோ இந்த மதத்தையோ அந்த மதத்தையோ அவர்கள் பின்பற்றுகிற காரணத்தினால் அல்ல. படையெடுக்கிறவர்களுடைய தன்மையே அது; வலிமையைக் காட்டி அடக்கி ஆளும் இயற்கை. அந்தக் காரியத்தில் மதத்தின் பங்கு கொஞ்சமே' என்பதை முதன் முதலாக உலக சரித்திரத்திலிருந்து அவள் அறிந்து கொண்டாள். மதம் அல்லது சாதி என்ற சகதியிலிருந்து விடுதலை கிடைத்தது அவளுக்கு ஒரு பெரிய நிம்மதியைக் கொடுத்தது. மதஉணர்ச்சிகள் எல்லோருக்கும் பொது என்பதை மகாத்மா காந்தி காட்டியிருக்கிறார். நாம் யாவரும் ஒரே மண்ணில் பிறந்து ஒரே முடிவை எய்த இருக்கிறோம் என்பதை ஜவாஹர் சுட்டிக் காட்டுகிறார். மத நம்பிக்கைகளைக் கொண்டிருந்துங்கூட—மத நம்பிக்கைகளுக்கு நேர்மாறாகக் கூட—நாம் சில சமயங்களில் இம்மாதிரியான காரியங்களைச் செய்யும்படி நேர்கிறது. இம் மாதிரியான குற்றங்களை இழைக்கிறோம்! 'சித்திரவதைக்குள்ளான இந்தநாடு' என்று நம் நாட்டை ஜவாஹர் கூறுகிறார். இந் நாட்டில் முஸ்லிம்கள் இந்துக்கள் ஆகிய இருபாலாருமே உணவின்றித் தவிக்கிறார்கள். உணவு மறுக்கப்படுகிறார்கள். தேசத்தின் அவமதிப்பு எல்லோருக்குமே அவமதிப்பு. தேசத்தின் சீரமைப்பு எல்லோருக்கும் நன்மை தரும். ஒருசிலருக்கு மட்டும் கிடைத்த நன்மையும் உதவியும் தேச வெற்றியைக் குறிப்பிடா. இதை நமக்கு ஜவாஹர் கூறியிருக்கிறார்.

மனிதர்களுடைய எண்ணங்களின் தன்மையையும் அவர்கள் கொள்ளுகிற ஆசைகளின் தன்மையையும் பொறுத்தே முன்னேற்றம் இருக்கிறதெனக் காந்திஜி

காட்டியுள்ளார். ஜவாஹர்லால் மற்றொன்றை எடுத்துக் காட்டியிருக்கிறார். நாம் சேர்ந்து வாழ்கிறவர்கள்; பழக்க வழக்கத்துக்கு அடிமைப்பட்டவர்கள். இந்தச் சமுதாய அமைப்பே நாம் செய்யும் முட்டாள் தனங்களுக்குக் காரணம். நமது செயல்களை உருப்படுத்துவதும் சமுதாய அமைப்பு. சில காரியங்களை அது தடுக்கும்பொழுதும் அந்தத்தடையே சமுதாயஅமைப்புக்கு நன்மையாகஇருக்கிறது.

அழியாதனவும் நிரந்தரமானவைகளுமான உயர்நிலைகள் எவை என்பது பற்றிய ஆராய்ச்சியிலேயே ஜவாஹர் ஈடுபட்டுக் கொண்டிருப்பதில்லை. உயிருடனிருக்கும் வரை வேலை பார்க்கிறோம். பிறகு மறைந்து விடுகிறோம். வேலை பார்க்கும் வரை ஒழுங்காகத் தக்க முறையில் வேலை பார்த்தால் அதுவே அவருக்குத் திருப்தி. பலன் குறைந்தது எது, நிறைந்ததுஎது என்பதையே அவர் நாடுகிறார். வெற்றியில் மோகம் கொள்கிறார். வெற்றியைப் புள்ளிவிவரங்களைக் கொண்டு அளக்கிறார். எகிப்தின் வலிமை மண்ணோடு மறைந்துவிட்டாலும், எகிப்து மக்களுடைய கனவுகள் இன்னும் அழியவில்லை என்று நம்புகிறார். 'நான் சொன்னதற்குப் பிறகு இப்பொழுது இத்தனை ராட்டைகள் சுழல்கின்றன. நூற்பவர்களுக்கும் நெய்பவர்களுக்கும் இப்பொழுது இவ்வளவு அதிக வரும்படி கிடைக்கிற' தென்று காந்திஜி கணக்குப் போட்டுக் கூறலாம். இப்படி மெதுவாக முன்னேறுவதென்பது ஜவாஹருக்குப் பிடிக்காது. வாழ்க்கைத்தரம் வெகு சீக்கிரம் உயரவேண்டுமென்பதற்குரிய புள்ளி விவரங்களையும் திட்டங்களையும் கொண்டுவந்து, சுதந்தர இந்தியாவிலேதான் அது சாத்தியமென்பதையும் காட்டி, மக்களின் மனத்தைத் தூண்டிவிடுகிறார். இதற்கு அவர் விஞ்ஞானிகள், பொருளாதார நிபுணர்கள், அரசியல் வாதிகள் ஆகியோருடைய கவனத்தை யிழுத்து அவர்கள் ஆதரவைப் பெற்றுவிட்டார். இந்த லட்சியத்தை அடைய அவர் திட்டமிட்டு வேலை செய்வார்.

ஜவாஹர்லால், சித்தாந்தங்களைப் பற்றி விவாதித்து நம்மைத் தொல்லை பண்ணுகிறார் என்று யாரும் குறைகூற முடியாது. அவருடைய 'இருந்தால்', 'ஆனால்'களுக்குள்ளே பலமான உறுதியும் இருக்கிறது. அவருடைய சித்தாந்தத்தில் படாடோபப் பகட்டுக்கு இடம் இல்லை. ஒருபக்கம் உணவற்றவர்களும் உடையற்றவர்களும் இருக்கிறவரை, மறுபக்கம் விரட்டி யடிக்கவேண்டிய அக்கிரமக்காரர்கள் இருக்கிறவரை, விடாப்பிடியான முயற்சியும் வெற்றியும் இருந்து தீரும். பலனளிக்காத வகையில் காரியம் செய்கிறதை ஒரு பெருங்குற்றமாகக் கருதுகிறார். திறமையைப் பெரிய குணமாகப் போற்றுகிறார்.

உயர்ந்த லட்சியங்களைக் கனவு காண்பதில் பிரியம். அப்படிக் கனவு காண்பவர்களைக் காண்பதிலும் பிரியம். ஆனால் அதற்காகக் கனவு காணவேண்டுமென்று திண்டாடுபவர்களை, வேதனைப்படுபவர்களை, அதில் தோல்வியடைபவர்களைக் கண்டால் கொஞ்சமும் அவருக்குப் பிடிக்காது.

இரவு நெடுநேரத்திற்கப்புறமும் முகத்தில் லேசான வருத்தச் சாயலோடு ஏதோ ஒரு அரசியல் தஸ்தாவேஜை எழுதிக்கொண்டிருக்கிற ஜவாஹரை என்னால் கற்பனை செய்ய முடிகிறது. 'அரசியலமைப்பு எவ்விதம் இருந்தாலென்ன? அதை மாற்றுவதால் மனிதவர்க்கத்தின் மொத்த சந்தோஷத்தை அதிகப்படுத்த முடியாது' என்னும் முடிவுக்கு வருகிற ஜவாஹரை என்னால் கற்பனை செய்ய முடியவில்லை. அவரைப் பின்பற்றுகிறவர்களில் அனேகர் அவ்வாறு நினைக்கிறார்கள். உணவு, சௌகரியம், கல்வி, விடுதலை ஆகியவைகளெல்லாம் அற்ப விஷயங்களென்று நினைப்பது கயமைத் தனம். ஆனால் இவைகளெல்லாம் கிடைத்த பிறகு தத்துவஞானிகள் மகிழ்ச்சி யடைந்துவிட்டாலோ, ஒழுங்கான சமுதாய அமைப்பை உண்டாக்க முற்படும் ஆர்வ மேலீட்டினால் அரசியல்வாதிகளும் ராஜதந்திரிகளும் மனிதனுடைய அறிவு வளர்ச்சியில் தலையிட்டாலோ, உல

கம் வெறுமை நிறைந்த இடமாகிவிடும். மகிழ்ச்சி உண்டாக்குவதற்கு ஏதேனும் குறிப்பிட்ட மருந்து கிடையாது. சாப்பாட்டுக்கு இருந்தால், இன்பம் கிட்டிவிடுமா ? இல்லை. சாப்பாட்டுக்கிருந்தால் மட்டும் போதாது. சில சமயம் சாப்பாட்டுக்கில்லாமல் இருக்கும்போதும் மகிழ்ச்சி ஏற்படுவதில்லையா? இருந்தாலும் இங்கு வாழும் எல்லா மனிதர்களுக்கும் உணவு வேண்டும்.

ஜவாஹர்லாலைப்பற்றி எத்தனையோ கட்டுக்கதைகள் வந்திருக்கின்றன. அவரிடமுள்ள அனேக நல்ல குணங்களைக் கண்டு உலகம்' அவரிடம் பிரியம் கொள்கிறது. இந்திய சுதந்தரத்துக்காக உழைத்திருக்கிறார். அதுமட்டுமல்ல. அவ்வுழைப்பில் ஆனந்தங் கொள்கிறார். 'காலம் கெட்டுப் போச்சே, இதை ஒழுங்குபடுத்த நாமா வந்து பிறக்க வேண்டும்' என்று அவர் அங்கலாய்த்தது கிடையாது. மனத் துணிவோடும் திடத்தோடும் அவர் முன்னேறிச் சென்றிருக்கிறார்; தன்நாட்டவரையும் உடனழைத்துச் சென்றிருக்கிறார். காந்திஜி மக்களைப் போருக்கழைத்தார். போரில் முன் நின்று நடத்தினார் ஜவாஹர். 'செல்' என்றும் 'நில்' என்றும் உத்தரவிடுகிற பொறுப்பைக் காந்திஜி மேற்கொண்டார். யுத்த வெற்றி அவரைச் சார்ந்தது, தோல்வி அவரைச் சார்ந்தது, ராஜி பேசவேண்டிய சங்கடமான பொறுப்பும் அவரைச் சார்ந்தது. காந்திஜிக்கு உள்ள ராஜியேற்படுத்தும் திறமையினால் நம்முடைய தீவிர அரசியல் போக்குச் செழித்து வந்திருக்கிறது. அதிர்ஷ்ட வசமாக ஜவாஹர் விட்டுக் கொடுப்பதற்கு இணங்குவதில்லை.

உன்னதக் கருத்துக்களில் மூழ்கி உள்ளவர்களுக்குத் தாங்கள் செய்யும் தியாகங்கள் தெரிய வருவதில்லை. நோக்கம், திட்டம், முயற்சி, லட்சியம், வாழ்க்கை முறை, பட்ட கஷ்டம் இவ்வளவும் அவர்களிடம் பின்னிக் கிடக்கின்றன. இது ஒரு வகையான வாழ்வு; வேறு மாதிரி இருக்க முடி

யாது. ஆனால் பொது மக்களுடைய மனத்திலே, ஷேக்ஸ்பியர் சோக நாடகங்களில் காணப்படுகின்ற மனோதத்துவம் வேலை செய்ய ஆரம்பித்து விடுகிறது. கஷ்டம் என்றால் கஷ்டம்தான். அது அரசனைச் சார்ந்தாலென்ன? ஆண்டியைச் சார்ந்தாலென்ன? உயர்ந்த அந்தஸ்தில் உள்ளவனை அது சாருமானால் அப்பொழுது சோகம் பெரிதாகிறது. ஏற்றத் தாழ்வினால் உயர்த்திக்காட்டுகிறது. ஜவாஹரின் வெளிநாட்டுப் படிப்பென்ன, செல்வச் செழிப்பில் வாழ்ந்த இளமைப் பருவமென்ன? இப்பொழுது ஏழைகளிடம் காட்டும் கருணையென்ன, அவர்களுடைய சேவைக்காக அவர் மேற்கொள்ளும் கஷ்டங்களென்ன? இந்த மாறுபாடுகள் கவனிக்கப்படுகின்றன. தான் ஒரு மத்தியதர வகுப்பைச் சேர்ந்தவரென அவர் கூறிக்கொள்கிறார். ஆனால் உண்மையில் அப்படியல்ல. அற்பத்தன நோக்கங்களுக்காக, அற்ப மனத்தோடு பணத்தைச் சேர்ப்பதையே அந்த மத்தியதர வகுப்பு என்ற சொல் குறிக்கும். ஆனால் இவர் மனமிசைந்து தன்னிடமுள்ள மிக நல்ல பொருள்களை அள்ளி இறைத்து விடுகிறார். மத்தியதர வகுப்பார் இவ்விதம் அள்ளி இறைக்க மாட்டார்கள்.

அரசியல் வாதிகள் அன்பு செலுத்துவதும் இல்லை, வெறுப்பதும் இல்லை. ஒரு சிறந்த கருத்துக்காக வாழ்கிறோம், வருங்காலத்துக்காக வாழ்கிறோம் என்ற நினைப்பினால் கஷ்டப்பட்டுக்கொண் டிருக்கிறார்கள் இவர்கள். இதற்கிடையில், சுக துக்கங்களை அனுபவிக்கும் மனிதர்கள் தம்மைச் சூழ்ந்து வாழ்கிறார்களே என்பதை மறந்து விடுகிறார்கள். இவர்களுக்கு யாராவது செய்த நல்ல செயல்களும் அன்பான காரியங்களும் இவர்கள் பார்வையில் படுவதில்லை. அரசியல் உலகத்திலுள்ள இவர்கள் தேச சேவைக்காகக் கங்கணம் கட்டிக்கொண்டாலும், பட்ட கஷ்டத்துக்கோ, அடைந்த நஷ்டத்துக்கோ தமக்கு ஈடு கொடுக்கும்படி காங்கிரஸ் ஸ்தாபனத்தைக் கேட்ப

தில்லை என்று சொல்லிக்கொண்டாலும், இதற்கிடையிலும் தங்களுடைய சொந்த நன்மையையும் கவனிப்பதற்கு இடமிருக்கிறதென்று ஜவாஹர் காட்டியிருக்கிறார். துன்பப்படுகிறவர்களைப் பற்றியும் துணிவுள்ளவர்களைப் பற்றியும் அனுவசியமாக ஆகாயமளாவ அவர் புகழ்வது இல்லை. அவர் தானம் வழங்குவதில்லை; ஆனால் தன்னிடம் உள்ளதை மற்றவர்களுடன் பங்கிட்டுக்கொள்கிறார். தன் நாடு படும் கஷ்டம் அவருக்குத் தெரியும். இருந்தாலும் மனித இயல்புதானே, தனக்குத் தெரிந்த மனிதர்கள் படுங் கஷ்டத்தைக் கண்டு பெரிதும் வருந்துவார். விடுதலைக்காக மேற்கொண்ட பிரயாணம் கஷ்டமானதென்று தெரியும். பலனற்ற உணர்ச்சி வசப்பட்டவர் அல்லர். அவரிடம் மேன்மையான அடக்கம் இருக்கிறது. அந்த அடக்கமே பேசும்; நட்புண்டாக்கும். பிறர் துன்பங் கண்டு இரங்காதவர் அல்லர். லட்சியத்தைக் கைவிடாமல் அதற்காகப் பாடுபடுகிறவரைக் கண்டால் அவருக்குப் பிடிக்கும். அவரிடமுள்ள இந்தக் குணாதிசயங்கள் அவரிடம் ஜனங்கள் பிரியங்கொள்ளும்படி செய்கின்றன.

ஜவாஹருக்குச் சின்ன வேலை, பெரிய வேலை என்பது இல்லை. இந்தியா முழுவதுக்கும் சம்பந்தப்பட்ட ஒரு தீர்மானத்தை எழுத வேண்டுமா? எழுதுவார். ஆனாலும் அதே சமயத்தில், 'என்னுடைய, மாகாணத்தில் என்னுடைய சொந்த நகரமான அலஹாபாத்தில்......' என்று கூறுவதிலும் பெருமை கொள்வார். எந்த நிலைமையையும் இவர் உணர்ந்து சமாளித்துக்கொள்ள வசதி அளிப்பதாகவே இது தோன்றுகிறது.

அவருடைய ஊரில் மிகச் சிறிய காங்கிரஸ் கமிட்டியின் அழைப்பையும் அவர் மறுக்கமாட்டார். குறிப்பிட்ட நேரத்துக்கு அந்தச் சின்னக் கூட்டத்துக்கும் மாதாந்தரக் கொடி வணக்கம் செய்ய வந்துவிடுவார்.

அவர் உறுதியான ஜனநாயக வாதி. தனி மனிதனுக்கு

—அந்தத் தனி மனிதன் தன்னையே குறிப்பதானாலும்—விசுவாசம் செலுத்தாமல் ஸ்தாபனத்துக்கே விசுவாசம் செலுத்த வேண்டுமென்று கூறுவார்.

ஸ்தாபனத்துக்குச் சரியான தலைவர். முக்கியக் கொள்கைகளை நிறைவேற்றுவதில் தன் காரியதரிசியை நம்பலாம் என்ற நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டுவிட்டால், அப்படியே காரியத்தை அவரிடம் ஒப்படைத்து விடுவார். விளைவைக் கொண்டு முடிவு கட்டுவாரே தவிர, சில்லறை விஷயங்களைக் கவனிப்பதில்லை. நெடு நாளைக்கு ஒரே மனிதர் பதவியில் இருப்பதை வெறுக்கிறார். பொறுப்பான பதவிகளை வகிக்கக்கூடிய புது ஊழியர்கள் வந்துகொண்டேயிருக்கவேண்டும். அப்படியில்லாவிட்டால் ஸ்தாபனங்கள் வெகு சிலரையே நம்பிக்கொண்டிருக்க நேரிடும். இதனால் ஸ்தாபனங்கள் பலமிழந்துவிடும். ஒரு கருத்தின் அறிகுறியாக நாம் இருக்கிறோம். நாம் சேர்ந்திருக்கிற ஸ்தாபனத்தினால் நமக்கு உயர்வு கிடைக்கிறது. அதனால் பலம் பெறுகிறோம். நம்மால் அது பலமடைகிறது. ஸ்தாபனம் மனிதனுக்கு உதவுகிறது. மனிதன் ஸ்தாபனத்துக்கு உதவுகிறான். அவரைப் பின்பற்றுகிறவர்களும் அவருடைய போதனையை அறிந்தவர்களும் தனி மனிதன்மீது விசுவாசம் கொள்ளமாட்டார்கள். ஏதாவது ஒரு கருத்தையே பின்பற்றுகிறார்கள். அவரைப் பின்பற்றுபவர்கள் அவருக்கு எதிராக இருக்கவேண்டி வந்துவிட்டால் அவர்கள் மனம் வருந்துகிறார்கள். அவருக்கும் அவரைப் பின்பற்றுபவர்களுக்கும் இடையே இத்தகைய தொடர்பு நிலவுகிறது.

# ஜவாஹர்லாலும் காங்கிரஸ் ஒற்றுமையும்

**ஒரு காங்கிரஸ் சோஷலிஸ்டு**

பண்டித ஜவாஹர்லால் நேரு காங்கிரஸில் உயர்ந்த அந்தஸ்தை வகிக்கிறார். பொது மக்களின் செல்லப்பிள்ளை என்று அவரைச் சொல்வது மிகவும் சரி. மகாத்மாவுக்கு அடுத்தபடி அவர்தான் இந்நாட்டின் பொதுஜனத் தலைவர்.

ஆனால் இன்றைய நிலைமையில் காங்கிரஸ்த் தலைவர்களுக்குள்ளே யாரை மிகவும் தவறாக உணர்ந்திருக்கிறார்களோ அல்லது கொஞ்சமும் சரியாக உணராமல் இருக்கிறார்களோ என்றால், அவர் ஒருகால் ஜவாஹர்லால்தான். உறுதியில்லாதவர், திட்டமான கொள்கையில்லாதவர், மனக்குழப்பமுள்ளவர் என்று அவரைக் குறை கூறுகிறார்கள். காரியக் கமிட்டியிலுள்ள அவருடைய சகாக்கள் முதல் கீழே சாதாரணக் காங்கிரஸ்காரர் வரை உள்ளவர்கள் அநேகர் அவருடைய கருத்தைத் தங்களால் உணர முடியவில்லையென்பதை ஒப்புக்கொள்கிறார்கள்.

ஜவாஹர் சில வாக்குவாதங்களை ஆரம்பிப்பார், அதன் முடிவு எதிரிடையாக வந்து சேரும் என்று அவருடைய சகாக்களில் ஒருவர் கூறினார். அல்லது வெளி நாட்டு விமர்சகர் ஒருவர் கூறியதுபோல அவர் மூன்று பக்கங்களில் சேரக்கூடிய அரசியல் வாதி—ஒரு விஷயத்தைச் சரியில்லை என்பார், பிறகு சரி யென்பார், கடைசியில் நடுநிலைமை வகிப்பார்!

காங்கிரஸ் ஸ்தாபனத்தில் தன்னுடைய நிலைமையை உறுதி செய்துகொள்ளாமல் இருக்கிறார் என்று அநேகர்

ஜவாஹரைக் குறை கூறுகிறார்கள். காங்கிரசுக்குள் தன்னுடைய குழு, கட்சி என்பதை அமைக்கமாட்டேனென்று தனித்து இருக்கிறார். ஆபத்தான சமயங்களில் இவருடைய சகாக்கள் இவரைப் பயன்படுத்திக்கொள்கிறார்கள், சாதாரண காலங்களில் இவரை முக்கிய பதவிகளிலிருந்து வெளியேற்றி விடுகிறார்கள் என்றும் சொல்லப் படுகிறது.

ஜவாஹர்லால் தேர்தல்களை ஜயித்துக் கொடுத்தார். ஆனால் அவருக்கு அரசாங்கத்தில் பதவியில்லாமல் போய் விட்டது!

காந்திஜிக்கு அடுத்தபடி காங்கிரஸில் ஜவாஹருக்கே செல்வாக்கு அதிகம். கடந்த ஐந்து ஆண்டுகளில் நடந்தவற்றை மட்டும் கவனிப்போம். லட்சுமணபுரியில் காங்கிரசுக்குப் புதிய மொழியைக் கற்பித்தார். சோஷலிஸத் தன்மையை அதிகப்படுத்தினார். சர்வ தேசிய மனப் போக்கை அளித்தார். உப்புச் சப்பற்ற தேர்தல் அறிக்கையைக் கிழித்தெறிந்துவிட்டு, கணீர் என்று ஒலிக்கும் வாக்கிய அமைப்புடன், சரித்திரத்தை உண்டாக்கிய அந்த அறிக்கையை எழுதினார். அவருடைய மின்னல் வேகம், இயல்பான ஊக்கம், உணர்ச்சி பெற்ற தலைமை ஆகியவைகளே காங்கிரசுக்கு எங்கும் தேர்தல்களில் வெற்றிமுழக்கத்தைக் கொடுத்தன. நெருக்கடியான ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஜவாஹர் முன்வந்து பொறுப்பை வகித்துக் காங்கிரஸை முன்னிலும் அதிக மேன்மையடையச் செய்து வைத்திருக்கிறார். சாதாரண நிலைமை ஏற்பட்டவுடனே அவர் பெரும் பதவியிலிருந்து வழக்கமாக விலக்கி கொள்கிறார். இதர அரசியல் வாதிகள் செய்வதைப்போல, இவர் ஏன் தன் நிலைமையை உறுதி செய்துகொள்ளவும் ஸ்தாபன அமைப்பு மூலமாகத் தன் செல்வாக்கைப் பெருக்கிக் கொள்ளவும் மறுக்கிறார்?

ஜவாஹர் சாதாரண அரசியல் வாதியல்லர். இந்திய

நிலைமையை அவர் பார்க்கும் முறை வேறு. அதில் அவருடைய பங்கும் அசாதாரணமானது.

தன்னுடைய அற்புதத் திறமைகளை அவர் நன்குணர்ந்திருக்கிறார். ஜனங்களிடம் தனக்குள்ள செல்வாக்கையும் அவர் நன்கு அறிவார். ஜனங்களை உணர்ச்சியடையும்படி செய்வதில் அவருக்கு ஆனந்தம் அதிகம். சாதாரண அரசியல் வாதியின் தந்திரச் செய்கைகளால் தன்னை மாசுபடுத்திக்கொள்வதை அறவே இகழ்கிறார்.

எல்லாவற்றிற்கும் மேலாக, காங்கிரஸின் ஒற்றுமையைக் காப்பாற்ற அவர் விரும்புகிறார். இக்காரியத்தைத் தன்னால் மட்டுமே செய்ய முடியுமென்று உறுதியாக நம்புகிறார். இதை நாம் உணர்ந்தால்தான் அவருடைய கொள்கைகளை நாம் உணரமுடியும். நெருக்கடியான ஒவ்வொரு கூட்டத்திலும் அவரே ஒற்றுமையை உண்டாக்கியிருக்கிறார். காங்கிரஸின் அங்கங்கள் சிதறிப்போகாதவாறு பிணைக்கும் மெல்லிய பட்டுநூல்போன்று அவர் இருக்கிறார். எந்தவிதமான கட்சியமைப்பையும் தனக்குப் பின்பலமாக வைத்துக்கொள்ளாததால் இதை அவரால் சாதிக்க முடிகிறது. தன்னுடைய கோஷ்டி, கோட்டம், கட்சியென்பது ஒன்றை அமைத்துக்கொள்ள மறுப்பதன் மூலம் திறமையாக அதிர்ச்சிகளைச் சமாளிக்கவும், ராஜி பேசவும், ஒற்றுமையை ஏற்படுத்தவும், அவரால் முடிகிறது. கோஷ்டி கோஷ்டியாகத் திரியும் கூட்டத்துக்குள்ளே அவர் மாத்திரம் தனிமனிதனாக இருக்கிறார்.

ஏதாவது பிரசினையின்மீது காங்கிரசுக்குள் பிளவேற்படும்போது அவர் எந்தக் கட்சியிலும் சேருவதில்லை. திரிபுரி நெருக்கடியின்போது அவர் மாத்திரம் தனியாக இருந்து எந்தக் கட்சியிலும் சேராமல், தகராறில் ஈடுபடாமல், காங்கிரஸ் ஒற்றுமைக்கு எடுத்துக்காட்டாக இருந்தார். அதனோடு அந்தச் சந்தர்ப்பத்தைத் தன் சக ஊழியர்களுக்கு உண்மையான பெரிய பிரசினைகள் எவை,

சரியான முழுநோக்கு எது என்பவைகளை எடுத்துக்காட்டவும் உபயோகித்தார்.

காங்கிரஸ் சர்தார்களின் தாக்குதல்களிலிருந்து சோஷலிஸ்டுகளைக் காத்திருக்கிறார். அனுபவ முதிர்ச்சியுள்ள காங்கிஸ்ரகாரர்களை, கம்யூனிஸ்டுகள் அவதூறாகப் பேசுவதுகண்டு அவர்களைத் தகர்த்திருக்கிறார். அவர் யார் பக்கமும் சேருவதில்லை. எந்த நோக்குடனும் ஐக்கியப்படுவதில்லை. எல்லாக் கட்சிகளுக்குள்ளும் பொதுவான அம்சத்தைக் கண்டுபிடிப்பதிலும் மாறுபடும் கட்சிகளை அந்தப் பொது அம்சத்துக்கு இழுப்பதிலும் அவர் ஈடுபடுகிறார். இவ்வாறு அவ்வப்பொழுது ஏற்படும் தகராறுகளையும் சச்சரவுகளையும் நீக்கி நிரந்தரமான ஒற்றுமை ஏற்படுத்தப் பாடுபடுகிறார்.

ஒவ்வொரு நெருக்கடியின்போதும் அவர் காங்கிரஸை ஒருபடி உயர்த்தியிருக்கிறார். தேர்தல்களில் வெற்றி வாங்கிக்கொடுத்தார். ஆனால் காங்கிரஸ்காரர்களில் பெரும்பாலானவர்கள் தன்னையொட்டி வரமுடியாதென்பதை அறிந்து அவர் அரசாங்கத்தை நடத்த மறுத்துவிட்டார். தனக்காக அவர்களையும் துரிதப்படுத்த அவர் விரும்பவில்லை. அவ்விதம் செய்வது இயக்கத்தைப் பலவீனப் படுத்தி விடும். காங்கிரசுக்குள் ஒற்றுமையுண்டாக்குபவராக இருப்பதால் யாரையும் இவரால் பூர்ணமாகத் திருப்தி செய்ய முடியவில்லை. சிறிதும் வளைந்துகொடுக்காத கருத்துள்ளவர்களுக்கு இவர் உறுதியற்றவர்போலத் தோன்றுகிறார். என்றாலும் வளைந்து இணங்கிச் செல்வதன்மூலம் கருத்துக்கள் வளர்கின்றன என்பதை இவரே நன்கறிவார்.

இன்று மீண்டும் காங்கிரசுக்குள் கருத்துத் தகராறுகள் தோன்றியிருக்கின்றன. இவர் எந்தக் கட்சியிலும் சேர மறுக்கிறார். பல கட்சியார்களையும் ஒன்று சேர்க்க முயல்கிறார். அவர்களுடைய வேற்றுமைகள் மறைந்து எங்கு ஒன்றுபடுகின்றன என்பதை எடுத்துக்காட்டுகிறார்.

வைசிராய் பேசிவிட்டார். காங்கிரஸின் நல்லெண் ணம் புறக்கணிக்கப்பட்டுவிட்டது. மீண்டும் ஜவாஹர்லால் நெருக்கடி-காலத் தலைவராகக் கிளம்புவார் ; கிளம்பவேண் டும். ஜனங்களுக்கு உணர்ச்சியூட்டுவார். புரட்சிப் பாதை யில் பின்னும் ஒரு கட்டத்தைத் தாண்டும்படி காங்கிரஸை நடத்திச்செல்வார். அவர் பதுங்கினால் ஏற்படும் பாய்ச்சல் உறுதியானதாகவும் பலன்வாய்ந்ததாகவும் இருக்கு மென்பதே அர்த்தம். வளைந்து நெளிந்து ஜாக்கிரதை யாகச் செல்லும் காலம் முடிந்துவிட்டது. தாக்கவேண்டிய காலம் வந்துவிட்டது. ஜவாஹர் தனது அற்புத சக்தியை வெளிப்படுத்தி, காங்கிரஸைப் போராட்டத்திற்கு முனைந்து நிற்குமாறு செய்துவிடுவார். போராட்டத்தை இயங்கு விக்கும் மின்சக்தியாக விளங்குவார். அவரைக் குறைகூறு பவர்கள் வாய் அடைபட்டுவிடும். மீண்டும் நாடெங்கும், 'ஜவாஹர்லால் கி ஜே' என்ற ஆரவாரம் முழங்கும் !

—நாஷனல் ஹெரால்டு, 1940.

# உலகப் பிரஜை

ஹோரஸ் அலெக்ஸாந்தர்

பெரிய மனிதர்களை அல்லது பிரபலஸ்தர்களைப்பற்றிய நம்முடைய அபிப்பிராயத்தை அவர்கள் உயிரோடிருக்கும்போதே எழுதி அச்சுக்குக் கொண்டுவருகிற தற்கால வழக்கம் எனக்குப் பிடிக்கவில்லை. கதாநாயகன் போர்க்களப் புழுதியிலும் இரைச்சலிலும் இருந்து நெடுந் தொலைவுக்குப் போய்ச்சேரும் வரை அவரைப்பற்றி நாம் சொல்ல ஆசைப்படுகிற அத்தனையும் சொல்லமுடியாது. அவரைப் புகழ்வதுமட்டுமே நம்முடைய வேலையென்றால் நாம் சொல்லுவது அத்தனையும் சரியான சொல்லோவியம் ஆகாது; எல்லாம் வழவழா தான்.

சில விஷயங்களில் நேருவைக் குறைகூறவேண்டிய வனாக இருக்கிறேன். 'இவர் ஒரு கட்சியைத் தானே பார்க்கிறார். தன்னுடைய சொல்வன்மையினால் தானே இழுக்கப்பட்டு விடுகிறார். ஏகாதிபத்தியம், பாசிஸம், இன்னும் இவைபோன்ற சில வார்த்தைகள் அரசியல் கட்சித் தலைவர்களின் மொத்தச் சரக்குகள். சிக்கலான பிரசினைகள் வரும்போது அவைகளை வைத்துக்கொண்டு விளாசிவிடுகிறார்'' என்று நான் எண்ணுவது உண்டு. அவருடைய பேச்சுக்களையும் எழுத்துக்களையும் படிக்கும்போது அடிக்கடி இந்த எண்ணமே ஏற்படுகிறது. ஆயினும் அதன்விளைவு என்ன? இதுதான். ஜவாஹர் தாராளமனோபாவம் உள்ளவர். ஆழ்ந்ததும் நிலையானதுமான உணர்ச்சியுள்ளவர். இந்திய மக்கள் எவ்வளவு அநீதிக்கும் அடக்குமுறைக்கும் இன்னல்களுக்கும் உள்ளாகிக் கஷ்டப்படுகிறார்கள் என்பதை உணரும்போது, பொதுவாக ஆங்கிலேய (பப்ளிக் ஸ்கூல்)

பள்ளிக்கூடங்களில் பயிற்சி பெற்ற ஆங்கிலேயர்கள் அருமையாகப் போற்றும் குணங்களான சாவதானம், அமைதி, சமநிலை ஆகியவை இவரைவிட்டுப் பறந்து விடுகின்றன. சிலபேர் நுட்பமான வாதத்திறமையோடு விடாது பேசுவார்கள். எங்காவது அடக்குமுறை அட்டூழியம் என்ருல் அவர்களுக்கு அணுவளவும் ஆத்திரம் பொங்காது. அப்பேர்ப்பட்டவர்களுடைய சாமர்த்தியப் பேச்சு, இவருடைய ஐந்துவிஞடிப் பேச்சுக்குமுன், கனல் பறக்கும் பேச்சுக்குமுன், நிற்காது. இதை நான் நன்ருக அறிவேன்.

விசேஷமான சில முக்கிய சம்பவங்கள் நினைவுக்கு வருகின்றன. அவற்றை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். எனக்கு ஒரு நண்பர்; டச்சுக்காரர். ஐரோப்பாவில் மத சம்பந்தமாகப் பிரபலமானவர். மேஞட்டு இளைஞர் உள்ளத்தைத் நன்குணர்ந்தவர். பத்துப் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னுல் அவர் நேருவைச் சந்தித்துவிட்டு, 'ஒடுக்கப்பட்டவர்களுக்கு உற்ற தலைவர். சுயநலமற்றவர். தற்கால இளைஞர்களின் உணர்ச்சி, கற்பனை, லட்சிய ஆர்வம் முதலியவற்றை ஒருங்கே கவரத் தக்க மனிதர் இவர்' என்று கூறினுர்.

ஒரு சமயம் நேரு பர்மிங்ஹாமிலுள்ள எங்களது வீட்டுக்குவந்து விருந்தினராகத் தங்கியிருந்து எங்களைக் கௌரவப்படுத்திஞர். அப்பொழுது தேர்தல் காலம். நாவல் ஆசிரியை நயமி மிச்சிசனின் கணவர் எங்களது தொழிற் கட்சி அபேட்சகர். நயமி மிச்சிசன் எங்களைப் பார்க்க வந்தார். நேருவை அவளுக்கு அறிமுகம் செய்துவைத்தோம். வந்தவர் கீழே தரையில் உட்கார்ந்தார். இதைக்கண்ட நேரு சிறிது மனம் சங்கடப்பட்டுக்கொண்டு, 'அதிசயமாக இருக்கிறதே, ஏன் இந்த நடத்தை?' என்று கேட்டார். 'இது தான் மரியாதையாகத் தோன்றுகிறது' என்ற பதில் கிடைத்தது.

தன்னுடைய கொள்கைகளையோ தேசக்கொடியையோ விட்டுக்கொடுப்பதைக் காட்டிலும் மீண்டும் மீண்டும் சிறைச்சாலைக்கு மகிழ்வுடன் சென்று, அனேக ஆண்டுகளை அங்கேயே செலவழித்தவர் நேரு. சிலர் அரசியல், சமூக மாறுதல்கள் தேவையென்று விடியவிடியப் பேசுவார்கள். ஆனால் தங்களுடைய குறிக்கோளை நிறைவேற்றுவதற்காக ஒரு சிறிதும் துன்பம் அனுபவித்திருக்கமாட்டார்கள். இந்த வாய் வேதாந்திகள், நேருவைப் போன்ற லட்சியவாதிகளைச் சந்திக்கும்போது அவருக்கு முன் கீழே அமருவதே மரியாதை என்பதை உணருவார்கள். சுதந்தரமாக இருந்துகொண்டு இன்பசுகங்களை நாம் அனுபவிக்கிறோமே, இந்தமாதிரி அனுபவிக்க நேருவுக்குப் பிடிக்கவில்லையா? நன்றாகப்பிடிக்கும். ஆனால் தன்னுடைய சொந்த சுகத்தைக் காட்டிலும் இந்தியாவின் விடுதலையை அதிகமாக அவர் விரும்புகிறார். கோடிக்கணக்கான மக்கள் அச்சத்திலிருந்தும் வறுமையிலிருந்தும் விடுதலைபெற வேண்டுமென்று ஆசைப்படுகிறார். இந்தியர்கள் தங்கள் புகழைப் பெருக்கிக்கொள்ள ஜெயிலுக்குப் போகப் பிரியப்படுகிறார்களென்று இங்கிலாந்திலுள்ள ராஜதந்திரிகளும், இந்தியாவிலுள்ள அதிகாரிகளும், இதரரும் கூறக்கூடும். சட்டசபைத் தேர்தலுக்குக் கொஞ்சநாளைக்கு முன்னால் எப்படியாவது ஒருவாரத்துக்கு ஜெயிலுக்குப்போய்த் திரும்புகிறபடி ஏற்பாடு செய்துகொண்டால் அவர்கள் கூறுகிறபடி அது பித்தலாட்டமே. ஆனால் வருஷாவருஷம் ஜெயிலுக்குப்போகிறவர்கள், மறைமுகமான நோக்கங்களுக்காகப் போகமாட்டார்கள். ஜெயிலுக்குப் போகிறவர்களைப்பற்றி இவ்வாறு கூறுகிறவர்கள் தங்களது அற்பத்தனத்தையே காட்டுகிறார்கள்.

நேரு, இளைஞராக இருந்தபோது, பெரும்பாலான இந்திய மாணாக்கர்கள் கொண்டிருந்த அளவு அரசியல் உணர்ச்சி உள்ளவராக இருக்கவில்லை. கேம்பிரிட்ஜில்

படிக்கும்போது, மாணுக்கர் சங்கத்தில் சேர்ந்தாற்போல் இரண்டு மூன்று மாதங்களாக ஒரு தடவைகூடப் பேசாத தற்கு அபராதம் செலுத்தியதாக என்னிடம் அவர் கூறியது ஞாபகம் இருக்கிறது. ஆனால் இந்தியாவில் ஏழைகளின் பரிதாப நிலையை நேரில் கண்டு உணர்ந்தபோது அவர் இதயத்தில் அரசியல் உணர்ச்சி கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்துவிட்டது.

அவருடைய பார்வை குறுகிய தேசிய எல்லைக் கோட்டை மீறியது. அவர் உலகப் பிரஜை. துணிவு மிகுந்தவரும் சுயநலமற்றவருமான நேரு இன்றைய உலக சபையில் அவசியம் தேவையாக இருக்கிறார். உலகச் சீரமைப்பில் ஒரு முக்கிய சிற்பியாக அவர் இருக்க வேண்டியது அவசியம்.

'காந்தியும் நேருவும் எப்படி இந்தமாதிரி நெருங்கிய சகாக்களானார்கள்? காந்தி மதப் பற்றுள்ள மனிதர். நேரு அதைப்பற்றி அக்கறையில்லாதவர். இயந்திரத் தொழில் முன்னேற்றத்தை விரும்பாத கர்நாடகப் பேர்வழி காந்தி. நேருவோ இயந்திர மயமாக்க வேண்டுமென்ற உறுதி கொண்ட மார்க்ஸிய வாதி. காந்தி சமாதானப் பிரியர். நேருவோ நவீன ஆயுதப் பயிற்சியில் தேர்ந்த இந்திய ராணுவம் வேண்டுமென்கிறவர். இப்படி மாறுபட்ட கருத்துக்களைக் கொண்ட இவர்களுடைய கூட்டுறவு ஓர் உபாயமானது; உயர்வற்றது; நெடுநாள் ஓடாது' என்று இவ்வாறு கூறும் மேனாட்டு அரசியல் அறிஞர்களை நான் அடிக்கடி சந்தித்திருக்கிறேன். அவர்கள் கூறுவது உண்மையல்ல. காந்தி - நேரு கூட்டுறவு புனிதமானது; இந்த மாறுபாடுகளை மீறிய ஒற்றுமைச் சக்திகளால் பிணைக்கப்பட்டது. மனிதனுக்கு மனிதன் நீதி வழங்கவேண்டும், சமூக வாழ்வில் நேர்மை யிருக்கவேண்டுமென்ற பேரவா இருவர் இதயத்திலும் கனல் விட்டுக்கொண்டிருக்கிறது. காண்பதற்கரிய பொதுநலப் பற்று, லட்சியத்துக்குத்

தன்னைப் பூரணமாக ஒப்படைத்தல் ஆகிய குணங்களைப் பரஸ்பரம் காண்கின்றனர். அவர்களுக்கிடையே நிலவும் நெருங்கிய நட்பும் பரஸ்பர ஆழ்ந்த மரியாதையும் அவர்களை ஒன்று சேர்க்கின்றன. இத்தகைய உயர் குணங்கள் அமைந்த இரண்டு தலைவர்களைக் கொண்ட நாடு அதிர்ஷ்டம் செய்தநாடு.

# அர்ப்பணம் செய்தவர்

**சிக்ரிட் பீட்டர்ஸன் கௌல்டு**

மாலை நேரம். உலகம் அழகைத் தளிர்த்துக்கொண்டிருக்கும் அமைதியான சமயம். 'என்ன இனிமை இனி?' என்ற எதிர்நோக்கு எங்கும் பரவி மூடியிருந்தது. யமுனை நதிக் கரையில் அன்று உல்லாஸமாகப் பொழுதுபோக்கப் போயிருந்தோம். வஸந்தமாக இருந்தாலும் என்ன? கொஞ்சம்கொஞ்சமாகப்பொழுதுபோய்க்கொண்டேயிருந்தது. பொன் மயமான மணற் பரப்பின்மீது எங்களுடைய பிள்ளைகள் ஓடி விளையாடிக் கொண்டிருந்தார்கள். நீல மயக் குட்டைகளில் மூங்கிக் குளித்தார்கள். தாங்கள் வந்து போனதற்கு அடையாளமாக விட்டு வைப்பதற்கு ஆனந்தமாக மணல் வீடு கட்டினார்கள். எங்களுடைய இரண்டு பிள்ளைகளும் அவர்களுடைய மூன்று பிள்ளைகளும் சேர்ந்து விளையாடிச் சினேகமானதன் மூலமாக உல்லாஸக் கோஷ்டிகள் இரண்டும் பழக்கமடைந்தன. இப்பழக்கம் நாளடைவில் ஆனந்தபவனத்தில் இன்பகரமான நட்பாக முடிந்தது. பண்டித ஜவாஹர்லாலின் நட்பும் கிடைத்தது.

அவரை ஏற்கெனவே அவருடைய எழுத்துக்களின் மூலம் அறிந்துகொள்ளும் சந்தர்ப்பம் இருந்தது. ஆக்கமும் வேகமும் உள்ள சிந்தனையாளராக அவர் அதில் தென்பட்டார். இந்தியாவையும் இன்றையச் சம்பவங்களையும் பற்றி மாத்திரம் அவர் கருதிக்கொண்டிருக்கவில்லை. உலகத்தையும் அதன் வருங்காலத்தையும் சிந்திக்கும் முன்னேற்றமுள்ள அரசியல் வாதியாகத் தோற்றம் அளித்தார். அவரு

டைய சுய சரித்திரத்தைப் படிப்பதே ஒரு அனுபவம். தூய அழகிய ஆங்கில நடைமூலம் ஒரு வாழ்வு—எல்லோரிடமும் ஊக்கத்தோடு அன்பு செலுத்தியதும், எத்தனையோ பேருடன் நட்புப் பாராட்டியதும், அனுபவ மாறுதல்களை உற்றுணர்ந்து விழிப்புடனிருந்ததும், பெரும் சங்கடங்கள் வந்தபோது துணிந்து சமாளித்ததும், நீண்ட நாளாகப் போராடுகின்ற லட்சியத்துக்காக ஊக்கத்தோடு ஓய்வில்லாமல் முயன்றதும் ஆகிய அனுபவங்களை, வாழ்ந்த வாழ்வைச் சுய சரித்திரத்தில் பார்க்கிறோம்.

ஆனால் அவரை நேரில் சந்திக்கும்போது அவரைப் பற்றி இன்னும் எவ்வளவோ அறிந்துகொள்கிறோம். எழில் முகம்; அழகுக்கென்றே அமைந்த முகவெட்டு; அந்தக் கண்கள்; அவற்றின் ஆழ்ந்த பார்வை, சந்தர்ப்பத்திற்கேற்ற வாறு பொறி பறக்கும், கருணை சுரக்கும், அல்லது கனவு காணும். அவரை நேரில் காணும்போது இச்சிறப்புகளை மறந்து விடுகிறோம். அவருடைய தோற்றப் பொலிவு, இயற்கையில் எங்கு அழகு மிகுந்து விளங்குகிறதோ அதையும் பின்னடையச் செய்யுமாறு ஒளி வீசுகிறது. அவருடைய தோற்றத்தில் கம்பீரம், பணிவுடைமை, பண்பு, உலக முழுமையின்மீதும் பரிவு ஆகியவை யாவும் காணப்படுகின்றன.

அன்போடு வரவேற்கிறார்; தமாஷாகக் கேலி பண்ணுகிறார்; குலுங்கக் குலுங்கச் சிரிக்கிறார். வீணத்தனத்தையோ முட்டாள் தனத்தையோ கண்டால் சகிப்பதில்லை. இத்தனைக்கும் மத்தியில் ஏதோ ஒன்று, 'எல்லோரையும் போலவே இவரும் இருக்கிறார். இவர் மனிதர்களுடன் ஐக்கியமானவர். சமுதாயத்தைச் சேர்ந்தவர்' என்பதை நமக்கு உணர்த்துகிறது. ஜனங்களிடத்திலும் அவர்களது வாழ்விலும் அவர் கொண்டுள்ள உண்மையான அக்கறையின் காரணமாக ஒருகால் இவ்வாறு நமக்குத் தோன்றலாம். ஒரு சின்னச் சம்பவத்தை உதாரணமாகச் சொல்

லட்டுமா? சமீபத்தில் அவர் காஷ்மீருக்குப் போய்த் திரும்பிவந்த சமயம். என் கணவரும் நானும் அவரைப் பார்க்கச் சென்றிருந்தோம். வேலையாட்கள் எங்களது வரவைக் கண்டு மகிழ்ந்தவர்கள்போல் புன்சிரிப்புடன் அழைத்துச் சென்றார்கள். ஆனந்த பவனில், விசாலமான சலவைக்கல் பாவின அறைக்குச் சென்றோம்.

மேற்கு வராந்தாவில் ஏராளமான கிராமவாசிகளுக்கு மத்தியில் ஜவாஹர் இருந்தார். அவருடைய தரிசனத்திற்காக அந்தக் கிராமவாசிகள் நெடுந்தூரத்திலிருந்து வந்திருந்தவர்கள். பிறகு ஜவாஹர் எங்களிடம் வந்தார். தூய கதராடை யணிந்திருந்தார். இருகைகளாலும் எங்களை வரவேற்றார்.

மெத்தையாசனங்களில் அமர்ந்தோம். "உங்களை மீண்டும் பார்ப்பது மிகுந்த மகிழ்ச்சி தருகிறது. ஆனால் நாங்கள் அனேகமாக வருவதேயில்லை" என்றேன்.

"ஏன்?" என்று கேட்டார்.

"உங்களைப் பார்க்க ஏராளமான பேர் வருவார்கள். உங்களுக்கு வேலையும் அதிகம் இருக்கும் என்பது தெரிந்தே இங்கு அடிக்கடி வராமல் இருப்பதும் உங்களுக்கு நல்லதென்று இருந்தோம்" என்றேன்.

"அதுதான் உங்கள் தவறு" என்று சிரித்துகொண்டு உடனே சொன்னார் அவர்.

இவ்வளவே வார்த்தைகள். எனினும் இப்பெரிய மனிதர் காட்சிக்கு எளியராகவும் உபசாரம் செய்வதில் சிறந்தவராகவும் இருக்கிறாரென்று எத்தனையோ பேர் சொன்னது உண்மையென்பதை இவ்வார்த்தைகள் நிரூபித்தன. ஒரு நண்பரை அனேக வருஷங்களாக இவர் பார்க்காமல் இருக்கலாம். அவரை நினைவு வைத்துக்கொண்டேயிருப்பார். தனது அவசரச் சுற்றுப் பிரயாணத்தின் போது வேலை நிறைந்த நாட்களில் அவரை க்ஷேமம் விசாரிக்க ஓடிவிடுவார்.

இந்தியாவையும் அதன் கஷ்டகாலத்தையும் நினைத்தால் நமக்கு நேரு நினைப்பு வந்துவிடும். நேருவை நினைத்தால், 'அவர் கசப்பாக இருக்கிறாரா?' என்ற கேள்வி பிறக்கும். இல்லை, சாதாரணமாகச் சொன்னால் கசப்பு இல்லை. அதைக்காட்டிலும் உயர்ந்த ஒரு பணிக்குத் தன்னை அர்ப்பணித்தவர். முதல் மூச்சில் தன்னுடைய எதிரியின் குறைகளை அச்சமின்றி வெளிப்படுத்துவார். அடுத்த மூச்சில் அவருடைய நற்குணங்களைச் சிலாகித்துக் கூறி மதிப்புக்கொடுப்பார். தன்னிஷ்டப்படி முடிவு செய்வதற்கும், மனிதனுக்கு மரியாதை செய்வதற்கும் இந்தியாவுக்குச் சுதந்தரம் வேண்டுமென்று அவர் கூறினால் அதே சுதந்தரம் உலக முழுவதற்கும் வேண்டுமென்றே கூறுகிறார். தன் இனத்தவருக்கும் அந்தச் சுதந்தரம் வேண்டுமென்கிறார், அதனால் அவருக்குத் துன்பம் வருவதாயிருந்தாலும்கூட.

குழந்தைகளிடத்தும் புகழாளரிடத்தும் பிரியமுள்ள இவர், கலகக்காரரான இவர், மனிதர்களுக்குப் புத்துயிர் ஊட்டுகின்ற இவர், எழுத்து வன்மையும் பேச்சுவன்மையும் பெற்ற இவர், தன்னை ஒரு உயர்ந்த லட்சியத்துக்காக ஒப்படைத்திருக்கிறார். மனோதிடமும் நிச்சயமும் உள்ளவர். அதனால் உயர்வடைகிறார். அவருக்கு ஊக்கமளித்து அவரைத் தன் வசமிழுக்கும் இமயச் சிகரங்களைப் போன்றிருக்கிறார் அவரும். போரில் ஈடுபட்டிருக்கும்பொழுது மிகப் பெரிது எனப்படுவது எதுவும் அவருக்குப் பெரிதல்ல. எங்கே செல்ல வேண்டுமென்பது அவருக்குத் தெரியும்.

# பொது அபிப்பிராயம்

## பேஸில் மாத்யூஸ்

சில புத்தகங்களை வாசித்ததை என் வாழ்வில் நிகழ்ந்த பெரிய சம்பவம் என்று நான் கருதுவேன். ஆனால் அப்படிப்பட்ட புத்தகங்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். அவைகளிலும், ஒரு மனிதனை நேரில் காண்பிப்பன, ஒரு தேச மக்களின் விதியை நிர்ணயிக்கும் சக்திகளை அறிவிப்பன வெகு சிலவே. நான் இந்தியா அடைவதற்காகச் செங்கடலையும் அரபுக்கடலையும் கடக்கும்பொழுது ஜவாஹர்லால் நேருவின் சுயசரித்திரத்தின் 700 பக்கங்களும் தங்களுடைய செல்வத்தை அள்ளித் தந்தன. புத்தகத்தைப் படித்து முடிக்கும்போது, 'இப்புத்தகத்தைப் படிக்காதவர்கள் தற்கால இந்தியாவை அறிய முடியாது' என்று ஹாலிபாக்ஸ் பிரபு சொன்னதாகக் கூறப்பட்ட அபிப்பிராயம் ரொம்பச் சரி யென்பதை உணர்ந்தேன்.

அவருடைய சுய சரித்திரத்தைப் படிக்கும்போது, ரூப்பெர்ட் இளவரசனுடன் ஹாம்லெட் இளவரசனும் கலந்தமாதிரியல்லவா இருக்கின்றது என்று என் மனத்தில் பளிச்சென்று தோன்றியது. நேருவோடு ஒருதடவை பேசியதும் இந்த எண்ணம் மேலும் வலுப்பெற்றது. அவர் தன் சொந்த அசௌகரியத்தையோ ஆபத்தையோ சிறிதும் பொருட்படுத்துவதில்லை. எதிரியின் படைகளுக்குள்ளே வேகமாகப் பாய்ந்து தாக்குவதற்குத்துடித்துக்கொண்டிருக்கும் குதிரைவீரன்போல் இருக்கிறார். சில சமயங்களில் தன்னுடைய படைகளும் பின் நிற்க, தனக்கும் அவர்களுக்கும் தொடர்பில்லாதபடி அவ்வளவுதூரம் முன்னால்

தனியே சென்றுவிடுகிருர். கூடவே டென்மார்க் இளவரசனும் எண்ணுத எண்ணிப் புண்ணுகும் நெஞ்சோடு, "காலம் கெட்டுப் போச்சு. ஐயோ, என் தீவினையே! இதைச் சரிப்படுத்த நானு வந்து பிறக்கவேண்டும்" என்று ஓலமிடுவதையும் காண்கிருேம். மேற்குஉலகம் தன்னை இழுப்பதை ஜவாஹர் உணருகிருர். ஹாரோவும்.கேம்பிரிட்ஜும் தன் மனத்தை ஆளுவதையும், இந்தியாவிலே நிர்ப்பந்தமாக வாழவேண்டிய அன்னியனைப்போலத் தான் இருப்பதையும் உணருகிருர். இருந்தாலும் தான் முற்றிலும் மேனுட்டான் ஆகிவிடாதபடி, பலமுள்ள ஏதோ ஒன்று தன்னை இந்தியனுக்குவதையும் காண்கிருர். ராஜதந்திரிக்கு வேண்டிய சரியான பார்வையைப் பெற்றிருக்கிருர். ஆனுல் தன்னுடைய காரியங்கள் பலரையும் கவரும்படி செய்யக் கூடிய இயற்கை உள்ளுணர்வோ, அல்லது பாமர மக்களின் நாடி யறியக்கூடிய சக்தியோ காந்திஜியிடம் இருப்பது போல இவரிடம் இல்லை. சோஷலிஸத்தில் தீவிரமாக இருந்தாலும் சுபாவத்திலே அவர் பிரபு. சாதாரண ஜனங்களைச் சேர்ந்தவராகத் தன்னைக் கருத இயலாத பிரபு. தான் இந்திய மண்ணைச் சேர்ந்தவரென்பதைக் காந்தி இடையருது உணர்த்துவதுபோல மேனுட்டுப் பண்பில் ஊறிய இவரால் உணர்த்த முடியவில்லை. இந்தியர்களுடைய கூட்டத்திலே காந்திஜி யிருந்தாராஞல் அவர் அக்கூட்டத்தைச் சேர்ந்தவரென்பது தெளிவாகத் தெரிகிறது. ஆனுல் நேருவிடத்திலோ தனியான யோசனையும் ஒட்டாத தன்மையும் காணலாம். ஆயிரக்கணக்கான மாணுக்கர்களிடையே இருந்தாலும் அல்லது வேறு கூட்டத்தில் இருந்தாலும் அவர்களோடு தானும் ஒருவர் என்ற உணர்ச்சி அற்றிருப்பார். அதிலும் அவர் இந்திய உடையை அணிந்திருக்கும்போது முன்காலத்து ரோமாபுரி வாலிபப் பிரபுவைப்போலக் காட்சியளிக்கிருர். நான் பார்த்தமட்டும், கதர்க் குல்லாய் அணிந்த காங்கிரஸ்காரர்களுக்

குள்ளே அவர் ஒருவர்தான் கதர்க் குல்லாய் அணிந்து வுடன் அரசன்போலக் காணப்படுகிறார்.

நேருவுடன் பேசிக்கொண் டிருக்கும்பொழுது ஒரு விஷயம் புலனாயிற்று. மனிதர்கள் சம்பந்தப்பட்டமட்டும் யார் மேலாவது அவருக்குக் கோபமுண்டு என்றால் நிச்சயமாக அது பிரிட்டிஷார்மீது அல்ல. ஆனால் 'மடி நாய்' போன்ற சில இந்தியர்களை, உள்ளூறப் பிரிட்டிஷாரை வெறுத்தும் வெளியில் அவர்களைக் கெஞ்சிக் குலாம்போடும் சந்தர்ப்பவாதிகளான சுயநலக்காரர்களை அவர் வெறுக்கிறார். கபடம் அவருடைய பரம விரோதி.

அனுபவமும் ஊடுருவும் நோக்கும் உள்ள அறிஞரான தாகூர், ஜவாஹரைப்பற்றி என்ன கருதினார் என்பது எனக்குச் சுவையூட்டியது. புது அரசியலமைப்பில் பிரிட்டிஷ் அரசாங்கம் திணித்த வகுப்புத் தீர்ப்புக் காரணமாக இந்து முஸ்லிம் பிணக்குகள் வளர்ந்து வருவது தன்னை மிகவும் மனந்தளரச் செய்துவிட்டது என்று தாகூர் கூறினார். "நேரு என்னைப்போல் கவலைப்படுகிறவர் இல்லை. வாலிபத் தலைமுறை அவரையே எதிர்பார்க்கின்றது. அவரிடம் உண்மையின் ஜீவன் இருக்கிறது. முழுதும் நேர்மையாளர். இந்தியாவின் இதயத்தைக் கைப்பற்றிவிட்டார். ஒளிவு மறைவு இல்லாமல் பேசுபவர். அரசியல் வாதிகளுள் தாழ்ந்த தரத்தினர், பொய்யும் பித்தலாட்டமும் தேவையென்று எண்ணுகிறார்கள். ஆனால் எங்களுக்கோ இவர் உண்மைத் தலைவராகக் கிடைத்துவிட்டார். சாதனங்கள் குறைவாக இருந்தாலும் கஷ்டங்களை எதிர்த்துப்போராடும் உறுதிபடைத்தவர்" என்று கூறினார்.

காந்தியின் எதிரிலிருக்கும்போது நேருவின் இதயத்தில் கொழுந்துவிடும் மன எழுச்சிகள் என்ன அதிசயமாகக் கலந்து ஒளிர்கின்றன என்பதைக் காணலாம். அவ்விருவரும் மதம், பொருளாதாரம், சமுதாய அமைப்பு போன்ற விஷயங்களில் வடகோடும் தென்கோடும்போன்று தள்ளி

நிற்பவர்கள். வருஷங்கள் கடக்கும்தோறும் காந்[...] ஆழ்ந்த இந்துவாக மாறிக்கொண்டே வருகிறார் என்பது தெளிவு. ஆன்மிக சக்திகளில் அவருக்குள்ள நம்பிக்கையின் வேர் வரவர ஆழத்தில் ஊன்றுகிறது. ஆனால் நேருவோ மேனாட்டு விஞ்ஞான மனப்போக்கின்படி காரண காரிய ரீதியில் இயற்கைச் சக்திகளைப் பார்க்கிறார். மத அமைப்புக்கள் பயனற்றவை என்று வெளிப்படையாகச் சொல்லுகிறார். கோடிக்கணக்கான இந்தியர்கள் வெறுப்பதைப் போல இவரும் வகுப்புச் சச்சரவுகளுக்குக் காரணமான மத விசுவாசத்தை வெறுக்கிறார். இன்னும் ஒரு படி தாண்டிச் சென்று உலக நிகழ்ச்சிகளுக்கு ஆன்மிக வியாக்கியானம் கூறுவதை அவர் ஒருபோதும் ஒப்புக்கொள்வதில்லை. ஆனால் அதே சமயத்தில் இவரைப்போல அறவொழுக்கத்துக்குக் கட்டுப்பட்ட வேறொரு மனிதரையும் நான் கண்டதே யில்லை. மத நம்பிக்கை யில்லாதவர் என்ற காரணத்திற்காகத் திடீரென இவரை இகழ முன்வரும் கிறிஸ்தவர்கள், தன் நாட்டவரை விடுவித்து உயர்த்துவதற்காக மீண்டும் மீண்டும் வருடக் கணக்கில் சிறை சென்று கஷ்டப்படும் இவரைக் கண்டால், இயேசுநாதர் கூறிய தீர்ப்பளிப்பு உவமைக் கதை தமக்கு எவ்வளவு தூரம் பொருந்தும் என்பதை உணர்ந்து வாயடைபட்டு நிற்பார்கள். அந்த உவமைக் கதையை நமது பக்கமும் திருப்பிப்பார்த்தால், நம்மில் பெரும்பாலோர் சோதனையில் தேறப் போவதில்லை என்பது நமக்கு நன்றாகத் தெரியும்.

வேட்டையாடியும் இன்பத்தில் திளைத்தும் வாழ்ந்த வாழ்க்கைக்கு அவர் பல வருஷங்களுக்குமுன் விடை கொடுத்தவுடன், அவருடைய மதமாற்றம்—வேறு எந்த வார்த்தையும் அவ்வளவு பொருத்தமாகப் புலப்படவில்லை—அவருக்குக் காந்தியின் மீதுள்ள பற்றுதலால் ஏற்பட்டது. இன்று அவர் காந்தியின் வாக்கை அப்படியே ஏற்றுக் கொள்ளும் சிஷ்யராக இருக்கவில்லை. சு[...]யச்சையாக அன்பு

மேலீட்டினால் காந்தியிடம் பக்தி பூணுகிறார். அதன் காரண மாகத் தனது சொந்த அபிப்பிராயத்துக்கு மாறாகவும் காந்தி யின் ஆசைகளை நிறைவேற்றி வைக்கிறார். காந்தியின் தலைமை யின் கீழேதான் இந்திய மக்கள் ஒத்துழைக்கும் பயிற்சி யைப் பெற்றார்களென்றும், சுயமரியாதை உணர்ச்சியை அடைந்தார்களென்றும், தாழ்ந்து வணங்கிய நிலைபோய் நிமிர்ந்த முதுகைப் பெற்றார்களென்றும் இடைவிடாது பறைசாற்றுகிறார். பொதுவாழ்வில் பெண்களும் தாராள மாக ஈடுபடச் செய்தது, பரந்த மனப்பான்மையை வளரச் செய்தது, எங்கும் அரசியல் பொருளாதாரப் பேச்சாக இருக்கும்படி செய்தது, பாமர மக்களின் மனநிலையை மாற்றி அமைத்தது, ஆகிய இவ்வளவு காரியங்களுக்கும் காந்தியினிடம் பிறவியிலேயே அமைந்த தெளிவான அறிவு, தீரம், மேதை, தீர்க்க தரிசனம் ஆகியவைதான் காரண மென்று நேரு கருதுகிறார். பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து இந்தியாவை விடுவிப்பது என்ற பொதுலட்சியம் தவிர வேறு எல்லாவகையிலும் முற்றிலும் வேறுபட்டவர்களாக இருக்கிற இருவரின் கூட்டுறவு எவ்வளவு அதிசயமாக இருக்கிறதென்பதைக் காண்கிறோம்.

மூன்றாம் முறையாக அவருடன் பேசிக்கொண்டிருந்து விட்டு நான் விடை பெற்றுக்கொள்ளக் கிளம்பியபோது, தான் முதலில் எழுதிய 'தன் மகளுக்கு எழுதிய கடிதங்கள்' என்ற சிறு புத்தகத்தையும் பிறகு இரண்டு பெரிய புத்த கங்களில் அடங்கிய உலக சரித்திரத்தையும், ஒரு ஆசிரி யன் மற்றொரு ஆசிரியனுக்குக் கொடுப்பதைப்போலக் கையெழுத்திட்டு எனக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார். எளிமையோடும் அழகோடும் இக் காரியத்தைச் செய்தார். நான் இதுவரை பார்த்த அழகான அறுவரில் இவர் ஒருவர். கள்ளம் கபடமற்று, கண்ணாடிபோன்ற தூய உள்ளத் தவர். உள்ளத்தில் உள்ளதை அப்படியே சொல்லுவதைத் தவிர வேறொன்றும் அறியாத அவருடைய சுபாவம் என்னைக்

கவர்ந்துவிட்டது. அவருடைய தெளிவான நடையை வாசிக்கும் போது, இயற்கையின் முழு அழகுடன் மேலும் மேலும் உயர்ந்து தூய இலக்கியமாக இருக்கும் அவருடைய நூலை வாசிக்கும்போது, தன்னுடைய அரசியல் காரியங்கள் காரணமாக அல்லாமல் எழுத்துச் சிறப்பினுல் உலகில் அவர் நிரந்தரப் புகழை எய்துவார் என்ற எண்ணம் தோன்றுகிறது. ஜெயிலிலிருந்து அவர் எழுதிய கடிதங்களும் புத்தகங்களும் சுதேசி மையினுல் சுதேசிக் காகிதத்தில் எழுதப்பட்டவையே. ஆனுல் அந்தப் பேனுவை நகர்த்திய மூளை ஒரு உலகப் பிரஜையின் மூளை. எதைப் பேசினுலும் அதைச் சர்வதேசிய நிலைமையில் வைத்தே காண்கிருர். உலகில் தேசிய வெறிகள், சர்வாதிகாரச் செருக்குகள் ஒழிந்து மறைந்தபின், ஒரு நல்ல நாளில் இவர் வெஸ்ட்மினிஸ்டரிலோ அல்லது ஜினிவாவிலோ உட்கார்ந்து கொண்டு புதிய ஒரு உலக சமுதாயத்தைக் கட்டுவதற்கு உதவவேண்டும். இதென்ன நடக்கக்கூடிய அற்புதமா? இதைக்காட்டிலும் பேரற்புதங்களையெல்லாம் விதி நடத்தியிருக்கிறதே.

# இந்தியாவின் நேருவும் நேருவின் இந்தியாவும்

—கந்தர் தம்பதிகள்—

ஜவாஹர்லாலைச் சந்தித்துப் பேசுங்கள். இவருடைய பெயரைச் சொல்லுவதற்குள் பல் உடைந்துவிடும்போல் இருக்கிறது. திறமையும் நுண்ணுணர்வும் கூடிய இந்த இந்தியர், உலகத்தில் இன்று உயிரோடு வாழும் பேராற்றல் வாய்ந்தவர்களுள் ஒருவர். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைப்பற்றியும் இரண்டாவது உலக யுத்தத்தைப்பற்றியும் இவர் என்ன சொல்லுகிருரோ அதைப் பொறுத்தே 35 கோடி மக்களின் மனப்போக்கு அமைந்திருக்கின்றது. நேரு என்ருல் இவ்வளவுதான் என்று நினைத்துவிட வேண்டாம். இன்னும் எவ்வளவோ இருக்கின்றது. இவர் இங்கிலாந்தில் ஹாரோவிலும் கேம்பிரிட்ஜிலும் படித்த ஒரு இந்தியப் புரட்சிக்காரர். மிகவும் பிரபலமான காஷ்மீரப் பிராமண குடும்பத்தைச் சேர்ந்தவர். அமெரிக்காவில் லோவெல் அல்லது ரூஸ்வெல்ட் குடும்பத்திற்கு நிகரானது இவருடைய குடும்பம். ஏழு தடவைகள் ஜெயிலுக்குச் சென்றிருக்கிருர். எதையும் நன்கு ஆராயக்கூடிய நுண்ணறிவாளர். தனி மனித சுதந்தரத்தை ஆதரிக்கின்றவர். சோஷலிஸத்தைத் தனது அடிப்படைக் கொள்கையாகக் கொண்டவர். மகாத்மா என்று பெரிதும் வணங்கப்படுகின்ற காந்திக்கு அடுத்தபடியாக, இந்திய தேசிய இயக்கத்தின் தலைவராக வரக்கூடியவர்.

இந்தியாவின் நேருவும், நேருவின் இந்தியாவும் தற்கால உலக நெருக்கடியுடன் நெருங்கிய தொடர்புகொண்டுள்ளனர். இந்த இரண்டாவது உலக யுத்தம் எங்கெல்லாமோ தொட்டுக்கொண்டிருக்கிறது. இது அரசியல் ஆதிக்கத்துக்காக மட்டும் நடக்கும் யுத்தமல்ல. அரசியல் தத்துவங்களுக்கிடையே நடக்கும் சண்டையுமாகும். ரஷ்ய ஜெர்மனி உறவு ஒப்பந்தம் ஏற்பட்டபொழுது அவர்களுடைய எல்லாத் தத்துவங்களும் பறந்துவிட்டன. இது ஒரு பெரிய வேடிக்கைதான். ஆனால் பிரிட்டிஷாரும் பிரெஞ்சுக்காரர்களும், எத்தனையோ காரியங்களோடு, மிக உண்மையான ஒரு தத்துவத்துக்காகவும் போரிட்டுக் கொண்டிருக்கிறார்கள். சர்வாதிகார அரசாங்கத்தின் பாஸிஸத்தை எதிர்த்து ஜனநாயக ஸ்தாபனங்களின் சுதந்தரத் தன்மையைக் காப்பாற்ற இவர்கள் போரிடுகிறார்கள். ஆனால் இந்தப் பிரிட்டிஷ்காரர்கள் ஐரோப்பாவில் ஜனநாயகத்துக்காகப் போரிடும்பொழுது, சுதந்தரத்தை விரும்புகிற 35 கோடி இந்தியர்களுக்கு முழுச் சுதந்தரம் வழங்க மறுக்கிறார்கள். தங்களுடைய யுத்த நோக்கங்கள் என்ன என்பதைப்பற்றிச் சொல்லுவதற்கு நேசநாடுகள் எவ்வளவு திண்டாடுகின்றன என்பதை யாவரும் அறிவோம். யுத்த நோக்கங்கள் என்ன என்று அவர்கள் சொல்லும் பொழுது அவர்களுடைய சொல்லை இந்தியாவைக் கொண்டு அளக்க வேண்டியதிருக்கும்.

பெரும்புகழ் படைத்த மகாத்மாவுக்கு இப்பொழுது வயது 70. மூப்பும் தளர்ச்சியும் எய்திவிட்டார். ஆகவே தேசிய இந்தியாவில் ஜவாஹர்லால் நேருவே பெருந்தலைவர். இந்தியாவைப் பற்றிக் கொஞ்சமும் தெரிந்து கொள்ளாமல் நேருவைப்பற்றி அறிய முடியாது. மனித வர்க்கத்தின் ஐந்தில் ஒரு பங்கினர்க்குத் தாயகமாக உள்ள அந்தப் பெரிய துணைக்கண்டத்திற்கு உங்களது மனத்தைச் சற்றுத் திருப்புங்கள். அலங்காரச் செழிப்பில் வெளிப்படு

கின்ற மகாராஜாக்கள் ஒரு பக்கம், வாய்விட்டுச் சொல்ல முடியாத பயங்கரமான வறுமை ஒரு பக்கம். கல்கத்தா வில் வெப்பமான இராக்காலங்கள், தெருவோரமுள்ள நடைபாதையில் வரிசை வரிசையாகத் தூங்கியபடியே தங்களுடைய வெள்ளைக்கார எஜமானர்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கும் சுதேசி வேலைக்காரர்கள். வடமேற்கிலிருந்து வரும் பட்டாணியர்கள். இமய மலையிலிருந்து வரும் பருத்த குள்ளர்களான பக்கிரிகள். காசியில் மீனைவறுக்கும் சகிக்கமுடியாத நாற்றம். அமைதியான அழகைக்கொண்டிருக்கும் டெல்லி சமாதிகள். சின்னப் பிள்ளைகள் மூக்கில் வளையங்கள் அணிந்திருக்கிறார்கள். பத்துப் பன்னிரண்டு வயதில் பெற்றோர்களாகி விடுகிறார்கள். எண்ணற்ற மதப் பிரிவினைகள் இருக்கின்றன. விதவைகள் கரிய உடை அணிகிறார்கள். அவர்கள் மறுமணம் செய்து கொள்ளக்கூடாது. முஸ்லிம் வீட்டில் தண்ணீர் குடிப்பதைக் காட்டிலும் உயிரைவிட்டு விடுவார்கள் இந்துக்கள். இந்துவினிடத்திலிருந்து தண்ணீர் கொள்வதைக் காட்டிலும் உயிரை விட்டுவிடுவார்கள் முஸ்லிம்கள். மதச் சடங்குகள் பசுவின் சாணத்தை அடிப்படையாகக்கொண்டிருக்கின்றன. இதுவே அங்கு உன்னதமான தேசிய பரம்பரைச் சிறப்பு. கான்பூரில் உள்ள குடிசைகளைக் கண்டால் தலை சுழல்கிறது. இந்தியாவில் தாகூரையும் போஸையும் போன்ற பேரறிஞர்கள் இருக்கிறார்கள். அங்கே புறாக்களையும் மயில்களையும் நாகங்களையும் எலிகளையும் தொழுகின்ற மக்களும் இருக்கின்றார்கள். எல்லா விதமான பூகோள இயற்கையமைப்பையும் அங்கே காணலாம். பாலைவனம், காடு, நெருப்புப் பறக்கும் வெயில், மிகப் பழமையான மலைகள், பருவக் காற்றுகள், வெயிலில் நன்றாகச் சூடேறிய தெருக்களில் வெள்ளம் எடுக்கும்படியாகப் பெய்யும் மழை, ஆகியவற்றையும் இந்தியாவில் காணலாம்.

இந்தியாவில் உள்ளவர்கள் நேருவை ஜவாஹர்லால் என்று அழைக்கிறார்கள். நாமும் அவ்வாறே அழைப்போம். அவர் தனது நாட்டிலுள்ள சிற்றரசு முறையையும் ஜமீன்தாரி முறையையும் மிகவும் வெறுக்கிறார். அவருடைய மனம் முழுக்க முழுக்கத் தற்கால ரீதியில் அமைந்திருக்கின்றது. இதுவே அவரிடம் காணப்படும் மிகக் கவர்ச்சியான அம்சம். இந்த இருபதாவது நூற்றாண்டின் காரண காரியத் தத்துவத்தில் மிகவும் ஆழ்ந்திருக்கிறார். தனது நாடு மோசமான பிற்போக்கில் இருப்பதும் அங்குள்ள எண்ணற்ற மூட நம்பிக்கைகளும் அவருக்குப் பெரும் வேதனை கொடுக்கின்றன. அவைகளை ஒழித்து இந்தியாவைத் தற்கால உலகத்தோடு ஒட்டிவரும்படி செய்வதற்காக அரும்பாடு படுகிறார். அவர் பிரிட்டிஷாரோடு மட்டும் போரிடவில்லை தன் நாட்டினரை அமிழ்த்திக் கிடக்கும் மதச்சடங்குகளை எதிர்த்தும் போரிடுகிறார். அவர் கடவுளைப்பற்றிக் கவலைப்படாதவர். காரணகாரிய ஒழுங்கில் நம்பிக்கை உள்ளவர். சீர்திருத்தக்காரர்.

இருந்தாலும் பெரும்பாலான பேரறிஞர்களையும் சீர்திருத்தக்காரர்களையும் போல அவர் ஈரமற்றவர் அல்லர். அவர் இங்கிலாந்திற்குச் சென்றதடவை வந்திருந்தபொழுது காண்டர்பரி ஆர்ச் பிஷப்பைச் சந்தித்துப் பேசினார். "எவ்வளவு அருமையானவர்! நட்புக்கு உகந்தவர்! ஒரு கண்டத்தையே இவரால் ஆட்டிவைக்க முடியும் என்பதை யார் நம்பக் கூடும்" என்று அந்த ஆர்ச்பிஷப் பிறகு கூறினாராம்.

இப்பொழுது நேருவுக்கு அரசியல் பதவி ஒன்றும் இல்லை. காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினராக மட்டும் இருக்கின்றார். பத்துவருஷங்கள் காங்கிரஸ் பொதுக் காரியதரிசியாக இருந்திருக்கிறார். மூன்று தடவைகள் காங்கிரஸ் தலைவராக வந்தவர் இவர் ஒருத்தர்தான். விரும்பினால் திரும்ப எப்பொழுதும் தலைவராக முடியும். அமெரிக்காவில் உள்ளதைப்போலக் காங்கிரஸ் ஒரு அரசியல் கட்சியல்ல.

அது பிரிட்டனிடமிருந்து விடுதலையை வேண்டி நிற்கும் இந்தியர்களின் பொதுஜன இயக்கம். அவர்கள் குடியேற்ற நாட்டு அந்தஸ்து மட்டும் விரும்பவில்லை. பூரண விடுதலையை விரும்புகிறார்கள். 1776-க்கு முன்பு அமெரிக்கக் குடியேற்ற நாடுகள் சுதந்தரத்திற்காக நடத்திய இயக்கத்தைப் போன்றது காங்கிரஸ் இயக்கம். அதில் இந்துக்களே மிக அதிகம். ஆனால் அதில் எல்லாவிதமான கொள்கைகளையும் அரசியல் தத்துவங்களையும் பின்பற்றுகின்றவர்கள் இருக்கிறார்கள். இந்தியாவில் உள்ள மிக முக்கியமான அரசியல் ஸ்தாபனம் அது ஒன்றே. இந்திய தேசியத்தின் நிர்வாக சக்தியாகக் காங்கிரஸ் காரியக் கமிட்டி இருந்து வருகிறது. காந்திக்கு வயதாகிவிட்டபடியால் நேருவே அதற்கு வழி காட்டியாக இருக்கிறார். பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள பதினொரு மாகாணங்களில் எட்டு மாகாணங்கள் காங்கிரஸின் வசம் இருக்கின்றன.

ஜவாஹர்லால்நேரு 1889-ல் நவம்பர் 14-ம் நாள் அலஹாபாதில் பிறந்தவர். காஷ்மீரிலிருந்து வந்த உயர்ந்த பிராமணக் குடும்பத்தைச் சேர்ந்தவர். அவருடைய முன்னோர்கள் மொகலாய அரசர்களிடம் உயர்ந்த வேலையில் இருந்தவர்கள். அவருடைய தந்தை மோதிலால் நேரு ஒரு பெரிய மனிதர். புகழும் ஆற்றலும் வாய்ந்த வக்கீல். பிரிட்டிஷாரால் மதிக்கப்பட்ட நண்பர்; செல்வச் சீமான். மோதிலால் அலஹாபாதில் ஒரு பெரிய வீட்டைக் கட்டினார். அவருடைய குடும்பத்துக்குப் பணத்தாலும் நாகரிகத்தாலும் கிடைக்கக்கூடிய அத்தனை வசதிகளும் இருந்தன. சிறு பையனாக இருக்கும்பொழுதே நேரு ஆங்கிலப் பழக்க வழக்கங்களுக்குள் வந்து விட்டார். இன்றைக்கும் சில விஷயங்களில் அவர் இந்தியராகத் தென்படவில்லை; ஆங்கிலேயராகவே தென்படுகிறார். வால்ட்டர் ஸ்காட், டிக்கென்ஸ், ஆகியோருடைய புத்தகங்களைப் படித்து வந்திருக்கிறார். இளமையிலேயே அவருக்கு ஒரு ஆங்கிலேய

ஆசிரியர் பாடங் கற்பித்தார். ஹாரோவுக்குப் படிக்கச் சென்றார். அலஹாபாதைக் காட்டிலும் கேம்பிரிட்ஜே அவர் மனத்தில் பெரிதும் பதிந்தது. அவர் இப்பொழுதும் தமது தாய்மொழியான ஹிந்துஸ்தானியைக் கொஞ்சம் தட்டுத்தடுமாறியே பேசுகிறார். ஆனால் ஆங்கிலத்தில் அழகாகப் பேசுகிறார், எழுதுகிறார். இன்று உயிரோடிருக்கும் சிறந்த எழுத்தாளர்களில் ஒரு பத்துப் பன்னிரண்டு பேர்களாவது அவரைப்போல ஆங்கிலத்தில் எழுதுவார்களா என்பது சந்தேகம்.

இருபத்து மூன்றாவது வயதில் நேரு இந்தியாவுக்குத் திரும்பினார். உடனேயே அரசியலில் இறங்கிவிட்டார். அவருடைய தந்தை அரசியலில் பிரபலமானவராக இருந்தபடியால் இவரும் அரசியலை விட்டு ஒதுங்கி இருக்க முடியாது. இவர் காந்திஜியைச் சந்தித்தார். ஜெனரல் டயர் நூற்றுக்கணக்கான இந்தியர்களை நோக்கிச் சுடும்படியாக ராணுவத்திற்கு உத்தரவிட்டதும் மக்கள் இறந்ததும் காயமடைந்ததும் இவரைப் பெரிதும் குலுக்கிவிட்டன. இங்கிலாந்தின் அன்பான அரசாட்சிக்கு ஏற்பட்ட இந்தக் களங்கத்தைக் கண்டு இங்கிலாந்திலும் இந்தியாவிலும் பலர் வருத்தமுற்றனர். சில நாட்கள் சென்ற பிறகு நேரு டில்லிக்கு ரயிலில் சென்றார். உயர இருந்த படுக்கையில் படுத்துக் கொண்டிருக்கும்பொழுது கீழே இருந்த பிரிட்டிஷ் அதிகாரிகளின் பேச்சு இவர் காதில் விழுந்தது. ஜெனரல் டயரும் அங்கே இருந்தான். அமிர்தசரஸில் தான் இந்தியரை மார்பினால் ஊர்ந்து செல்லச் சொன்னதையும் அந்த நகரத்தையே எரிக்கவேண்டுமென்று தான் எண்ணியதையும் பின்பு இரக்கங்கொண்டு அதைச் செய்யாமல் விட்டுவிட்டதையும்பற்றி அவன் சொன்னவார்த்தைகளைப் படுத்துக்கொண்டே கேட்டு வந்தார். "அவனுடைய பேச்சைக் கேட்டும், அவனுடைய இரக்கமற்ற மூர்க்கத்தனத்தைக் கண்டும் பெரிதும் அதிர்ச்சி அடைந்தேன். அவன்

டில்லி ஸ்டேஷனில் இறங்கினுன். சொக்காயும் சிவப்புக் கோடுகள் உள்ள பைஜாமாவும் அணிந்திருந்தான்" என்று நேரு எழுதுகிருர்.

நேரு பிரயாணம் செய்ய ஆரம்பித்தார். மிகுந்த செல்வமுடையவர். உயர்ந்த படிப்பும் பழக்கமும் பண்பாடும் உள்ளவர். வாழ்நாள் முழுதும் எல்லாவிதமான சௌகரியங்களேயும் கொண்டிருந்தவர். சுற்றுப்பிரயாணம் செய்து முதன்முதல் தன்னுடைய சொந்த நாட்டைப் பார்க்கும்பொழுது பயங்கரமான நிலைமையைக் கண்டார், தன் நாட்டவர் பரம ஏழைகளாகப் பட்டினியாலும் நோயாலும் பரிதவிப்பதைக் கண்டார். அவர்களுடைய சராசரி வயது 25 ஆக இருந்தது. பசுவை வணங்கினுர்கள். ஆனுல் சகோதர மனிதர்களைத் தீண்டத் தகாதவர்களாக நினைத்து ஒதுக்குமாறு ஹிந்து மதத்தால் அவர்கள் தாழ்த்தப்பட்டிருந்தார்கள். புத்தனைப்போலத் தான் அறிந்த எல்லாவற்றையும் துறந்தார். தனது மனத்தை ஆராயவும் ஏழைகளின் துன்பத்தைப் போக்குவதற்கு வழி காணவும் தலைப்பட்டார். தான் முதன் முதல் உழவர்களைக் கண்டதைப்பற்றி இவ்வாறு கூறுகிருர்.

"அவர்கள் எங்கள்மீது அன்பு பொழிந்தார்கள். அன்பும் நம்பிக்கையும் நிறைந்த கண்களோடு எங்களை நோக்கினுர்கள். நற்செய்தியைக் கொண்டுவந்தவர்களைப் போலவும் செல்வம் கொழிக்கும் நாட்டை அடைய வழிகாட்டுகின்றவர்களைப் போலவும் எங்களைக் கருதினுர்கள். அவர்களையும் அவர்களுடைய துன்பங்களையும் பொங்கி வழியும் விசுவாசத்தையும் கண்டு நான் மிகவும் வெட்கமுற்றேன், வருந்தினேன். எனது சொந்த உல்லாசமான சுகவாழ்வும், அரைநிர்வாணமா யிருக்கும் ஏராளமான இந்தியப் புதல்வர்களையும் புதல்விகளையும் அறிந்துகொள்ளாத குறுகிய நகர அரசியலும் என்னை வெட்கமுறச் செய்தன. தாய் நாட்டின் தாழ்ந்த நிலையும், ஆழ்ந்த வறுமையும் வருத்தமுற

வைத்தன. சொல்ல முடியாத அல்லலுடன் நசுங்கி, வதை பட்டுப் பட்டினியாக நிர்வாணமுமான கோலத்துடன் நின்ற இந்தியாவின் புதிய சித்திரம் என் கண்முன் தெரிந்தது.''

நேரு, காந்தியின் சட்டமறுப்பு இயக்கத்தில் சேர்ந்தார். கைதாகும் பெருமை பெறுவதற்காகப் போராடிய நூற்றுக் கணக்கானவர்களுடன் அவரும் 1921-ல் சிறைசென்றார். 1921-க்கும் 1934-க்கும் இடைப்பட்ட காலத்தில் ஏழு முறை சிறைசென்றார். ஐந்தரை ஆண்டுகள் ஜெயிலில் கழித்தார். சிறையில் பெரும்பாலும் அவர் நன்றாகவே நடத்தப்பட்டார். ஆனால் ஒரே ஒரு முறை 24 மணிநேரம் ஒரு சகோதரக் கைதியுடன் கைவிலங்கிடப்பட்டு மோசமான கொட்டடியில் வைக்கப்பட்டிருந்தார். அங்கேதான் அவர் தூங்கியபொழுது எலிகள் முகத்திலேறி ஓடின! காவல்தண்டனை அவர் மனத்தில் ஆழமாகப் பதிந்து விட்டது. பெரிதும் சிந்திக்கச் செய்தது. அவர் இன்னும் அதிக மென்மையும் அகவளர்ச்சியும் அடைந்தார். ஜெயிலில் தன்னுடைய அரசியல் தத்துவத்தை நன்றாகச் சிந்தித்து, திடப்படுத்திக்கொள்வதற்கான அவகாசம் அவருக்குக் கிடைத்தது. தேசியப் போராட்டத்தில் வெறும் தேசிய அம்சங்கள் மாத்திரம் இருக்கவில்லை என்பதை அறிந்து கொண்டார். ஏகாதிபத்தியமே அடிப்படையான விரோதி என்று தெளிந்தார். முதலாளித்துவத்தின் வளர்ச்சிதான் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், ஆகவே முதலாளித்துவத்தையும் அவர் தகர்க்கவேண்டும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் பொருளாதார அரசியல் சுரண்டல்களின்மீது அமைந்திருக்கிறது என்று உணர்ந்தார். ஆகவே பிரிட்டிஷாரைத் தாக்குவதென்றால் தான் ஒரு சோஷலிஸ்டு ஆக இருக்க வேண்டியது நியாயம். சாதாரணத் தேசியப் புரட்சிக்காரராகவும் இருக்க வேண்டும். இதுவே அவருடைய கோட்பாட்டின் வேர்.

அவர் சோஷலிஸ்டே தவிர நிச்சயமாகக் கம்யூனிஸ்ட்

அல்லர். "நான் ஒரு கம்யூனிஸ்டு அல்லன். கம்யூனிஸத்தை வேதவாக்காகக் கம்யூனிஸ்டுகள் போற்றுவதை நான் எதிர்க்கிறேன். நான் என்ன நினைக்கவேண்டும், என்ன செய்யவேண்டும் என்று பிறரால் ஏவப்படுவதை நான் விரும்பவில்லை. இன்னும் கம்யூனிஸ்டு முறைகளில் அதிக ஹிம்சையும் கலந்திருக்கிறதென்று உணர்கின்றேன். லட்சியத்திலிருந்து அதன் பாதையைப் பிரிக்க முடியாது" என்று ஒரு சமயம் அவர் எழுதினர்.

ஜவாஹர்லாலுக்கும் அவருடைய தந்தை மோதிலாலுக்கும் உள்ள தொடர்பை அறிந்துகொள்வது கவர்ச்சிகரமான மனத் தத்துவ ஆராய்ச்சியாக அமையும். அது நேருவின் சுய சரித்திரத்தில் அழகாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஜவாஹர்லால் அசாதாரணமான நுண்ணுணர்வு உள்ளவர். மோதிலால் கம்பீரமும் பிறரை அடக்கியாளும் தன்மையும் உடையவர். முதலில் தன் மகனது தீவிரத் தேச பக்தியைக் கண்டு சஞ்சலப்பட்டார். அவரை மிதவாதியாக்க முயன்றார். ஆனல் மெதுவாகவும் உறுதியாகவும் மகனே தந்தையைத் தன் பக்கமாக இழுத்துக் கொண்டுவிட்டார். தன் மகனுடைய ஜெயில் வாழ்க்கை எப்படியிருக்கும் என்பதைத் தான் அறிந்துகொள்வதற்காக மோதிலால் சுகபோகம் நிறைந்த தன்னுடைய வீட்டிலே தரையில் படுத்துக்கொண்டிருப்பதை ஜவாஹர் ஒரு நாள் இரவு கண்டு பிடித்தார். 1920-ல் சட்ட மறுப்பு இயக்கம் தொடங்கியதும், பிரிட்டிஷார், இந்தியர் ஆகிய இருவர்களிடமும் மிகப் பெரும் செல்வாக்குள்ள மோதிலால் அந்த இயக்கத்தில் சிங்கம்போல விளங்கினர். உடனே தந்தையும் மகனும் ஜெயிலுக்குச் சென்றார்கள்.

ஜெயிலுக்குப் போவதும் வருவதுமாக இருந்த சமயம் ஜவாஹருடைய அரசியல் வாழ்க்கை உறுதியாக முன்னேறியது. காந்திஜி சாத்விகச் சட்டமறுப்புக் கொள்கையைக் கண்டுபிடித்துக் கற்பித்து நடைமுறைக்குக்

கொண்டுவந்த காரணத்தினால் அவர் நேருவைத் தன்வயப் படுத்திவிட்டார். சாத்விகச் சட்டமறுப்பு அற்புதமான உயர்ந்த கொள்கை என்று அந்தச் சமயம் நேருவுக்குத் தோன்றிற்று. இப்பொழுது அது போதுமானதல்ல என்று கருதுகிறார். மெதுவாக, காந்திக்கு அடுத்தபடியாக இன்றியமையாச் சேனாதிபதியானார். நேரு நிறைய எழுதினார், பேசினார், சுற்றுப் பிரயாணம் செய்தார், ஸ்தாபனங்களை அமைத்தார். பத்து வருஷ காலம் இடைவிடாமல் தேசியக் காங்கிரஸின் பொதுக் காரியதரிசியாக இருந்தபோது காங்கிரசை வலுவுள்ள ஸ்தாபனம் ஆக்கினார். "குடியேற்ற நாட்டு அந்தஸ்து வேண்டாம், பிரிட்டனின் பிடிப்பிலிருந்து பூரண விடுதலை வேண்டும்" என்றார். இந்தியர்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்டுக் கொள்ளாமல் இந்தியாவையும் யுத்தத்தில் சேர்த்துவிட்டதாகக் கூறிய பிரிட்டிஷ் பிரகடனத்தை எதிர்த்து, காங்கிரஸின் யுத்த அறிக்கையை இவ்வருஷம் இவரே எழுதினார்.

நேருவுக்கு இப்பொழுது வயது 50 ஆகிறது. அவர் அசாதாரணமான அழகும் கவர்ச்சியும் பெற்றிருக்கிறார். இந்தியாவிலுள்ள கோடிக் கணக்கான மக்களும் அவரை நன்கு அறிவர். அஸ்ஸாமில் உள்ள காட்டு ஜனங்கள் முதல் பம்பாயின் தெற்குப் பகுதியில் நெருங்கிய குடிசைகளில் வாழும் தொழிலாளிகள்வரை நெடுந் தொலைவிலுள்ள மக்கள் அவரைப் பற்றித் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். 'இந்தியாவின் இதயத்தில் வீற்றிருக்கும் மன்னனே' என்று அவரை ஜனங்கள் அழைக்கிறார்கள். ஆனால் நிச்சயமாக அவர் கும்பலைச்சேர்ந்த மனிதர் அல்லர். மனிதர்களோடு நெருங்கிப் பழகுவதில் அவர் கூச்சம் உள்ளவர். அதை வெளியிடுவதில் மிகவும் வெறுப்புள்ளவர். அவரோடு பழகுவதற்கு அதிக முயற்சி செய்யவேண்டும். அதிகப் பிரயாசை எடுத்துக்கொண்ட பின் இலேசாகப் பழக ஆரம்பிப்பார். தடபுடலான அரசியல் கிளர்ச்

சிப் பேச்சுக்கள் அவருக்குப் பிடிப்பதில்லை. எங்காவது பண்பாடு குறைந்திருப்பதையும் இழிதகைமை நிலவுவதையும் கண்டால் மனம் துடித்துவிடுவார்.

நேரு சந்தேகப் பேர்வழி. எளிதில் திருப்தியடையாதவர். உறைந்துபோன கொள்கைகளின்மீதும் பழக்க வழக்கங்களின்மீதும் வெறுப்புள்ளவர். தடபுடலையும் ஆர்ப்பாட்டத்தையும் வெறுக்கிறவர். இவைகளே அவரிடம் உள்ள குறைபாடுகள்; சில சமயங்களில் அவரை மோசமான அரசியல்வாதியாக ஆக்கிவிடுகின்றன. ஆனால் இதரத் துறைகளில் அவருக்கு உள்ள அபாரவலிமை இக் குறைபாடுகளை மறைத்துவிடுகின்றன. ஸ்தாபன அமைப்பிலும் நிர்வாகத்திலும் வியக்கத்தக்க திறமை உடையவர். தேசியத்திட்டக் கமிட்டியின் தலைவராக இருந்து இவ்வருஷ முழுவதும் அந்த வேலையிலேயே பெரிதும் ஈடுபட்டிருக்கிறார். அவரைப்போன்ற சக்தியுடைய மனிதர்களைக் காண்பது அரிது. லட்சியத்தில் அளவு கடந்த பற்றும், மிகவும் நுட்பமான அறிவும், அடக்கமும், கவர்ச்சியும், நேர்மையும் உள்ளவர். தனி வாழ்விலும் பொது வாழ்விலும் அவருடைய நேர்மை ஒருகாலும் சிதறியதில்லை.

நேரு இந்தியாவில் குறுக்கும் நெடுக்குமாகப் பிரயாணம் செய்யாதபோது அலஹாபாதில் ஆனந்தபவனம் என்றஅவருடைய வீட்டில் வசிக்கிறார். இது அவரது தகப்பனருடைய பழைய வீட்டுக்குப் பக்கத்தில் இருக்கிறது. அந்த வீட்டைக் காங்கிரசுக்கு அவர் தகப்பனர் கொடுத்துவிட்டார். அதுவே காங்கிரஸின் தலைமைக் காரியாலயமாக இருக்கிறது. நேருவின் மனைவி காலம் சென்று விட்டாள். அவருடைய மனைவி அவருடன் சாத்விகச் சட்டமறுப்பில் சேர்ந்து போராடினுள். அநேக ஆண்டுகள் நோயுற்றுக் கிடந்து இறந்து விட்டாள். கடைசியில் அவளைப் பார்ப்பதற்காக நேரு விடுதலை செய்யப்பட்டார். அவளும் ஜெயிலுக்குச் சென்றிருக்கிருள். அவர்களுடைய ஒரே பெண்,

21 வயதுள்ள இந்திரா, இங்கிலாந்தில் படித்துக்கொண்டிருக்கிருள். நேருவின் இரண்டு சகோதரிகளும் அரசியலில் ஈடுபட்டிருக்கிருர்கள். ஸ்வரூப் (அழகி) என்று அழைக்கப்பட்ட விஜயலட்சுமி பண்டிட் ஐக்கிய மாகாணத்தில் ஸ்தல ஸ்தாபனத்திற்கும் சுகாதாரத்திற்கும் மந்திரியாக இருக்கிருர். இந்தியாவில் முதல் முதலாக மந்திரி பதவி வகித்த பெண் இவள் தான்.

சொந்த வாழ்க்கையிலும் மனப்போக்குகளிலும் நேரு காந்தியைக் காட்டிலும் சாதாரணமாக எல்லோரையும் போல் இருக்கின்ருர். காஷ்மீரிகள் பெரும்பாலும் புலால் உண்பவர்கள். அவர், வழக்கமாகப் புலால் உண்பது என்பது இல்லை. இருந்தாலும் காந்தியைப்போல அதனிடம் மதவெறுப்புக் கொண்டவரல்லர். ஏகதேசம் புகை பிடிக்கிருர். இந்தியாவை விட்டு வெளி நாடுகளில் இருக்கும்பொழுது ஏதோ கொஞ்சம் மதுபானமும் செய்யலாம். மாரிக்கால விளையாட்டுக்களில் அவருக்குப் பிரியம் அதிகம், நீந்துவதிலும் பிரியமுண்டு. புத்தகங்கள் வாங்குவதற்கும் பிரயாணம் செய்வதற்கும் தனது கட்சி வேலைக்கும் போதுமான பணம் இருக்கின்றவரை அவர் பணத்தைப்பற்றிக் கவலைப்படுவதில்லை. காந்திஜியின் பிரயாணங்களைப்போல இவருடைய பிரயாணங்களும் சரித்திரப் பிரசித்தமானவை. 1930—37-ல் 22 மாதங்களில் 110,000 மைல்கள் பிரயாணம் செய்திருக்கிருர். ஒவ்வொருநாளும் எத்தனையோ இடங்களில் பேச்சு. ஒருசமயம் ஒருவாரத்தில் 150 இடங்களில் பேசியிருக்கிருர்.

இந்தியாவுக்கு அடுத்தபடியாக உலகத்திலே அவருக்கு விருப்பமும் இனிமையுமான பொருள் ஆங்கிலக் கவிதை அவருடைய எழுத்துக்களில் அடிக்கடி செய்யுட்களை மேற்கோள் கொடுக்கிருர். கவிதைக்கு அடுத்தபடியாக அவர் விரும்புவன மலைகள், இன்னும் பனிப்பாறைகள், குழந்தைகள், ஓடுகின்ற தண்ணீர், கிட்டத்தட்ட எல்லா மிருகங்களு

மாம். அவர் மிகமிக வெறுப்பவைகள், "சுரண்டல், கொடுமை, கடவுள் பெயராலும் உண்மையின் பெயராலும் கபடமாகப்பொதுநன்மையில் கைவைத்துத் தன் பாட்டைப் பார்த்துக்கொள்ளுகிறவர்கள்", அதாவது பெரும்பாலான அரசியல்வாதிகள். பிரிட்டிஷார்மீது அவருக்குத் தனிப் பட்ட பகைமை ஒன்றும் இல்லை. ஓய்வு கிடைத்த காலத்தில் அவர் நேரே இங்கிலாந்துக்குச் சென்று விடுவார். அங்கே அவருக்கு நெருங்கிய நண்பர்கள் பலர் இருக்கிறார்கள்.

காந்தியைப்போல நேரு ஒரு தீர்க்கதரிசி அல்லர். கடலில் அமிழ்ந்துகொண்டிருப்பவன் துரும்பையும் எட்டிப் பிடிப்பதுபோல, துன்பக்கேணியில் உள்ள இந்தியா தனது தலைவர்கள் எல்லோரையும் தீர்க்கதரிசிகள் ஆக்க முயல்கிறது. அந்தமாதிரி உணர்ச்சி ஏதாவது அவர் மனத்தில் தோன்றினாலும் அவருடைய மனைவியும் மகளும் சேர்ந்து கொண்டு ஜனங்கள் அவருக்குச் சூட்டிய பிரதாபச் சொற்களைக் கூறி அவருடைய அவ்வுணர்ச்சியைத் தடுத்துவிடுவார்கள். "ஏ இந்திய ரத்தினமே, இப்பொழுது மணி என்ன? தியாகமே உருவெடுத்து வந்தவரே, அந்த ரொட்டியை இப்படித் தள்ளும்" என்று கூற ஆரம்பித்து விடுவார்கள். மிகவும் தற்காலத்திய கருத்துகளும் கர்நாடக நம்பிக்கைகளும் சேர்ந்த அதிசயக் கலப்பாகக் காந்தி இருக்கின்றார். இந்துக்களுக்கு மதவிரோதமான முட்டைகளையும் கோழிக்குஞ்சு ரசத்தையும் தனது மகன் அருந்திப் பிழைப்பதைக் காட்டிலும் சாகக்கூடிய நிலையை எய்தக் காந்தி விட்டுவிட்டார். நேருவோ முழுக்க முழுக்கத் தற்காலத்தியவர். தன் நாட்டு மக்களைக் காட்டிலும் பல நூற்றாண்டுகள் முந்தியவர். எல்லாம் மதம் மயமாக இருக்கின்ற நாட்டிலே கடவுள் சிந்தனை தேவை இல்லை என்று இருக்கின்றார். அறிவின் சிகரம் போன்றவர். ஜெயில் வாழ்க்கையின் ஒரு பகுதியைத் தன் மகளுக்காக 1569 பக்கம் கொண்ட உலகச் சரித்திரம் எழுதுவதில்

கழித்தார். தனது சுய சரித்திரத்தையும் எழுதினர். "கிழக்கும் மேற்கும் சேர்ந்த அதிசயக் கலப்பாக நான் இருக்கின்றேன். எந்த இடத்துக்கும் பொருந்தாமல் ஏற்ற இடம் என்பதொன்றும் இல்லாமல் இருக்கின்றேன்" என்று அவர் கூறுகிறர்.

தற்போதைய அரசியல் நிலைமையைப்பற்றி ஒரு வார்த்தை சொல்லவேண்டும். 1935-ம் வருஷத்திய இந்தியச் சட்டத்தின்படி இந்தியா இப்பொழுது ஆளப்படுகிறது. அதிகார பீடத்தின் உச்சியில் பிரிட்டிஷ் முடியும், பார்லி மென்டும் இருக்கின்றன. லண்டனில் இந்தியக் காரியா லயம் இருக்கின்றது. அடுத்தாற்போல் பிரிட்டிஷ் வைஸ் ராய். அவர் தன்னிஷ்டப்படி அரசாளலாம். இந்தியாவும் பிரிட்டிஷ் இந்தியா, சமஸ்தான இந்தியா என்று இரண்டு பிரிவாக இருக்கின்றது. பிரிட்டிஷ் இந்தியாவில் காந்தி யும் நேருவும் காங்கிரசும் பிரிட்டிஷாரிடமிருந்து அதிகாரத் தைப் பெறுவதற்காகப் போரிடுகிறர்கள். சமஸ்தான இந்தியா ஏராளமான மகாராஜாக்களால் ஆளப்படுகின் றது. இவர்கள் பிரிட்டன் மேலதிகாரத்துக்கு உட்பட்ட வர்கள். தங்கள் பிரதேசங்களில் பழங்காலத்திய கொடுங் கோலர்களைப்போல ஆண்டு வருகிறர்கள். இந்தியச் சட்டம் சமஸ்தானங்களையும் உட்படுத்தி ஒரு சமஷ்டி அரசியலைக் கொண்டு வந்தது. ஆனல் தற்போதைய யுத்தம் காரணமாக அது நிறுத்தி வைக்கப்பட்டிருக் கின்றது. பிரிட்டிஷ் இந்தியாவில் இந்தியச் சட்டம் அமலுக்கு வந்தது. 1937-ல் விரிவான மாகாண சுயாட்சி ஏற்பட்டது. தேர்தல்கள் நடைபெற்றன. ஜனங்களில் 14 சத விகிதத்தினர் வாக்களித்தனர். பிரிட்டிஷ் இந்தியா விலுள்ள 11 மாகாணங்களில் இந்திய அரசாங்கங்கள் ஏற் பட்டன. இவைகளில் காங்கிரஸ் 8 மாகாணங்களைக் கைப்பற்றியது. முஸ்லிம் பிரதேசங்களான வங்காளம், பஞ்சாப், சிந்து மாகாணங்களில் இதர அரசாங்கங்கள்

ஏற்பட்டன. பிரிட்டிஷ் இந்தியாவில் 11-ல் 8 பாகத்தைக் காங்கிரஸ் ஆளத் தொடங்கியது. இது ஒரு பெரிய வளர்ச்சியாகும். காந்தியின் மகத்தான சட்ட மறுப்பியக்கத்தின் பலனே இது. காங்கிரஸ் அரசாங்கங்களுக்கு விரிவான அதிகாரங்கள் கிடையா. ஆயினும் இது சுய ஆட்சியை நோக்கி உண்மையும் உறுதியுமான முன்னேற்றம் ஆகும்.

1939 பிறந்தது. அதனுடன் புதிய உலக யுத்தமும் வந்தது. உடனே இந்திய நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. இந்தியர்களுக்குக் கடந்த மகா யுத்தம் நினைவுக்கு வந்தது. அந்த யுத்தத்திற்கு 1,215,000 பேரை வெளிநாட்டிற்கு அனுப்பினார்கள். அதில் லட்சம் பேர் மாண்டுவிட்டார்கள். அந்த யுத்தத்திற்கு உதவியதன் காரணமாக அதிகச் சலுகைகள் கிடைக்குமென்று காந்தி எதிர்பார்த்தார். அதற்குப் பிறகு மீண்டும் அந்தமாதிரி தவறு செய்ய மாட்டோம் என்று இந்தியர்கள் சொல்லியிருக்கிறார்கள். தங்களுக்கு வேண்டிய உறுதிப் பொருளான சுதந்தரத்தைக் கொடுப்பதாக வாக்குறுதி அளித்தாலொழியப் புது யுத்தத்தில் பிரிட்டனுக்கு உதவ இந்தியர் மறுத்தார்கள். கடல் கடந்த பிரதேசங்களில் போராடத் தங்கள் மக்களை அனுப்பமுடியாது என்றார்கள். 1935-வது வருஷத்திய சட்டம் இந்தியாவுக்கு ஏதோ அளித்தது. ஆனால் அதுவும் பிரிட்டிஷாருடைய நத்தை வேகத்தை எதிர்த்துப் பல வருஷங்கள் போராடியபின்னரே கிடைத்தது. இப்போதோ இந்தியர்கள் தங்களுக்கு அதிகம் வேண்டும் என்கிறார்கள். அதுவும் இப்பொழுதே.

யுத்தத்திற்குச் சற்று முன்பு இந்தியத் துருப்புக்களை வெளிநாட்டில் சேவை செய்வதற்காகச் சிங்கப்பூருக்கும் எகிப்துக்கும் அனுப்பியபோது நெருக்கடி தோன்றியது. பிறகு செப்டம்பரில் இந்தியாவும் யுத்தத்தில் சேர்ந்துவிட்டதாகப் பிரிட்டிஷ் அரசாங்கம் பிரகடனம் செய்தது. இது சரியா, தப்பா என்று சொல்வதற்கு இந்தியர்களுக்குச்

சந்தர்ப்பம் அளிக்கவில்லை. இந்திய அரசாங்கச் சட்டத்தில் திடீரென மாறுதல்களைச் செய்து வைஸ்ராய் நெருக்கடி கால அதிகாரங்களை மேற்கொண்டார். யுத்தத்திற்கு முன்னால் வேறு எதையும் கவனிப்பதற்கு இல்லை என்று பிரிட்டிஷ் அரசாங்கம் கருதியது. காங்கிரஸ் காரியக் கமிட்டி பாஸிஸ்ட் ஆக்ரமிப்பைக் கண்டிக்கிறது. ஜெர்மெனியை ஆதரிக்கவில்லை. அதே சமயத்தில் பிரிட்டன் யுத்த கால நோக்கங்களையும் சமாதான கால நோக்கங்களையும் தெரிவிக்க வேண்டுமென வற்புறுத்திக் கொண்டிருக்கிறது. சண்டையா, சமாதானமா என்பதை முடிவு கட்ட வேண்டியது இந்தியர்களின் பொறுப்பு என்று அது வற்புறுத்துகிறது. "ஏகாதிபத்திய நோக்கங்களுக்காக" இந்திய வளங்கள் சுரண்டப்படுவதை அனுமதிக்கக் கண்டிப்பாக மறுக்கின்றது. "இந்திய மக்களைக் கலந்துகொள்ளாமல் யுத்தப் பிரகடனம் செய்யப்பட்டிருக்கின்றது. இதனால் பயங்கரமான விளைவுகள் ஏற்படு"மென்று காரியக்கமிட்டி மேலும் கூறுகிறது.

வைஸ்ராய் இந்தியத் தலைவர்களோடு விரிவான பேச்சு வார்த்தைகளைத் தொடங்கினார். காந்தியையும் முக்கியமான முஸ்லிம்களையும் சுதேச அரசர்களையும் இதரரையும் கண்டு பேசினார். நேருவையும் காங்கிரஸ் இடதுசாரிகளையும் கண்டு பேசினார். யுத்த நடவடிக்கைகளில் தனக்கு ஆலோசனை கூறுவதற்காக இந்தியர்களைக்கொண்ட ஒரு ஆலோசனைக் குழுவை ஏற்படுத்தப் போவதாகக் கூறினார். இக் குழுவினர் ஆலோசனை மட்டும் கூறலாம். இவ்விதக் குழுவை ஏற்படுத்துவதன் மூலமாக உடன்பாடு ஏற்படக் கூடுமென்று பிரிட்டிஷார் எதிர்பார்த்தனர். இரண்டு பட்டதும் தனக்கு விசுவாசமற்றதுமான இந்தியாவைக் கொண்டிருப்பது சரி இல்லை என்று நினைத்தார்கள். ஜெர்மெனியை எதிர்த்து உலகப்போராட்டம் நடத்திக்கொண்டிருக்கும்பொழுது இந்தியாவில் உள்நாட்டு யுத்தம் நிகழ்

வது அவர்களுக்கு ஏற்றதில்லை. வைஸ்ராய் சொல்வது சரி என்று அநேக மிதவாதிகள் ஒப்புக்கொண்டார்கள். காங்கிரஸ் அதை ஒப்புக்கொள்ளவில்லை. காங்கிரஸ் அங்கத்தினர்கள் மீண்டும் சட்டமறுப்பு தொடங்குவதைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்கள். நேருவின் தூண்டுதலின் பேரில் காங்கிரஸ் அரசாங்கங்கள் ராஜிநாமாச் செய்தன. இவ்விதமாக, ஒரே நாளில், பதினைந்து வருஷங்களாகப் பாடுபட்டு அமைத்த அரசியல் கட்டிடம் குலுக்கப்பட்டு விட்டது. நெருக்கடி கால அதிகாரங்களை மேற்கொண்டு பிரிட்டிஷ் கவர்னர்கள் பழங்கால அரசியல் முறையை மேற்கொண்டார்கள்.

நேருவைப்போன்ற ஒருவர் இந்தியக் கட்சியை எடுத்துச் சொன்னால் அதில் இரண்டு விஷயங்கள் சுட்டிக் காட்டப்பட்டிருக்கும். பிரிட்டன் செய்த நன்மையெல்லாம் கவனிக்கப்படமாட்டாது. இந்தியா உள்பட ஒவ்வொரு தேசத்துக்கும் சுதந்தரம் பிறப்புரிமை என்பதையும், பிரிட்டன் இந்தியாவில் இருப்பதற்கு அது இந்தியாவை ஜயித்த உரிமை தவிர வேறு உரிமை இல்லை என்பதையும் அவர் எடுத்துக் கூறுவார். அமெரிக்க ஐக்கிய மாகாணங்களை ஜப்பான் கைப்பற்றி ஆண்டால் எப்படியிருக்கும் என்ற உதாரணம் காட்டப்படும். அமெரிக்க ஐக்கிய மாகாணங்கள் பலஹீனம் அடைந்து தங்களுக்குள் சண்டைபோட்டுக் கொண்டிருக்கின்றன என்று வைத்துக்கொள்வோம். நெடுந்தொலைவிலுள்ள ஜப்பான் தீவிலிருந்து வந்த இவர்கள் அமெரிக்காவில் படை எடுத்து, அமைதியை நிலை நாட்டி, அங்குள்ள அதிகாரிகளோடு உடன்படிக்கைகள் செய்து கொண்டு, நாட்டில் தங்களது ராணுவத்தையும் வைத்துக் கொள்கிறார்கள். அமெரிக்கர்களுக்கு ஓரளவு சுயாட்சியும் தருகிறார்கள். வாஷிங்டனில் ஜப்பானியக்கொடி பறக்கிறது. ஜப்பானிய வைஸ்ராய்களே வெளிநாட்டு விவகாரம், பொருளாதாரம், சட்ட ஒழுங்கு ஆகியவைகளுக்கு ஜவாப்தாரி

களாக இருக்கிறார்கள். ஜப்பானியர்கள் அமெரிக்காவின் பிரம்மாண்டமான பொருளுற்பத்தி வருமானத்தையும் தேசிய வருமானத்தையும் கரந்துகொள்கிறார்கள். தேசியக் கல்வியைப் புறக்கணிக்கிறார்கள். ஜப்பானியர்களுக் கென்றே உயர்ந்த சங்கங்களை அமைக்கிறார்கள். அதில் அமெரிக்கர்கள் யாரும் நுழைய முடியாது. தன் நாட்டுக்குத் துரோகம் செய்து ஜப்பானியர்களுக்கு ஆதரவளிக்கின்ற வர்களுக்கு உயர்ந்த பதவிகளைக்கொடுத்து, அவர்களைத் தங்களுடைய பொம்மைகளாக வைத்துக்கொள்ளுகிறார் கள். அமெரிக்கா முழுதும் கடுமையான ஜப்பானிய சிவில் அதிகாரிகளை ஏற்படுத்துகிறார்கள். இப்படியெல்லாம் இருக் கிறதாக வைத்துக்கொள்வோம். இவ்விதமான நிலைமையில் ஜப்பான் எந்தத் தேசத்தோடாவது சண்டையில் மாட்டிக் கொண்டால், உதாரணமாகப் பிரிட்டனோடு சண்டையிடத் தொடங்கினால், ஜப்பானியப் பிரஜைகளான அமெரிக்கர் கள் ஜப்பானுக்கு விசுவாசமாக இருப்பார்களா, இருக்க மாட்டார்களா?

இந்தியாவில் பிரிட்டிஷார் அனுஷ்டிக்கும் கொள் கையை ஒரு வாக்கியத்தில் சொல்லலாம். பின்னால் எப் பொழுதோ ஒரு காலத்தில் சுய ஆட்சியை நோக்கிக் குடி யேற்ற நாட்டு அந்தஸ்தும் இன்னும் சில முன்னேற்றமும் கொடுப்பதுவே பிரிட்டிஷ் கொள்கை. இந்தியத் தேசிய வாதிகளின் கட்சியையும் சுருக்கமாகக் கூறிவிடலாம். இப் பொழுது கிடைப்பதை உடனே பெற்றுக்கொண்டு, எவ் வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் பிரிட்ட னிடமிருந்து பூரண விடுதலையைப் பெறவேண்டும்.

நேருவின் கூட்டத்தைச் சேர்ந்த ஒரு இந்தியத் தேசிய வாதிக்கும் ஆங்கிலேயனுக்கும் பின்வரும் மாதிரி ஒரு சம்பாஷணை நடக்கலாம்.

**ஆங்கிலேயன்:** உங்களுக்கு ரஸ்தாக்கள், நீர்ப்பாசன வசதிகள், பெரிய ரயில்வேமுறை, அரசியல் ஒற்றுமை,

பொதுஜன சுகாதாரம், சட்டம், அமைதி, ஒழுங்கு வாய்ந்த ஆட்சி இவற்றை நாங்கள் தான் கொண்டு வந்தோம்.

**இந்தியன் :** அடிப்படைப் பிரசினைக்கும் அதற்கும் சம்பந்தமில்லை. இந்தியா எங்களுடையதே தவிர உங்களுடையது இல்லை என்பதே அடிப்படையான பிரசினை. நல்லதோ பொல்லாதோ எங்களுக்காக நீங்கள் எதுவும் செய்ய உரிமை கிடையாது. நீங்கள் உரிமை கொண்டாடும் நியாயத்தை ஏற்கமாட்டோம். நீங்களும் சீர்திருத்தம் செய்திருக்கலாம். ஆனால் இந்தியா எங்களது நாடு, பிரிட்டிஷாருடையது அன்று; நாங்கள் பிரிட்டிஷ் ஆட்சியையும் விரும்பவில்லை என்ற அடிப்படை உண்மைக்கும் உங்கள் சீர்திருத்தத்திற்கும் சம்பந்தமில்லை.

**ஆங்கிலேயன் :** பொதுஜனக் கல்விக்காக நாங்கள் மிகவும் பாடுபட்டிருக்கிறோம். நீங்கள் எப்பொழுதுமே அவ்வளவு செய்ததில்லை.

**இந்தியன் :** இருந்தாலும் நீங்கள் ஒரு நூற்றாண்டுக்கு மேல் இருந்திருக்கிறீர்கள். பின்னும் இந்தியாவில் எழுப்படிக்கத் தெரியாதவர் 86 சதவீதம் இருக்கின்றனர்.

**ஆங்கிலேயன் :** ஹிந்து முஸ்லிம் பிரசினை, கல்விப் பிரசினையைவிடக் கடும் ஆழமாக இருக்கிறது. உங்கள் சொந்த மத வழக்கங்களே கல்வி பரவுவதைச் சாத்தியமில்லாது செய்து விடுகின்றன. உங்களுடைய சிறுவர்களையும் சிறுமிகளையும் ஒரே வித ஆரம்பப் பள்ளிகளில் படிக்கவிடமாட்டீர்கள். ஹிந்து முஸ்லிம்களுக்குச் சேர்ந்து பள்ளிக்கூடங்கள் வைக்கும் நோக்கம் சாத்தியமற்றது.

**இந்தியன் :** நீங்கள் இங்கேயே இருந்து அதிகாரம் செய்ய நினைக்கிறீர்கள். இதற்குச் சாக்காக ஹிந்து-முஸ்லிம்

பிணக்கை நீங்களே தூண்டிவிடுகிறீர்கள். இந்த நாட்டில் 240,000,000 ஹிந்துக்களும் 77,000,000 முஸ்லிம்களும் இருக்கிறார்கள். ஜனநாயகக்கொள் கைகளுக்கேற்ப பெரும்பாலோரின் அபிலாஷைகளே நிறைவேற்றப்படவேண்டும். ஆனால் இந்தியக் காங் கிரஸோ, முஸ்லிம்களுடையனவும் இதர மதக் குழு வினருடையனவுமான உரிமைகளைப் பாதுகாக்கத் தயாராக இருக்கிறது. அநேக காங்கிரஸ்காரர்கள் முஸ்லிம்கள். மதபேதமின்றி எல்லா இந்தியர்களுக் கும் சம உரிமைகள் அளிக்கப்படுவதை நம்புகிறோம். பிரிட்டிஷாரின் பிரித்தாளும் சூழ்ச்சியே இப்பிர சினைக்குத் தூபம்போட்டுவைத்துக்கொண்டிருக்கிறது.

**ஆங்கிலேயன் :** நாங்கள் இந்தியாவைவிட்டு அகன்றால் உங்கள் நாட்டை யாரேனும் தாக்கலாம், கொள்ளை யடிக்கலாம், கைப்பற்றி விடலாம்.

**இந்தியன் :** அப்படியா? வாஸ்தவம்தான். ஏனென்றால் எங் களுக்கு ஒரு சரியான தேசியராணுவத்தை அமைத்து விட்டால் அது உங்கள்மீது திரும்பிவிடும் என்று பயந்து கருத்தாக அதைத் தடுத்துவிட்டீர்கள். பொரு ளாதாரத்திலும் உடலிலும் எங்கள் மக்களை க்ஷீணிக் கச் செய்தீர்கள். ஆகவே அவர்களிடம் போராட்ட உணர்ச்சி இருப்பதாகவே தெரியவில்லை. ஆனால் ஒரு பத்து வருடங்கள் கொடுங்கள். மேலும் அவர் களுக்குக் கல்வி தந்து, உணவளித்து, பயிற்றுவிக்கச் சந்தர்ப்பம் கொடுங்கள். மறைந்திருக்கும் எங்கள் தேசிய உணர்ச்சி வெளிப்படும். 35 கோடி மக்களின் தேசியராணுவத்தை நாங்கள் படைக்க முடியும். அது எந்த ஆக்ரமிப்பையும் தடுக்கக்கூடிய சக்தி வாய்ந்த ராணுவமாக இருக்கும். அத்தகைய ராணு வத்தை எங்களால் படைக்க முடியும் என்பதை நம்புங்கள்.

**ஆங்கிலேயன் :** உங்களுக்குக் குடியேற்ற நாட்டு அந்தஸ்து அளிப்பதாக வாக்குறுதி செய்திருக்கிறோம். கனடாக்காரர்களுக்கும் நியூஜீலந்துக்காரர்களுக்கும் அதுபோதுமானதாக இருக்க, நீங்கள் மட்டும் ஏன் அதிகமாக ஆசைப்படுகிறீர்கள்?

**இந்தியன் :** ஏனென்றால் நாங்கள் இந்தியர்கள். இதரக் குடியேற்ற நாடுகளில் வாழ்வோர் போல நாங்கள் ஆங்கிலோ-ஸாக்ஸனியர்கள் இல்லை.

**ஆங்கிலேயன் :** பூரண சுதந்திரத்துக்குப் பதிலாகக் குடியேற்ற நாட்டு அந்தஸ்து மட்டும் கொடுக்க நாங்கள் வாக்குறுதி அளிப்பதன் இன்னொரு காரணம், எங்களுக்கும் இந்தியச் சிற்றரசர்களுக்கும் உள்ள உடன்படிக்கை உறவு. அவர்களது வரையறுக்கப்பட்ட அரசுரிமையைப்பாதுகாப்பதாக உறுதிமொழிதந்திருக்கிறோம். அவர்கள் பிரிட்டிஷ் இந்தியாவைச் சேர்ந்தவர்கள் அல்லர். அவர்களது சமஸ்தானப் பிரதேசங்கள் இந்தியாவில் 41 சதவீதம் இருக்கின்றன. பூரண விடுதலைக்குப் பின் உங்களுடன் ஒத்துழைக்க அவர்கள் மறுக்கலாம். அப்பொழுது உள்நாட்டு யுத்தம் ஏற்படக்கூடும். அவ்வாறு நிகழும்படி விட நாங்கள் தயாராக இல்லை.

**இந்தியன் :** சமஸ்தானங்கள் எல்லாம் இந்தக் காலத்திற்கு ஒவ்வாத மானியங்கள். சமஸ்தான அரசர்கள் தங்கள் குடிகளின் வாழ்வைக் கொடுக்கவோ எடுக்கவோ முடியும். இவ்வளவு அதிகாரம் படைத்த அரசர்களைத் தற்கால உலகில் வேறெங்கும் காண முடியாது. இந்தியர்களாகிய நாங்கள் ஜனநாயக வாதிகள். சுதேச சமஸ்தானங்களிலுள்ள ஜனங்களைப்பற்றித்தான் எங்களுக்குக் கவலையே தவிர, அங்குள்ள மகாராஜாக்களைப்பற்றி அல்ல. பிரிட்டிஷ் ஆதரவின்றி எந்த மகாராஜாவாலும் பத்து நிமிஷம்

கூட உயிரோடிருக்க முடியாது. ஆனால் உள்நாட்டுப் போரைப்பற்றிய பேச்சே வராது. மக்கள் தாங்களாகவே, காலத்துக்கு ஒவ்வாத இந்த அலங்காரப் பதவிகளை ஒழிப்பதில் எங்களுடன் ஒத்துழைப்பார்கள்.

**ஆங்கிலேயன் :** நாங்கள் இந்தியாவில் வியாபாரத்தில் நிறையப் பணம் போட்டிருக்கிறோம். அநேகமாக 850,000,000 பவுன் இருக்கலாம். அதை இழக்கும் அபாயத்தை ஏற்கமாட்டோம்.

**இந்தியன் :** சட்டரீதியான பாத்தியதைகளை அவமதிக்கவோ அன்றி நிராகரிக்கவோ இந்தியக் காங்கிரஸ் கருதவில்லை. பிரிட்டிஷ் மூலதனம் இந்தியாவிலேயே இருக்கலாமென்று நம்புகிறோம். முன்னைவிட அதிகமாகவே லாபப்பங்குகளும் கொடுப்பார்கள் என்று நினைக்கிறோம். விடுதலை பெற்ற எங்கள் நாட்டில் ஆரோக்கியத்தையும் ஒழுங்கையும் அபிவிருத்தி செய்தோமானால் அதனுடைய கொள்முதல் சக்தியும் வளர்ச்சியடையும்.

**ஆங்கிலேயன் :** உங்களை நீங்களே ஆளுவதற்குத் திறமை இல்லை.

**இந்தியன் :** அதை இனிமேல்தான் பார்க்கவேண்டும். இருந்தாலும் வேறொருவரால் நன்றாக ஆளப்படுவதைவிட எங்களை நாங்களே மோசமாக ஆண்டுகொள்ள விரும்புகிறோம்.

1939-ல் கோடை காலத்தில், யுத்தப் பிரகடனம் வெளியாகுமுன். ஜவாஹர்லால் நேரு சீனாவுக்கு முதன் முதலாகச் சென்றார். அவர் சுங்கிங் விஜயம் செய்து சியாங் கைஷேக்கைப் பார்த்தார். அங்கு அமோகமான அரசாங்க உபசாரத்தைப் பெற்றார். அங்கு அதுவரை எந்த அந்நியருக்குமே அவ்வளவு நல்வரவு அளிக்கப்பட்டதில்லை. அவர் சென்று சேர்ந்த நாளன்று ஜப்பானியரின் கடுமையான விமானத் தாக்குதல் ஒன்று நிகழ்ந்தது.

சியாங் கைஷேக்கும் நேருவும் சடாரென்று பாதுகாப்பிடத்திற்கு ஓட நேர்ந்தது. குண்டுவீச்சுக் கொடூரமாக இருந்ததால் அவர்கள் பல மணிநேரம் அங்கேயே தங்கினர். சியாங்கும் நேருவும் ஒருவரை ஒருவர் நேசித்தனர். மனம் விட்டுச் சிநேகபாவத்துடன் தங்களுடைய பிரசினைகளைப் பற்றிப் பேசினார்கள்.

இதுபற்றிப் பிரிட்டிஷார் சிந்திக்க வேண்டியது அவசியம். இந்தியா எப்பொழுதாவது சுதந்தரம் பெற்று இந்தியாவும் சீனாவும் ஒரே கொள்கையைப் பின்பற்றினால், அப்பொழுது உலகத்திலுள்ள ஜனத் தொகையில் பாதிப் பேர் ஒரேநோக்கோடு ஒருமுகமாக உழைக்கிறார்கள் என்பதுதான் அர்த்தம். இத்தகைய பெரிய ஆசியக் கூட்டு எல்லா அந்நிய அபிலாஷைகளையும் விருப்பங்களையும் தடுப்பதாக இருக்கும். நேருவின் வாழ்க்கையைப் பிரிட்டிஷார் மிக நுணுக்கமாகக் கவனித்துக்கொண்டு வருவதன் காரணம் இதுவே.

இந்திய சுதந்தரப் பாதையில் அடுத்தபடி நேரு என்ன செய்யப் போகிறார் என்பது யுத்தத்தைப் பொறுத்த விஷயம். சட்டமறுப்பு வருமானால், ஒவ்வொரு காங்கிரஸ் தலைவரையும் கைது செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும் பிரிட்டிஷாருக்கு. ஆனால் அத்தகைய காரியம் எதையும் செய்யப் பிரிட்டிஷார் இதய பூர்வமாக வெறுப்பார்கள். காங்கிரசும் சட்டமறுப்பைத் துவக்கவேண்டிய அவ்வளவு தூரத்திற்குப் போக விரும்பவில்லை. ஆனால் ராஜி ஏற்படலாமென்றால் அதுவும் கஷ்டமாக இருக்கிறது. சண்டையா, சமாதானமா என்ற பிரசினையை இந்தியர்கள் தான் தீர்க்கவேண்டும் என்று இந்தியத் தேசிய வாதிகள் சொல்லுகிறார்கள். அவர்கள் பெற்றிருந்த சிறிது சுதந்தரமும் அவர்களிடமிருந்து பறித்துக்கொண்ட பிறகு ஜனநாயகத்துக்காகப் போராடும்படி தாங்கள் நிர்ப்பந்திக்கப் படுவதை அவர்கள் விரும்பவில்லை.

# பழைய நினைவுகள்

விஜயலட்சுமி பண்டிட்

டெலிபோன் மணி அடித்துக் கொண்டிருக்கிறது. பொறுமையற்ற என்னுடைய காதுகளுக்கு விடாப்பிடியாக மணி அடிப்பதும் அதிசயமாக இருக்கிறது. மறுபுறத்திலிருந்து போனில் பேசுகிற குரல் நூதனமானதாகவும் மெதுவானதாகவும் பரிவுள்ளதாகவும் இருக்கிறது. நான்கு வருஷக் கடுங்காவல் என்று அக்குரல் சொல்லவும் எனக்குத் தூக்கிவாரிப் போடுகிறது. தொண்டையை என்னவோ அடைக்கிறது......நெஞ்சிலே கனமான வலி......ஒரு கண நேரம்தான்.

நான் அப்பொழுதுதான் பார்த்துவந்த விசாரணைக் காட்சிகள் என் மனக்கண் முன் வேகமாகப் பாய்கின்றன. அவ்விசாரணை பொய்மையும் மெய்மையுங் கலந்த அதிசயக் கலப்பு—மெய்ப்படுத்துவதற்காகச் செய்த பரிதாப முயற்சிகள் முடிவில் வீணுகின்றன. இப்படி இந்த விசாரணைகள் இரண்டு நாட்களுக்கு இழுத்தடித்தன. சரி, விசாரணைகளும் முடிந்துவிடுகின்றன. கைதி தனது கொட்டடிக்குத் திரும்பச் செல்கிறார். உறுதியான நடையுடன் தலை நிமிர்ந்து அங்கே கூடியிருக்கும் நண்பர்களை நலன் விசாரிப்பதுபோலச் சிரித்துக்கொண்டே செல்கிறார். அந்த மூலை திரும்பி மறைகிறவரையும் பார்த்துக்கொண்டேயிருக்கிறோம்.

பிற்பாடு, அவரைக் கொஞ்ச நேரம் பார்த்துச் செல்ல அனுமதி கிடைக்கிறது. சில வார்த்தைகள் பேசுவதற்கு

மேலே நேரமில்லை. உடல் நலத்தை நன்ருகக் கவனித்துக் கொள் என்று சிரித்துக்கொண்டே சொல்லிய பின் வெளியே கால் எடுத்து வைத்து என்னை நானே தள்ளிக் கொண்டு வருகிறேன். பிறகும் ஒருதடவை, 'போய் வருகிறேன்' என்று கையால் ஜாடை காட்டிச் சொல்லத் திரும்புகிறேன். ஜெயில் கம்பிகளுக்கு அப்பால் அஸ்தமனச் சூரியனின் பொன்னிறக் கதிர் தன் மேனியிற்பட அவர் நிமிர்ந்து நிற்பதைக் காண்கிறேன். அவர் நின்ற தோரணையில் காணப்பட்ட அமைதியான பலம் எனக்குத் தைரியமளித்தது.

# தன் ஓவியம்

*'சாணக்யன்' என்ற புனைபெயரில் பண்டித நேருவே 'மாடர்ன் ரிவியூ' பத்திரிகைக்கு 'ராஷ்டிரபதி' என்று தம்மைப் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்று எழுதினார். பற்றற்ற முறையில் அழகாக அவர் தம் குணாதிசயங்களை எடுத்துக் காட்டியிருக்கிறார், அந்தக் கட்டுரையில். அந்தக் கட்டுரையே இது.*

ராஷ்டிரபதி ஜவாஹர்லால் கி ஜே! காத்துக்கொண்டிருக்கிற கூட்டங்களுக்கிடையே வேகமாகச் செல்லும்போது ராஷ்டிரபதி நிமிர்ந்து பார்த்தார். கை கூப்பினார். வெளுத்த, கடுகடுப்பான அவர் முகம் சிரித்து மலர்ந்தது. அன்பு கலந்த பிரியச் சிரிப்பு அது. அதைப் பார்த்த ஜனங்கள் உடனே சிரித்து ஆரவாரம் செய்தனர்.

சிரிப்பு மறைந்துவிட்டது. மீண்டும் முகத்தில் கடுகடுப்பு, கவலை. ஜனத்திரளில் தான் எழுப்பிய உணர்ச்சி வெள்ளத்தாலும் ஊடுருவிப் பாயமுடியாதபடி அவர் முகத்தோற்றம் இறுகிவிட்டது. அந்தச் சிரிப்பும் பாவனையும் அனேகமாகப் பொய்யோ என நினைக்கும்படியாயிற்று. ஜனங்களின் செல்லப்பிள்ளை ஆகிவிட்டாரே, அவர்களுடைய நல்லெண்ணத்தைச் சம்பாதிப்பதற்குக் கையாளும் வெறும் தந்திரங்கள் இவை, என்ன? அப்படித்தானா?

மறுபடியும் அவரைக் கவனியுங்கள். பிரம்மாண்டமான ஊர்வலம். லக்ஷக்கணக்கான மக்கள் அவருடைய காரைச் சூழ்ந்துகொள்கிறார்கள். ஆனந்த மேலீட்டால் ஆரவாரம் செய்கிறார்கள். காரின் ஆசனத்தில் அசையாமல்

நன்ருக நிமிர்ந்து நிற்கிருர். நேராக நிமிர்ந்து, வளர்த்தியாக, கடவுள்போலச் சிறிதும் அசையாமல், சூழ்ந்துள்ள ஜன சமுத்திரத்தால் பாதிக்கப்படாதவர்போல நிற்கிருர். மறுபடியும் திடீரென்று அந்தப் புன்முறுவல், பலத்த சந்தோஷச் சிரிப்பு. கடுகடுப்பு மறைந்தது போலத்தோன்றுகிறது. கூட்டமும் அவரோடு சேர்ந்து சிரிக்கிறது, ஏன் சிரிக்கிருேம் என்பது தெரியாமல். இப்பொழுது அவர் ஒன்றும் கடவுளாக இல்லே. தன்னேச் சூழ்ந்துள்ள ஆயிரக் கணக்கானமக்களோடு தன்னேயும் ஒருவனுக எண்ணுகிருர். கூட்டம் மகிழ்ச்சியடைகிறது. நட்புக்கொள்கிறது. அவரை மனப்பூர்வமாக நேசிக்கிறது. ஆனுல் அதோ, சிரிப்பு மறைந்துவிட்டது. மீண்டும் அதே வெளுத்த, கடுகடுப்பான முகம்.

இதெல்லாம் இயற்கையா? அல்லது பொதுக் காரியங்களில் ஈடுபட்ட மனிதரின் சாமர்த்தியச் செயல்களா? ஒருகால் இரண்டுமாக இருக்கலாம். நெடுங்காலப் பழக்கம், இப்பொழுது இயற்கைக்கு அடுத்ததாகிவிட்டது. வெளிப் பார்வைக்கு நன்ருகத் தோன்ற வேண்டுமென்ற எண்ணமும் முயற்சியும் இல்லாதிருப்பதே நல்ல தோற்றத்தைக் கொடுக்கும். ஜவாஹர்லால் அந்தப் பயிற்சியில் கைதேர்ந்தவராக இருக்கிருர். பொதுக் கூட்டங்களுக்கு மத்தியில் அனுயாசமாயும் அலட்சியமாயும் நடிப்பதில் வல்ல கலேஞுக இருக்கிருர். இது அவரையும் நாட்டையும் எங்கே கொண்டுபோய் விடப்போகிறது? வெளிப்பார்வைக்கு நோக்கமொன்றும் இல்லாதவராக நடித்தாலும், அந்தரங்கத்தில் எதைக் குறி வைத்துக்கொண் டிருக்கிருர்? இந்த வெளி வேஷத்துக்கு அடியில் என்ன எண்ணம் மறைந்திருக்கிறது? என்ன ஆசைகளோ? என்ன அதிகார இச்சையோ? என்ன தீராத பேர் அவாக்களோ?

எப்படியாலுைம் சரி, இந்தக் கேள்விகள் சுவாரஸ்யமானவை. ஏனென்ருல் நம்முடைய விருப்பத்தையும் கவ

னத்தையும் இழுக்கும் மனிதராக ஜவாஹர் இருக்கிறார். அது மாத்திர மல்ல. நமக்கு இக் கேள்விகள் பெரிய விஷயங்கள். அவர் தற்கால இந்தியாவோடும் சரி, ஒருகால் வருங்கால இந்தியாவோடும் சரி, இணைக்கப்பட்டிருக்கிறார். மேலும் அவர் இந்தியாவுக்குப் பெருத்த நன்மையோ அல்லது தீமையோ செய்யக்கூடியவர். ஆகையால் நாம் இந்தக் கேள்விகளுக்குப் பதிலைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

சென்ற இரண்டு வருஷகாலமாக அவர் காங்கிரஸ் தலைவராக இருந்திருக்கிறார். காங்கிரஸ் காரியக் கமிட்டியில் மற்றவர்களுக்கு அடங்கிக்கிடக்கிறார் என்றும், அங்கு இவருக்குச் செல்வாக்கில்லை யென்றும் சிலபேர் நினைக்கிறார்கள். ஆனால் பாமர மக்களிடையேயும் எல்லாவிதக் கோஷ்டிகளிடையேயும் தனது அதிகாரத்தையும் செல்வாக்கையும் உறுதியாகவும் விடாப்பிடியாகவும் வளர்த்துக்கொண்டே போகிறார். விவசாயி, பாட்டாளி, ஜமீன்தார், முதலாளி, வர்த்தகன், சுமந்து சென்று விற்போன், பிராமணன், தீண்டாதான், முஸ்லிம், சீக்கியன், பார்சி, கிறிஸ்தவன், யூதன்—இன்னும் இந்திய வாழ்வுக்குப் பல வண்ணங்களையும் கொடுக்கும் எல்லோரிடமும் செல்கிறார். அவர்களைத் தன் பக்கத்திற்கு இழுப்பதற்காகக் கொஞ்சம் வித்தியாசமான பாஷையைப் பேசுகிறார். அவர் வயதுக்கு ஆச்சரியப் படத் தகுந்த ஊக்கத்துடன் இந்தப் பரந்த நாடு முழுதும் வேகமாய்ப் பாய்ந்து சுற்றி வந்திருக்கிறார். எங்கும் அபரிமிதமான வரவேற்புக் கிடைத்திருக்கிறது. வட இமயம் முதல் தென் குமரிவரை வெற்றிவாகை சூடி, சீஸர்போலச் சென்ற இடமெல்லாம் சீர் பரப்பி வந்திருக்கிறார். இதெல்லாம் அவருக்குக் கொஞ்சநேரத் தமாஷ் பொழுது போக்கா? அல்லது யோசனை பண்ணி, வைத்துள்ள திட்டத்தின் பகுதியா? அல்லது அவராலும் அறியமுடியாத ஏதோ ஒரு சக்தியின் ஆட்டமா? தன் சுய சரித்திரத்தில். அவரைக் கூட்டத்துக்குக் கூட்டம் நாடிச் செலுத்தி, பிறகு,

"இம்மனித அலைகளை என் கைக்குள் வர
இழுத்து என் இச்சையை நான் ஆகாயத்திலே
நட்சத்திரங்களாக எழுதி வைத்தேன்"

என்று தனக்குத்தானே ரகசியம் பேசும்படி செய்கிறதான அதிகார இச்சை என்று குறிப்பிடுகிறாரே அதுதானா?

இந்த விளையாட்டு வினையாகி விட்டால் என்ன பண்ணுவது? ஜவாஹரைப்போல அரும்பெருங் காரியங்களையும் நல்ல காரியங்களையும் செய்யும் திறமை உள்ளவர்கள் ஜனநாயகத்துக்கு ஆபத்தானவர்கள். அவர் தன்னை ஒரு ஜனநாயக வாதி என்றும் சோஷலிஸ்டு என்றும் கூறிக்கொள்ளுகிறார். எப்படியிருந்தாலும் கடைசியில் உள்ளம் ஆசைக்கு அடிமையாகிவிடுகிறது. ஆசைகளும் அடக்க முடியாத மனத் தூண்டுதல்களும் நியாயத்துக்குப் பொருத்தமுள்ளனவாக ஆக்கப்பட்டுவிடுவது சகஜம். மனத் தத்துவத்தை அறிந்த அத்தனை பேருக்கும் இது தெரிந்த விஷயமே.

அவருடைய மனப்போக்கு இலேசாகத் திரும்பவேண்டியது, அவ்வளவுதான். மெதுவாக ஊர்ந்து செல்லும் ஜனநாயக சாதனத்தைத் தூக்கி யெறிந்துவிட்டு ஜவாஹர் சர்வாதிகாரியாக மாறிவிடுவார். அதற்கப்புறமும் அவர் ஜனநாயகம், சோஷலிஸம் என்ற சொற்களைக் கையாளலாம். ஆனால் பாசிஸம் எப்படி ஜனநாயகப் பேச்சுக்களைப் பேசியே வலுவடைந்து அதன் பின்பு அதை உதவாக்கரை யென்று உதறி யெறிந்தது என்பதை நாம் நன்கு அறிந்திருக்கிறோம்.

இயல்பிலேயோ அல்லது நம்பிக்கையிலேயோ ஜவாஹர்லால் நிச்சயமாக ஒரு பாசிஸ்டு அல்லர். பாசிஸத்திலே முரட்டுத்தனமும் மூர்க்கத்தனமும் உள்ளன. அவ்வளவு கீழ்மைக்குப் போகமுடியாதபடி உயர்ந்த பிரபுவம்சத்தைச் சேர்ந்தவர் நேரு. "தனியான இடங்களில் காணப்படும் நடிப்பு முகங்களைக் காட்டிலும், பொதுவான இடங்களில்

காணப்படும் இயல்பு முகங்கள் தேவலை" என்பதை அவருடைய முகமும் குரலுமே சொல்லுகின்றன.

பாசிஸ்டு முகம் நடிப்பு முகம். பொது இடத்திலும் சரி, தனி இடத்திலும் சரி, அது மகிழ்ச்சி தரும் முகமில்லை. ஜவாஹர்லாலின் முகமும் குரலும் நிச்சயமாக இயல்பானவை. கூட்டங்களிலும் சந்தேகமில்லாமல் அப்படித்தான் இருக்கின்றன. பொதுக்கூட்டங்களில் அவர் பேசும்போது ஒவ்வொரு மனிதனிடத்திலும் தனியாக அவனை வீட்டிலே சந்தித்துப் பேசுகிறமாதிரி பேசுகிறார். அந்தக் குரலைக் கேட்கும்போதும் அந்த உணர்ச்சி மிகுந்த முகத்தைப் பார்க்கும்போதும், அவைகளுக் கடியில் என்ன என்ன எண்ணங்கள், ஆசைகள் மறைந்து கிடக்கின்றனவோ? என்ன அதிசயச்சிக்கல்களோ?என்ன தூண்டுதல்கள் அகப்பட்டுக் கிடக்கின்றனவோ? என்ன ஆவேசங்கள் அடக்கப்பட்டு நல்வழியில் திருப்பப்பட்டிருக்கின்றனவோ? அவர்கூட ஒப்புக் கொள்ளாத என்ன அவாக்களோ? இவ்வாறு நமக்குச் சிந்தனை ஓடுகிறது. மேடையில் பேசும்போது, தொடர்ச்சியாகப் பாயும் தனது எண்ணங்களில் அவர் ஈடுபட்டு விடுகிறார். மற்ற நேரங்களில் அவரைப் பார்த்தால், 'அவர் தானா இவர்?' என்றாகிவிடுகிறது. அவருடைய மனம் எங்கெங்கேயோ கற்பனையில் நீந்த ஆரம்பித்துவிடுகிறது. அந்த க்ஷணத்திலே தன் நண்பனை மறந்துவிடுகிறார். கற்பனை மனிதர்களுடன் மனத்துக்குள்ளேயே பேசத் தொடங்கி விடுகிறார். தனது வாழ்க்கைப் பிரயாணத்திலே, கடுமையும் புயலுமான தனது வாழ்க்கைப் பிரயாணத்திலே, தான் இழந்த மனிதத் தொடர்புகளைப்பற்றி நினைக்கிறாரோ? அவற்றுக்காக ஏங்குகிறாரோ? தன்னிச்சைக்குகந்த வருங் காலத்தைக் கனவு காண்கிறாரோ? அல்லது தான் விரும்புகிற போராட்டங்களையும் வெற்றிகளையும் கனவு காண்கிறாரோ? தான் தேர்ந்தெடுத்த பாதையில் போகும்போது, சாலையில் ஒதுங்கி ஓய்வெடுத்துக்கொள்ளுதல் என்பது

அவருக்கில்லை என்பதையும் வெற்றியோடு பின்னும் அதிகப் படி சுமைகளைச் சுமக்க நேரிடும் என்பதையும் அவர் அறிந்திருக்கவேண்டும். அராபியர்களுக்கு லாரென்ஸ் கூறியது போல :

'கலகஞ் செய்பவர்களுக்கு ஓய்வெடுத்துக் கொள்ளச் சாவடி கிடையாது, வருகிற சந்தோஷத்திலோ பங்கு போட்டுக் கொடுப்பதென்பதும் கிடையாது.'

சரி, மகிழ்ச்சி என்பது அவருக்கில்லாமல் போகலாம்—விதியும் அதிர்ஷ்டமும் அவர் பக்கம் அன்பாக இருந்தால் மகிழ்ச்சி அடைவதைக் காட்டிலும் மேலான வாழ்க்கை லட்சியம் நிறைவேறுவதாக இருக்கலாம்.

ஜவாஹர்லால் பாசிஸ்டு ஆக முடியாது. ஆனால் அவரைச் சர்வாதிகாரி யாக்குவதற்குரிய சகல சௌகரிய சந்தர்ப்பங்களும் இருக்கின்றன. பெரும்புகழ், சரியான நோக்கத்தின்பால் திருப்பப்பட்ட மன உறுதி, ஊக்கம், கர்வம், ஸ்தாபன அமைப்புத் திறமை, வல்லமை, திடம், கூட்டங்களைக் கண்டு எவ்வளவுதான் அன்பு காட்டினாலும் கூடவே உள்ள சகிப்பில்லாத தன்மை, பல ஹீனத்தையும் திறமையின்மையையுங் கண்டால் வெறுப்பது ஆகிய குணாதிசயங்கள் அவரிடம் இருக்கின்றன. அவர் முன்கோபி என்பது எல்லோருக்கும் தெரியும். கோபத்தை வெளிக் காட்டாமல் அடக்கிவிட்டால் கூட, துடிக்கும் உதடுகள் கோபத்தை வெளிக் காட்டிவிடும். காரியங்களை உடனே சாதித்து முடிக்கவேண்டுமென்னும் அளவு கடந்த அவருடைய ஆசையும், தான் வெறுப்பவைகளை உடனே அழித்து வேறு புதிதாகக் கட்டவேண்டுமென்ற அவருடைய அவாவும், மெதுவாக நகர்ந்து செல்லும் ஜனநாயக முறையைச் சகித்துக்கொண்டிரா. ஜனநாயக அமைப்பை அவர் அப்படியே வைத்துக்கொள்ளலாம். ஆனால் அது தன்னிச்சைப்படி நடக்கும்படி வளைத்துவிடுவார். சாதாரணக் காலங்களில் அவர் நிர்வாகக் காரியங்களைத் திறமை

யாகவும் வெற்றிகரமாகவும் செய்து முடிக்கலாம். ஆனால் புரட்சிகரமான இக்காலத்திலே சர்வாதிகாரத்தனம் வெகு சமீபத்திலே நெருங்கியே இருக்கிறது. ஜவாஹர்லாலும் தன்னைச் சீஸர் என்று நினைக்காமல் போய்விடுவாரா?

அதில்தான் ஜவாஹருக்கும் இந்தியாவுக்கும் ஆபத்திருக்கிறது. சர்வாதிகாரத்தனத்தினால் இந்தியா விடுதலையடையாது. நன்மையும் திறமையும் கூடிய சர்வாதிகார ஆட்சியால் இந்தியா சிறிது செழித்தாலும், ஓங்கி வளராது குறுகிவிடும். இந்திய மக்களின் விடுதலை நாளும் தாமதித்து விடும்.

இரண்டு வருஷங்கள் சேர்ந்தாற்போல ஜவாஹர்லால் காங்கிரஸ் தலைவராக இருந்திருக்கிறார். சில வகைகளில் தன்னை ஒரு அவசியமான மனிதராகவும் ஆக்கிக்கொண்டிருக்கிறார். ஆகவே அவரையே மூன்றாவது தடவையும் தேர்ந்தெடுக்கவேண்டும் என்று யோசனை கிளம்புவதாகத் தெரிகிறது. ஆனால் இதைக்காட்டிலும் இந்தியாவுக்கோ நேருவுக்கோ பெரிய அக்கிரமச்செயல் இருக்காது. அவரை மூன்றாது முறையாகவும் தேர்ந்தெடுப்பதன்மூலம் காங்கிரஸின் செல்வாக்குக்குப் பாதகம் ஏற்படும்படியாக நாம் ஒரு தனிமனிதனை உயர்த்திவிடுகிறோம். சர்வாதிகாரியென்று ஜனங்கள் நினைக்கும்படி செய்து விடுகிறோம். ஜவாஹர்லாலிடம் உள்ள தவறான குணங்களுக்குத் தூபம் போட்டு விடுகிறோம். அவருடைய வீண் பெருமையையும் அகங்காரத்தையும் அதிகப்படுத்துகிறோம். நாம் தான் இந்தியாவின் சுமையைத் தாங்கமுடியும் அல்லது இந்தியப் பிரசினைகளைத் தீர்க்கமுடியுமென்ற நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டுவிடும். பதவிமோகம் கிடையாதென்று வெளியில் காட்டிக்கொண்டாலும் கடந்த பதினேழு வருஷங்களாக அவர் காங்கிரஸில் முக்கியப் பதவிகளில் இருந்திருக்கிறார் என்பதை நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். நம்மாலேதான் எல்லாம், நாமில்லாவிட்டால்

ஒன்றும் நடக்காதென்று அவர் நினைத்துக்கொள்வர். எந்த மனிதனும் இந்த மாதிரி நினைக்கும்படி விடக்கூடாது. சேர்ந்தாற்போல மூன்றும் தடவையும் அவரைக் காங்கிரஸ் தலைவராக வைத்துக்கொள்ள இந்தியாவால் இயலாது.

அவரைப்பற்றிய சொந்தக் காரணம் ஒன்றும் இருக்கிறது. என்னவோ தீரமாகப்பேசினாலும்கூட ஜவாஹர் அலுத்துச் சலித்துப்போயிருக்கிறார். மீண்டும் தலைவரானால் வரவர மோசமாகிவிடுவார். அவரால் முழு ஓய்வெடுத்துக் கொள்ள முடியாது. புலியின்மீது சவாரி செய்கிறவன் இறங்க முடியாதல்லவா? ஆனால் அவர் தவறாகப் போகாதபடி நாம் தடுக்கலாம். அதிகமான சுமைகளையும் பொறுப்புகளையும் அவர்மீது சுமத்தி அவருடைய மனத்திறமையைக் குறைக்காமல் இருக்கலாம். வருங்காலத்தில் அவரிடமிருந்து நல்ல வேலையை எதிர்பார்க்க நமக்கு உரிமையிருக்கிறது. அவரை அனாவசியமாகப் போற்றிப் புகழ்வதன் மூலம் அதை நாம் கெடுத்துக்கொள்ள வேண்டாம். அவரையும் கெடுத்துவிடவேண்டாம். அவருடைய வீண் பெருமையோ இப்பொழுதே போதும் போதுமென்ற அளவில் இருக்கிறது. அதைத் தடுக்க வேண்டும். நமக்குச் சர்வாதிகாரிகள் தேவை இல்லை.